என்றும் உங்களுடன்

# மங்கையர் மலர்

லை 2010 MANGAYAR MALAR 256 பக்கங்கள் ரூ.20/-



இணைப்பு

கோயில்
சிறப்பு
64!



## நீங்க வைர மங்கையா?

சிறப்பு சந்தா திட்டம் உள்ளே...




# தெள்ளத் தெளிவானது. ஒளிவு-மறைவு எதுவும் இதில் இல்லை.



**டாபர் ஹனி - எல்லாவற்றையும் விட சுத்தமான, மிகவும் தெள்ளத் தெளிவான* மற்றும் தூய்மையான* தேன்.**

ஆம், கண்டிப்பாக அப்படித்தான் இருக்க வேண்டும். காரணம், டாபர் ஹனியின் ஆதாரம் பண்டைய சுந்தர்பன்ஸ் காடுகள் மற்றும் இமாலயத்திலிருந்து பெறப்படுகிறது. அது தேனின் இயற்கை நற்பண்புகளை அதன் தெளிவான, சுத்தமான வடிவில் கொண்டு வருகிறது. பிறகு இந்த தேன், அதன் தூய்மையை உறுதியாக்கும் பொருட்டு ஒரு அதிநவீன ஏழு கட்ட பிராஸஸிங்கு உட்படுத்தப்படுகிறது. இதன் விளைவாக எந்த அசுத்தமும் இதில் இருப்பதில்லை. ஆகவே டாபர் ஹனி வாங்குங்கள். உங்கள் குடும்பத்தினர் இயற்கையின் அதிசய உணவை அதன் தூய்மையான, சுத்தமான, தெள்ளத் தெளிவான வடிவில் சுவைத்து மகிழச் செய்யுங்கள்.

**டாபர் ஹனி. ஆரோக்கியமானது, சுவை நிரம்பியது.**



உள்ளே...

# இதெல்லாம் புதுசுங்க!










## சந்தித்தோம்... சிந்தித்தோம்... சந்தோஷித்தோம்! 98

# நீங்க வைர மங்கையா?

## -சிறப்பு சந்தா திட்டம் 188









என்றும் உங்களுடன்

# மங்கையர் மலர்

தரத்திலும் நம்பர் 1 மகளிர் மாத இதழ்!

மலர் : 30 இதழ் : 6 ஜீலை 2010

Amla Nelli Hair Oil

Dabur

"கருப்புதான் அழகு!"

- நடிகை சினேகா.

## சினேகா அவர்கள் எந்தத் தேங்காய் எண்ணெய் உபயோகிக்கிறார்?

சினேகா சிரித்துக் கொண்டே "தேங்காய் எண்ணெய்யா? அதைவிட்டு நான் எவ்வளவோ நாள் ஆச்சு. நான் டாபர் ஆம்லா நெல்லி ஹேர் ஆயில் மட்டுமே உபயோகிக்கிறேன்".

சாதாரணத் தேங்காய் எண்ணெய்யால் இத்தகைய கண்கவடானக் கருப்பழகை தர முடியாது. டாபர் ஆம்லா நெல்லி ஹேர் ஆயிலால் அது முடியும். இதில், நூற்றாண்டுகளாக போஷாக்கைத் தரும் நன்மை உள்ளது. இது கண்கவடானக் கருப்பழகைப் பெற உதவுகிறது".



டாபர் ஆம்லா நெல்லி ஹேர் ஆயில், கூந்தலை வெயில், மாசு போன்ற கடுமையான பாதிப்புகளிலிருந்து பாதுகாக்கிறது. இல்லையேல் கூந்தல் பொலிவற்றதாகவும், வலுவற்றதாகவும் ஆகிவிடும்.



மொத்தத்தில் டாபர் ஆம்லா நெல்லி ஹேர் ஆயில் கூந்தலுக்கு கண்கவடானக் கருப்பழகையும், உறுதியையும் தருகிறது".

## சினேகா ஏதாவது கேசப் பராமரிப்பு முறையை பின்பற்றுகிறாரா?

"ஆமாம்! தினமும் இரவு ஒரு கையளவு டாபர் ஆம்லா நெல்லி ஹேர் ஆயிலை எடுத்து உச்சந்தலையில் மென்மையாக மசாஜ் செய்வேன். பின்பு முடியின் நுனி முதல் வேர் வரைத் தடவுவேன். முடியை நன்றாக வாரிவிட்டு, பின்னலிட்டுக் கொண்டு தூங்கச் செல்வேன்.

காலையில் மென்மையான ஹெர்பல் ஷாம்புவால் முடியை அலசுவேன். இயற்கையாக கூந்தலை உலரவிட்டு, பின்பு நன்றாக வாருவேன்.

பிறகு சிறிது டாபர் ஆம்லா நெல்லி ஹேர் ஆயிலைத் தடவுவேன். இதனால் என் கூந்தல் பொலிவையும், பளபளப்பானக் கருப்பழகையும் பெறுகிறது."

நீங்களும் இந்த முறையை சில மாத காலம் பின்பற்றிப் பாருங்கள். டாபர் ஆம்லா நெல்லி ஹேர் ஆயிலை தினமும் உபயோகித்து கண்கவடானக் கருப்பழகைப் பெறுங்கள், சினேகாவைப் போல்.






என்றும் உங்களுடன்

# மங்கையர் மலர்

# ஸ்ரீ பாலம் சில்க் சாரீஸ்

Palam

இணைந்து வழங்கும்

**புடவை டிஸைன் போட்டி!**

## டிஸைன் புதுசு... புடவை பரிசு!

“

**அன்புமிக்க கலா ரசிகக் கண்மணிகளுக்கு...**

வணக்கம். மங்கையர் மலர் ஜூன் இதழில், 'டிஸைன் புதுசு... புடவை பரிசு!' என்ற தலைப்பில் புடவை டிஸைன் போட்டி ஒன்றை அறிவித்திருந்தோம் இல்லையா? அடேங்கப்பா! மலை போல் வந்து குவிந்த டிஸைன்களைப் பார்த்து மலைத்தே விட்டேன். எல்லாமே ஒன்றை ஒன்று மிஞ்சும் அற்புத டிஸைன்கள்! விட்டால், புடவையே கூட நெய்து அனுப்பிடுவீங்க போலிருக்கே! எனிவே... உங்க சித்திர ஆர்வத்துக்கு நன்றி கலந்த பாராட்டு!




பாரம்பரியமும் புதுமையும் கலந்த ஒரு போட்டிக்கு, பூரிப்பும், புதுப்பொலிவுமாக நீங்க வரைந்தனுப்பிய டிஸைன்களிலிருந்து, சிறந்த பத்து டிஸைன்கள் தேர்வு செய்யப்பட்டு, தலா ரூ.2500/- பெறுமானமுள்ள 'பாலம் சில்க்ஸ்' பரிசுக் கூப்பன் அன்பளிப்பாகத் தரப்படும். ஆகஸ்டு மங்கையர் மலர் இதழில் வெளியாகும் போட்டி முடிவில் அந்தப் பத்து டிஸைன்களும், பிரத்யேக 'கோட்' எண்களுடன் பிரசுரமாகும். அதிலிருந்து உங்கள் மனம் கவர்ந்த டிஸைன் ஒன்றைத் தேர்ந்தெடுத்து, மங்கையர் மலர் வாசகியராகிய நீங்கள் வாக்களிக்க வேண்டும். பெருவாரியான வோட்டுகளைப் பெற்ற சூப்பர் டிஸைன் ஒன்று, மங்கையர் மலர் ஸ்பெஷல் டிஸைனாகத் தேர்வாகி, 'பாலம் சில்க்ஸ்' நெசவுக் கூடத்துக்குச் செல்லும். அது புடவையாக உருவாக்கப்பட்டு, வரைந்து அனுப்பிய வாசகிக்கே பரிசாகத் தரப்படும்... என்ன மகிழ்ச்சிதானே?

அந்தப் பெருமைக்குரிய கலா ராணி, டிஸைன் டார்லிங் நீங்களாகவும் இருக்கலாம்... காத்திருங்க... 'ஆகஸ்ட்' இதழ் வரை சஸ்பென்ஸ் நீடிக்கட்டும்!

**அன்புச் சகோதரி**
**ஜெயஸ்ரீ ரவி**

”

# ஒரு வார்த்தை!

அழகான வேலைப்பாடு கொண்ட தங்கப் பேனா அது! அந்தப் பேனாவை, தனக்குத் தெரிந்த வாலிபன் ஒருவனுக்குப் பரிசாகக் கொடுக்கிறார் அந்த நபர். அந்த வாலிபனும், அதை தனது சட்டையின் இடதுபுற பாக்கெட்டில் வைத்து அழகாக உபயோகிக்கிறான். அதாவது தனது இதயத்தில் நேசத்துக்குரிய இடம் கொடுத்து வைத்திருக்கிறான். அவனுடைய நண்பர்களும், உறவினர்களும் ''பேனா ரொம்ப அழகாக இருக்கிறது. நீ அதிர்ஷ்டசாலி!'' என்று புகழ்கிறார்கள்.

சில மணி நேரங்களில் வருகிறது பெருந் தலைவலி! பேனாவைக் கொடுத்தவர், அடிக்கடி பேனாவைப் பற்றி விசாரிப்பதோடு இல்லாமல், அவ்வப்போது வந்து, பேனாவை வாங்கி எழுதிப் பார்க்கிறார். பேனா இன்னமும் அவருக்கு உரிமையானது போல நடந்து கொள்கிறார். இப்போது அந்த வாலிபன் எழுதும்போது பேனா மக்கர் செய்கிறது. வாலிபனுக்கு எரிச்சல் உண்டாகிறது. அந்தப் பெரியவர் வாங்கி எழுதும்போது மேலும் மக்கர் செய்கிறது. எழுதும் முறையில் இருவரின் பாணியும் வெவ்வேறு என்பதால், பேனா திண்டாடுகிறது. பட்டை அடிக்கிறது. பேப்பரைக் கிழிக்கிறது. கண்ணீர் விடத் துவங்குகிறது. அதாவது இங்க் கசியத் தொடங்குகிறது.

தனது சட்டைப் பாழாவதால், அந்த வாலிபன், பேனாவைப் பயன்படுத்தாமல், பேனா ஸ்டான்டில் போட்டு வைக்கிறான்.

''அருமையான பேனாவை வெச்சுக்கத் தெரியலையே!'' என்று அந்தப் பெரியவர் குற்றம் சாட்டுகிறார். மொத்தத்தில் பேனாவின் நிலைமை பரிதாபம்!

எனக்குத் தெரிந்த உறவினரின் மகனுக்குத் தடபுடலாகக் கல்யாணம் நடந்தது. மருமகள், பெரிய இடத்துப் பெண். செல்லமாக, செல்வமாக வளர்ந்த ஒரே வாரிசு. பெண்ணை அனுப்பி வைத்து, ஒரு மணி நேரம்கூட





என்றும் உங்களுடன்
# மங்கையர் மலர்
தரத்திலும் நம்பர் 1 மகளிர் மாத இதழ்!

பரதன் பப்ளிகேஷன்ஸ்
பிரைவேட் லிமிடெட்டிற்காக
பரதன் அச்சகத்தில்
ஆசிரியர் பொறுப்பேற்று
அச்சிட்டு வெளியிடுபவர்:
லக்ஷ்மி நடராஜன்

பொறுப்பாசிரியர் : அனுராதா சேகர்

வடிவமைப்பு :
எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன்,
பா.கோபால்

தொலைபேசி : 044 - 4343 8888
தொலைநகல் : 044 - 4343 8899

ஆசிரியர் குழு :
044 - 4343 8877
mangayarmalar@kalkiweekly.com

விளம்பரப் பிரிவு :
044 - 4343 8811
marketing@kalkiweekly.com

சந்தா பிரிவு :
044 - 4343 8833
subscription@kalkiweekly.com

விற்பனை பிரிவு :
044 - 4343 8844
sales@kalkiweekly.com

இன்டர்நெட் முகவரி :
www.mangayarmalaronline.com

இணையதளத்தில்...
வாங்கி, வாசித்து, மகிழ...
www.sangapalagai.com

சந்தா விவரம் (ஒரு வருடம்) :
உள்நாடு : ரூ.250/-
வெளிநாடு : ரூ.2,200/-

கல்கி பில்டிங்க்ஸ்,
47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32




ஆகவில்லை! அதற்குள் "எங்க இருக்க? என்ன பண்ற?" என்று தாய் - தந்தையரின் பாச குலாவல்!

"நல்லா இருக்கோம். இப்ப சாந்தா பவன்ல காப்பி சாப்பிடப் போறோம்!" என்று பெண் சொல்ல, "அய்யோ... மாப்பிள்ளை, அங்க காப்பி சுமாரா இருக்கும். சீதாபவன்ல ஒவல் சாப்பிடுங்க! என் பெண்ணுக்குக் காப்பி சாப்பிட்டா பித்தம் ஜாஸ்தி ஆயிடும்!" என்பது முதல் கொண்டு, "அவளுக்கு புடலங்காய் கூட்டு பிடிக்காது, நைட்டு பால் சாப்பிட்டாதான் தூங்குவா, அடுத்த வாரம் மூலிகை சீயக்காய் அரைச்சு அனுப்பறோம்..." வரை ஒரே அன்புத் தொணப்பு. தேனிலவில்கூட தனியாக இருக்க விடாமல், ஃபோன் விசாரிப்புகள்!

"என்னம்மா! இங்க உன்னைவிட்டு எங்களால இருக்கவே முடியலை! பிளாக்கி (நாய்) சாப்பிட மாட்டேங்குது! உன் நினைப்பாவே இருக்கு" என்று அப்பா அழுது பெண்ணையும் 'ஹோம் சிக்' ஆக்கிவிட்டாராம்!

சில நாட்களில் கணவன் எதிரிலியே புது மருமகள் செல்ஃபோனில் அம்மாவிடம் புகுந்த வீட்டுப் பிரச்னைகளை 'லைவ் ரிலே' செய்ய, அவர்கள் அந்தப் பக்கத்திலிருந்து புகுந்த வீட்டுக்குப் பொருந்தாத யோசனைகளையும் தீர்வுகளையும் சொல்ல... குழம்பி நிற்கின்றன உறவுகள்!

**பே**னா... உங்கள் பேனாதான்! தங்கப் பேனாதான்! ஆனால் அதை பெற்றுக் கொண்டவன் முறையாகப் பயன்படுத்த சிறிது காலம் அனுமதிக்க வேண்டும். சும்மா ஓர் உவமைக்காக உயிரில்லாத பேனாவை, உயிருள்ள பெண்ணுக்கு ஒப்பிட்டது எனக்கே என்னவோ போலத்தான் இருக்கிறது! ஆனால், இந்தக் கதைக்குள் சின்னதொரு நீதிச் செய்தி இருப்பதால்... இளம் பெண்களின் பெற்றோர்களுக்கு ஒரு வார்த்தை சொல்லாமல் இருப்பேனா? பல அநாவசிய விவாகரத்துக்களைத் தடுக்கத் துடிக்காமல் இருப்பேனா?

அனுஷா நடராஜன்

# தீராத ARTHRITIS வலியிலிருந்து விடுதலை

## அறுவை இல்லா நவீன சிகிச்சை

- வலி இல்லை
- அறுவை சிகிச்சை இல்லை
- நீண்ட நாட்கள் மருந்து இல்லை
- குறைந்த கால சிகிச்சை
- பக்கவிளைவுகள் இல்லை
- மருத்துவமனையில் தங்கி சிகிச்சை பெற வேண்டிய அவசியம் இல்லை.







**PEMF treatment**



**works to stop the pain ..**









## NEOMED HOSPITAL

SPECIALITY & RESEARCH CENTER

**Chennai** : 2181, L-Block, 12th Main Road, Anna Nagar, Ph : 044-2620 1147 / 2620 0882. Fax : 2620 0631
**Madurai** : 11, Lakeview Road, Opp. Sundaram Theatre, K.K. Nagar, Ph : 0452-2581414, 2581515.
**Salem** : 127 / 1, Varalakshmi Towers/ Gandhi Road, Ph : 0427-2311818, 2311819.
**Trichy** : No. 52, Central Bazaar Street, Tennur, Trichy. Ph : 0431-2791051, 2791052.
*www.neomedhospitals.com*

இந்திய இளைஞர்களுக்கான இரண்டாவது அறிவியல் மாநாடு, கடந்த ஜூன் மாதம் சென்னையில் நடைபெற்றது. எம்.எஸ்.சுவாமிநாதன் ஃபவுண்டேஷன் மற்றும் எஸ்.ஆர்.எம். பல்கலைக்கழகம் இணைந்து நடத்திய இந்த அறிவியல் கூட்டத்தின் முக்கிய நோக்கம், 13 முதல் 35 வயதுக்குட்பட்ட இளம் இந்திய விஞ்ஞானிகளை ஊக்குவிப்பதுதான். அவர்களது கண்டுபிடிப்புகளையும் அறிவியல் செய்திகளையும் விளக்குவதற்காகவே ஏற்பாடு செய்யப்பட்டது.

# சர்ச்சைக்கு 'ரெடி'யாகும்

சென்னையில் உள்ள சுமார் ஐம்பது சாலைகளுக்கு, தமிழ் அறிஞர்களின் பெயரைச் சூட்டப் போவதாக தமிழக அரசு முடிவெடுத்துள்ளது. தமிழுக்கு சேவை செய்த ஐரோப்பியர்களின் பெயரில் மாற்றம் இருக்காதாம். திருக்குறளை மொழி பெயர்த்த அறிஞர் எல்லிஸ் பெயரிலும் மாற்றம் இருக்காது. மற்றபடி ஹாடோஸ் சாலை, ஸ்டெர்லிங் சாலை, க்ரீம்ஸ் சாலை போன்ற சாலைகளுக்கு தமிழ் அறிஞர்கள் பெயர் சூட்டப்படும் என்று மேயர் மா.சுப்ரமணியன் அறிவித்துள்ளார்.




* அம்பாஸிடர்



* முதல் வாக்காளர்...

கடற்கரையில் அருமையான குடிநீர்! குடிநீர் சுத்தம் செய்யும் ப்ளாண்டுகளை கடற்கரையில் இனி காணலாம். முதல் ப்ளாண்ட் ஒன்பது லட்ச ரூபாய் செலவில் மெரீனா கடற்கரையில் நிறுவப்பட்டுள்ளது. தினமும் ஒன்பதாயிரம் லிட்டர் தண்ணீரை சுத்தம் செய்யும் இது.

அண்மையில் இலங்கையில் ர்வதேச திரைப்பட விழா நடைபெற்றது அல்லவா? அதில் கலந்து கொள்ளச் சென்ற (அமிதாப்பச்சன், ஐஸ்வர்யா ராய் முதலானோர் தமிழர் இயக்கங்களின் போராட்டம் காரணமாக செல்லாமல் தவிர்த்தார்களே, அதே விழாதான்!) பாலிவுட் நடிகர் சல்மான்கான், கொழும்புவின் இயற்கை அழகில் மயங்கி, தனது அடுத்த படமான 'ரெடி'



# ல்மான்!

படத்தின் காட்சிகளை இங்கே படமெடுக்க ஆர்வம் காட்டியுள்ளாராம். மொரீஷியஸ் நாட்டில் அசினுடன் எடுக்கப்பட இருந்த காட்சிகள் இவை! இந்தச் செய்தி உண்மையாக இருந்தால், ர்ச்சைகள் தொடரும்!

லயன்ஸ் கிளப் உதவியுடன் நிறுவப்பட்டுள்ளது.

**பெ**ரிய நிறுவனங்களின் விளம்பர தயாரிப்புகளுக்கு, சினிமா நடிகர்கள் மாடலாக இருந்த காலம் போய் இப்போது தூதர்களாக அம்பாஸிடர்) பெருந்தொகையில் நியமிக்கப் படுகிறார்கள். 'பாபி' புகழ் ரந்திர் கபூரின் மகன் ரன்பீர் கபூர். ஜப்பானின் 'நிஸ்ஸான் மோட்டார் இந்தியா' கார்களுக்கு தூதராக நியமிக்கப்பட்டிருக்கிறார்.

**5500** ஆண்டுகளுக்கு முற்பட்ட உலகின் மிகப் பழைமையான 'ஷூ' கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. ஆர்மீனியாவின் குகை ஒன்றில் ஆடுகளின் காய்ந்த சாணக் குவியலை அகற்றியபோது, இந்த ஷூவைக் கண்டுபிடித்தனர். ஒரே பீஸ் பகத் தோலால் செய்யப்பட்டிருக்கும் இந்தக் காலணியின் தொழில் நுட்பம், தற்போதைய ஷூக்களை ஒத்திருப்பது மிகவும் ஆச்சரியம்!



**சு**தந்திர இந்தியாவின் முதல் தேர்தலில் வாக்களித்த வாக்காளர்கள்,

## நியூ(ஸ்)மார்ட்

சுமார் 63 ஆண்டுகளுக்குப் பின்னர், இப்போது எப்படி இருப்பார்கள்? ஹிமாசல் பிரதேசத்தைச் சேர்ந்த ஷ்யாம் சரண் முதல் தேர்தல் வாக்காளர். 93 வயதாகும் இவரை, தலைமை தேர்தல் ஆணையர் நவீன் சாவ்லா, அவரது இல்லத்தில் சந்தித்து வாழ்த்தினார்.



* ஆச்சரியமான ஷூ

...விலக்கு அளிக்கப்படும் ஓய்வூதிய சேமிப்புகளுக்கும் வரி இருக்காது என்று நிதி அமைச்சக செய்திகள் கூறுகின்றன.

இந்த வருடம் அக்டோபர் மாதம் 3ம் தேதி காமன்வெல்த் விளையாட்டுப் போட்டிகள் புது தில்லியில் துவங்க உள்ளன. இதற்காக ஒரு சிறப்பு ரயில் விடப் போவதாக ரயில்வே துறை அறிவித்துள்ளது. இதில் ஐந்து பெட்டிகளில் காமன்வெல்த் விளையாட்டுகளைப் பற்றிய கண்காட்சி இருக்கும். இன்னும் ஐந்து பெட்டிகளில் ரயில்வேத் துறையின் தொழில் நுட்ப வளர்ச்சி, ஐ.டி வளர்ச்சி பற்றிய செய்திகள் இருக்கும். இன்னொரு நீண்ட கோச் முழுவதும் விளையாட்டுகள் சம்பந்தமான ஐயாயிரத்துக்கும் மேற்பட்ட அபூர்வப் புகைப்படங்கள் இருக்கும் என்று ரயில்வே நிர்வாகம் அறிவித்துள்ளது. விளையாட்டுத் துறையில் இந்தியாவின் பங்கு பற்றிய செய்திகள் அனைவரையும் சென்றடைய வேண்டும் என்பதே இச் சிறப்பு ரயிலின் நோக்கம்.

வெறும் ஐந்து கிலோ எடையுள்ள காஸ் சிலிண்டர்கள், கூடிய விரைவில் சென்னையில் அறிமுகப்படுத்தப் படும் என்று இந்தியன் ஆயில் கார்ப்பரேஷன் நிறுவனம் அறிவித்துள்ளது. இதன்விலை அன்றைய மார்க்கெட் நிலவரத்தைப் பொறுத்து தீர்மானிக்கப்படும்.



* சுத்தமான குடிநீர்...

பசுஞ்சாணம் ஒரு கிருமி நாசினி என்று நமக்குத் தெரியும். ஆனால் அதிலிருந்து புற்றுநோய் தடுக்கும் மருந்துகூடத் தயாரிக்க முடியும் என்று நிரூபிக்கப்பட்டுள்ளது. பசுவின் சிறுநீரிலிருந்து தயாரிக்கப்படும் மருந்துகளால், டி.என்.ஏ கோளாறுகளை சரி செய்ய முடியும் என்றும் கண்டுபிடித்துள்ளனர்.

நீண்ட கால சேமிப்பு நிதிக்கு வரி

தொகுப்பு: பத்மினி பட்டாபிராமன்

**வீடு தேடி வருபவர்கள் யாராயிருந்தாலும் வரவேற்று உபசரிப்பது நம் கலாசாரம், பண்பாடு! இரு கரம் கூப்பி 'வாங்க' என்று முகமலர மலர்ச்சியோடு வரவேற்று உபசரிக்கும்போதே வந்த விருந்தினர் மனம் நிறைவடையும். ஆனால் சிலர் இன்று விருந்தினரை 'வாங்க' என்று வாய் வார்த்தையாகக்கூட உபசரிப்பதில்லை. அலட்சியமாக டி.வி முன்னாலோ, கம்ப்யூட்டர் முன்னாலோ ஐக்கியமாகி விடுகிறார்கள்.**

எனது நெருங்கிய தோழி தன் கணவரது நெருங்கியச் சொந்தங்களின் வீட்டுக்குச் சென்றபோது தோழியை அலட்சியப்படுத்தும் நோக்கில் அவள் கணவரை மட்டும் 'வா' என்று வாய் நிறைய சிரிப்போடு வரவேற்றனராம். தோழியைக் கண்டும், காணாமல் 'வா' எனச் சொல்லாமல், ஏதோ யதார்த்தமாகப் பேசுவது போல பேசிக் கொண்டிருந்தார்களாம். இது அவள் கணவனுக்குத் தெரியாமல் இருக்கச் செய்யும் தந்திரம். அவள் மாமியாரே மகள்கள் வீட்டுக்குச் சென்றால் மகனுடன் சேர்ந்து மருமகளை மட்டம் தட்டும் நோக்கில் செய்யும் மோசமான மனப்போக்கு!



# பூக்களைப் பரிசளிப்போமா?



எனது நெருங்கிய தோழி தன் மகளின் பிறந்த நாளுக்கு என்னை அழைத்தாள். காலையிலிருந்தே ஏகப்பட்ட வேலைகளிருந்ததால் மதியம் அசந்து தூங்கிவிட்டேன். மாலை பரபரவென்று எழுந்து பரிசு வாங்க கடைக்கு ஓடி மூச்சிரைக்க அவள் வீட்டுக்குச் சென்றால் ஒரு சம்பிரதாயத்துக்குக்கூட 'வா' எனச் சொல்லாமல் உள்ளே மிக வேலையாயிருப்பதைப் போலிருந்தாள். என்னதான் தோழி என்றாலும் ஒரு வார்த்தை 'வா' என்று சொல்லியிருந்தால் மனம் வலித்திருக்காது.

எனவே... குறைந்த பட்சம் ஒரு புன்னகையோடு 'வாங்க' என வரவேற்போம். அது விருந்தாளியின் மனத்திலும் நல்ல மாற்றத்தை உண்டாக்கும். முட்களை விட்டுவிட்டு பூக்களைப் பரிசளிக்கத் துவங்குவோம் இனியாவது.

- கு.தெய்வநாயகி, சென்னை




வீட்டு உபயோகத்துக்கான சமையல் எரிவாயுவை வியாபாரிகளுக்குக் கொடுக்கிறார்கள். வியாபாரிகளுக்கென்று பிரத்யேகமாக வடிவமைக்கப்பட்ட சிலிண்டரை அறிமுகப்படுத்தினால் சிலிண்டர் தட்டுப்பாடு நீங்கும்.

- ஸ்ரீவித்யா, குண்டக்கல்

பணத்தைத் திட்டமிட்டு செலவழிப்பதுபோல, உங்கள் நேரத்தை வீணாக்காமல், திட்டமிட்டுச் செலவழித்தால் கடினமான வேலைகளைக்கூட எளிதில் செய்யலாம்.

- பிரேமா சந்தானம், பெங்களூரு

சிறு குழந்தைகளுக்கு இரவு நேரங்களில் பல் துலக்குவதற்கு நாமே சிரமம் பார்க்காமல்கூட நின்று பழக்கிவிட வேண்டும். அந்தப் பழக்கம் அவர்களிடம் வேரூன்றி விட்டால் பின்னால் வரவிருக்கும் பல பல் சம்பந்தமான நோய்களிடம் இருந்து அவர்களுக்கு பாதுகாப்பு கிடைக்கும்.

- ஜி. அனுராதா, திருப்பூர்

சமீபத்தில் குருவாயூர் சென்றிருந்தோம். அங்கு எல்லா ஹோட்டல்களிலும் சூடாக சீரகத் தண்ணீர் கொடுத்தார்கள். இப்பொழுது பெருகிவரும் வியாதிகளிலிருந்து தப்பிக்க, நம் ஊர் ஹோட்டல்களிலும் இதைக் கடைப்பிடிக்கலாமே!

- கே.ஜெயந்தி, மதுரை

பஸ் பிரயாணங்களின்போது ஜன்னல் ஓரமாக உட்கார்ந்து இருப்பவர்கள், செல்ஃபோன் பேச நேர்ந்தால், ஜன்னல் பக்கமாக இருக்கும் காதுகளில் செல்ஃபோன் வைத்து பேசாமல் மறுபுறம் வைத்துப் பேசவும். பஸ் நகரும்போது ஃபோன் கை நழுவி விழுந்தாலும், வெளியே விழாது.

- கே.சுதா, சென்னை



அரிசி, தேங்காய், வெல்லம் சேர்த்து குழி அப்பம் செய்வோம். அப்பத்துக்கு மாவை அரைக்கும்போது தேங்காய் வெல்லத்துடன் பத்துத் துண்டுகள் பைனாப்பிள் சேர்த்து அரைத்து அப்பம் செய்தால் மாறுதல் ருசியுடன் டேஸ்டி பைனாப்பிள் அப்பம் நன்றாக உப்பிக் கொண்டு வரும்.

- சியாமளா சுவாமிநாதன், திருவனந்தபுரம்

சீரகத்தைப் பொன் வறுவலாகப் பொடி செய்து, சூரணமாக வைத்துக்கொண்டு பனை வெல்லம் சேர்த்துச் சாப்பிட்டு வந்தால், நல்ல பசி உண்டாகும்.

- சியாமளா ராஜகோபால், சென்னை

வெள்ளிக்கிழமை மாலை, வீட்டில் விளக்கேற்றி, அரிசிப் படியை வைத்து, அதன் அடியில் பழைய செப்புக்காசு ஒன்றை வைத்து, உப்பைக் கொட்டி வழிபட்டால், குடும்பத்தில் லக்ஷ்மி கடாட்சம் உண்டாகும்.

- டி.ஹேமலதா, காஞ்சிபுரம்

# இவை எல்லாமே ஆஹா 50 தான்!

பிரச்னை : தொப்பை
ஏஜ்-க்ரூப் : 30-40
தீர்வு : உடற்பயிற்சி + டைட்டனிங் பேக்

ஹேமா லக்ஷ்மண்

2



இன்றைய பெண்களின் கவலைக்குரிய பிரச்னை வயிறும் இடுப்பும் 'புசுபுசு' என்று பெருத்துப் போவது.

வெறும் வாணலியைச் சூடு செய்து, அதில் கைப்பிடி அளவு சோம்பைப் போட்டு, புரட்டுங்க. மிக்ஸியிலிட்டு பொடிச்சுக்குங்க. அரை லிட்டர் தண்ணியிலே போட்டு, நன்றாகக் கொதிக்க வெச்சு வடிச்சு, அடிக்கடி குடிச்சாலே தொப்பை கரைய ஆரம்பிக்கும்.

கைப்பிடியளவு பார்லியை நாலு மணி நேரம் ஊற வெச்சு, இரண்டு தம்ளர் நீரில் வேக வெச்சு அந்தத் தண்ணீரைக் குடிச்சுட்டு வந்தாலும், கொழுப்புத் தசைகள் கரையும்.

தொப்பை மட்டுமல்ல, உங்க உடம்பே வாகாக இளைக்கணும்னா தினமும் காலையிலும் மாலையிலும், குனிஞ்சு நிமிர்ந்து பத்து நமஸ்காரம் செய்யுங்க. இதை பூஜையறையில் சுவாமியின் முன் போட்டால் புண்ணியத்துக்குப் புண்ணியம்! உடற்பயிற்சியும் ஆச்சு. வீட்டு ஹாலில் வரிசையாக பத்து கர்ச்சீப்புகளை போட்டுவிட்டு, குனிந்து எடுத்து பயிற்சி போல செய்யுங்க. குறிப்பாக உங்களுடைய அபிமான டீ.வி நிகழ்ச்சியின் போது செய்தால், டூ இன் ஒன் பலன் கிடைக்கும்!

ஃப்ரெஷ் சாலட் உங்களுக்குக் கை கொடுக்கும். குடைமிளகாய், மாதுளம்பழம், ஆப்பிள், உலர் திராட்சை, வெள்ளரி போன்றவற்றைத் துண்டுகளாக்கி ஆலீவ் ஆயில், எலுமிச்சை சாறு போட்டு ஊற வைக்கவும். மதிய உணவின்போது ஒரு பெரிய கப் நிறைய சாலட்டையும் இரண்டு சப்பாத்தியையும் மட்டும் சாப்பிடவும். கண்டிப்பாக ஆறே மாதங்களில் செல்லத் தொப்பை காணாமல் போய், முல்லைப்பூ போல இருப்பீங்க!

# என்றும் 16!

**டைட்டனிங் பேக்!**

**தேவை:** வெள்ளரி விதை - 100 கிராம், சந்தனப் பவுடர் - 10 கிராம், வெட்டி வேர் - 25 கிராம்

**உபயோகிக்கும் முறை:** வெட்டி வேரை, சிறு துண்டுகளாக வெட்டி, வெயிலில் 'மொறு மொறு' என்று உலர்த்தவும். அத்துடன் வெள்ளரி விதை, சந்தனப் பவுடர் சேர்த்து, மிக்ஸியில் பொடி செய்யவும். ராத்திரி இரண்டு ஸ்பூன் வெட்டி வேர் பவுடரை, தண்ணீரில் குழைத்து, வயிற்றில் தடவிக் கொண்டு படுக்கவும். வயிற்றின் தொள தொள சதைகள் நாளடைவில் இறுகி, புதுப் பொலிவுடன் இருக்கும்.



NARAYANA
pearls & gems

FASHION JEWELLERY STORE

40% off
CLEARANCE
SALE

# Passion is more than just making things look Fashion

Astrology
Consultation
Available for
Birthstones



**Divine Inspirations, Eternal Blissings**

Unveil the power of your future with our Flawless, Original & Certified Gem Stone suggested by our Expert Astrologer.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| CHENNAI | **Pondy Bazaar** | **Anna Nagar** | **Vadapalani** | COIMBATORE | TRICHY |
| **Kasi Arcade** | (Opp. Bank of Baroda) | (Opp. Shree Mithai) | "Raahat Plaza" | "Singapore Plaza" | C-55, 4th Cross |
| (Next to GRT Hotel) | Ph : 4207 0809 | Shanthi Colony | (Opp. Vijaya Hospital) | Cross Cut Road | Thillai Nagar |
| Ph : 4352 0809 | (SUNDAY OPEN) | Ph : 4354 0809 | Ph : 4218 0809 | Ph : 436 7752 | Ph : 422 0809 |

For Online Shopping Experience, Visit **www.narayanapearls.in** | Business Hours : 10am to 8pm, **SUNDAY HOLIDAY**

# ரூ.5,000 பரிசு சுற்றுலா போட்டி-5 பரிசு பெறும் அதிர்ஷ்டசாலிகள்!



ஜீன் 2010ல் வெளியான சுற்றுலா போட்டி-5 விடைகள்

1. எஸ். ஜெயஸ்ரீ, தேவகோட்டை
2. ஆர். லக்ஷ்மி, டெல்லி
3. நாகலக்ஷ்மி நவாஷ், மதுரை
4. கமலா கிருஷ்ணன், மல்லப்பூர்
5. எஸ். ராஜம்,காஞ்சிபுரம்
6. பி.ஆர். கிரிஜா, சென்னை
7. ப.இராசன், அருப்புக்கோட்டை
8. அ.ராஜவள்ளி, வீரவநல்லூர்
9. வள்ளி, போபால்
10. எஸ். சுமதி, சென்னை
11. மலர் அம்மாள், வேலூர்
12. ச. மோனிஷா, உதகமண்டலம்
13. எம். பவளக்கொடி, பெரிய கொத்தூர்
14. எஸ். ஹேமா, உளுந்தூர்பேட்டை
15. என். பிரியா, செங்கம்
16. விஜயா, வேலூர்
17. மாலதி சந்தானகோபாலன், மயிலாடுதுறை
18. உஷா மஹாதேவன், கோலார்தங்கவயல்
19. ஏ.எஸ்.தனந்ஜெய், பம்மல்
20. ஜி. ஜெயலக்ஷ்மி, ஈரோடு

மங்கையர் மலர் மே, 2010 இதழில் அஹோபிலத்தில் எழுந்தருளியுள்ள நவநரஸிம்மர்களைப் பற்றி 'நலம் தருவாய் நரஸிம்மா' கட்டுரையில் விரிவாக இடம் பெற்றிருந்தன.

இந்த நவ நரஸிம்மர்களும் நவக்கிரஹ பரிகாரத் தலங்களாகவும் விளங்குகின்றன.



# பரிகார நரசிம்பர்!

*ஜ்வாலா நரஸிம்மர் - செவ்வாய்*
*அஹோபில நரஸிம்மர் - குரு*
*மாலோல நரஸிம்மர் - சுக்கிரன்*
*க்ரோட நரஸிம்மர் - ராகு*
*காஞ்ச நரஸிம்மர் - சந்திரன்*
*பார்கவ நரஸிம்மர் - சூரியன்*
*யோகானந்த நரஸிம்மர் - சனி*
*சத்ரவட நரஸிம்மர் - கேது*
*பாவன நரஸிம்மர் - புதன்*

- சுதா நாராயணன்,
புதுக்கோட்டை




# Born Babies®

## A Chain Of Baby Stores

Visit us and avail 5% Offer & VIP Card for New Mom & Mom To be

- We at Born Babies® have selected comfortable, durable, special hand picked products from all over the Globe for babies, mothers & mothers to be..
- Our Complete baby collection will save YOUR TIME & we provide EXPERT INFORMATION SUPPORT and GUIDANCE.
- Keeping in mind the baby's tender skin ECO-FRIENDLY technologies are being used in our manufacturing facilities

## CHENNAI

**NUNGAMBAKKAM**
18, Lokesh Towers, Kodambakkam High Road, Nungambakkam, Ch - 34. 044 - 2825 0067
Customer Care No : 97109 22230

**ANNA NAGAR WEST**
334/2, 2nd Avenue, Anna Nagar West, Ch - 40, (Opp. To Nilgiris) 044 - 2616 2225
Customer Care No : 99419 11120

**VELACHERY**
# 1, 1st Main Road, Lakshmi Nagar, 100 Feet Bye-Pass, Velachery, Chennai - 600 042. 044 - 22591222
Customer Care No : 95516 98098

**COIMBATORE**
69, T.V. Samy Rd East, R.S.Puram, Coimbatore - 2.
0422 - 254 1626, 436 6455
Customer Care No : 98438 88811

**COCHIN**
Rubicon Building, South Over Bridge, Valanjambalam, Cochin - 16.
0484 - 235 8818, 403 0220
Customer Care No : 98951 08686

**HYDERABAD**
LG-15, City Center Mall, Road No. 1, Banjara Hills, Hyderabad - 500 034. 040 - 40033391
Customer Care No : 98488 33391

Born Babies For all Customer Who Can't Compromise on Quality www.bornbabies.in

சந்திக்க வருகிறோம்...




அன்பு வாசகியர்களே...

எத்தனை நாளாச்சு உங்களையெல்லாம் பார்த்துப் பேசி? இதோ வருகிறோம் உங்களைத் தேடி. உங்களுடன் அளவளாவி, இனிமையாகப் பொழுதுபோக்கி, பரிசுகள் தந்து மகிழ வருகிறோம். மங்கையர் மலரை மேம்படுத்த உங்களை நாடி வருகிறோம்!

## இம்மாத சந்திப்பு இடங்கள் :

**ஊர் : இராமநாதபுரம்**

தேதி : 9.7.10 (வெள்ளிக்கிழமை)
நேரம் : காலை 10 மணி முதல் பிற்பகல் 1 மணி வரை
இடம் : வளர்ச்சித்துறை திருமண மண்டபம், யூனியன் ஆஃபீஸ் அருகில், புதிய பேருந்து நிலையம், இராமநாதபுரம்

**ஊர் : பரமக்குடி**

தேதி : 9.7.10 (வெள்ளிக்கிழமை)
நேரம் : பிற்பகல் 3 மணி முதல் மாலை 6 மணி வரை
இடம் : ஆயிரவைசிய ஜவுளி வியாபாரிகள் கல்யாண மஹால், 7/154, சுவாமி சன்னிதி தெரு, பரமக்குடி

**ஊர் : சிவகங்கை**

தேதி : 10.7.10 (சனிக்கிழமை)
நேரம் : காலை 10 மணி முதல் நண்பகல் 1 மணி வரை
இடம் : முத்து மஹால், 9C, போஸ் ரோடு, (மஜீத் ரோடு) பேருந்து நிலையம் பின்புறம், சிவகங்கை

**ஊர் : காரைக்குடி**

தேதி : 10.7.10 (சனிக்கிழமை)
நேரம் : பிற்பகல் 3 மணி முதல் மாலை ஆறு மணி வரை
இடம் : ஞானாநந்தா ஹால், பெரியார் சிலை அருகில், செக்காலை ரோடு, காரைக்குடி

| | |
|---|---|
| ஊர் | : நாகபட்டினம் |
| தேதி | : 24.7.10 (சனிக்கிழமை) |
| நேரம் | : காலை 10 மணி முதல் பிற்பகல் 1 மணி வரை |
| இடம் | : லலிதா திருமண மஹால் சௌந்தராஜா பெருமாள் கோயில் அருகில், நாகபட்டினம் |

| | |
|---|---|
| ஊர் | : திருவாரூர் |
| தேதி | : 24.7.10 (சனிக்கிழமை) |
| நேரம் | : பிற்பகல் 3 மணி முதல் மாலை 6 மணி வரை |
| இடம் | : ஓட்டல் செல்வீஸ், சோழா தியேட்டர் அருகில், பேருந்து நிலையம் அருகில், திருவாரூர் |

| | |
|---|---|
| ஊர் | : மன்னார்குடி |
| தேதி | : 25.07.10 (ஞாயிற்றுக்கிழமை) |
| நேரம் | : காலை 10 மணி முதல் மாலை 6 மணி வரை |
| இடம் | : உடுப்பி கிருஷ்ணபவன் ஓட்டல், கிருஷ்ணா மினி ஹால், 220, காந்தி ரோடு, பந்தலடி, மன்னார்குடி |

| | |
|---|---|
| ஊர் | : பட்டுக்கோட்டை |
| தேதி | : 25.07.10 (ஞாயிற்றுக்கிழமை) |
| நேரம் | : பிற்பகல் 3 மணி முதல் மாலை 6 மணி வரை |
| இடம் | : வாசவி மஹால், எண்.51, சின்னையா தெரு, கோர்ட் எதிர்புறம், பட்டுக்கோட்டை |




ஒவ்வொரு ஊரிலும் தங்கள் வருகையை உறுதிப் படுத்தி முன் பதிவு செய்து கொள்ளும் முதல் இருபது வாசகர்களுக்கு. நிகழ்ச்சியின்போது சிறப்புப் பரிசுகள் கொடுக்கப்படும்!

முன்பதிவுக்கு : 97105 52526



''என் பொண்டாட்டி, முன்னாடியெல்லாம் தன் மாமியாருக்கு மட்டும்தான் பயப்படுவா.''

''இப்ப?''

''சாமியாருக்கு மட்டும்தான் பயப்படுறா!''

- அனுராதா ரமேஷ், பாண்டிச்சேரி-4

''எங்கம்மா பாத்ரூம்ல வழுக்கி விழுந்தப்ப, பக்கத்துல நீ இருந்தும் தூக்கி விடலையாமே...!''

''சாரிங்க... எனக்கு சந்தோஷத்துல கையும் ஓடலை, காலும் ஓடலை.''

- பி. பாலாஜி கணேஷ், கோவிலாம்பூண்டி





''நேத்து ஸ்கூட்டரிலிருந்து விழுந்துட்டேன். மூளையில் அடிபட்டிருக்குமோன்னு சந்தேகமா இருக்கு''

''இல்லாத விஷயத்துக்கெல்லாம் கவலைப்படறதுதான் உங்க குணமாச்சே.''

- எஸ். விஜயா ஸ்ரீனிவாசன், திருச்சி

''மன்னா... வெண்கொற்றக் குடை சாய்ந்துவிட்டது!''

''ஹா...நான் நீதி தவறி விட்டேனா?''

''பதற்றம் வேண்டாம் அரசே. குடை கட்டியிருக்கும் கயிறு தளர்ந்து விட்டது என்று சொல்ல வந்தேன்!''

- கே. கவிதா, நெல்வாய்



## ஜோக்ஸ்

## சிரிச்சு வையுங்க!



''தொலைஞ்சுப் போன உங்க நாயோட அடையாளம் சொல்லுங்க.''

''என்னைப் பார்த்தா உடனே வாலாட்டும் சார்!''

-ரம்யா ராமகிருஷ்ணன், காயக்காடு

## மாபெரும் சிறப்புச் சலுகை 01.07.10 முதல் 31.07.10

1.51 ct வைர நெக்லஸ்
18.00 gm தங்கத்தின் எடை
விலை ரூ. 1,08,000
சலுகை விலை
**ரூ. 92,000**



1.00cts வைரத்தோடு
தங்கத்தின் எடை 5 கிராம்
~~67,000~~
தள்ளுபடி விலை
57,000

- வைர நகைகளுக்கு Perct 4000 தள்ளுபடி
- 7 கல் வைரத்தோடு - 25000 முதல்
- வைர மூக்குத்தி 1700 முதல்
- பேன்சி வைரமோதிரம் 4500 முதல்
- பேன்சி வைரதோடு 4500 முதல்
- பேன்சி டாலர் 4500 முதல்
- அனைத்து வைரங்களும் V V S E F கலர்
- திருப்பி தரும்பொழுது வைரத்திற்கு மட்டும் 100% அன்றைய மார்கெட் விலை
- 500 முதல் 5000 வரை மாத சீட்டு + இரட்டிப்பு போனஸ்
- 25000 மேல் வாங்கும் அனைத்து வாடிக்கையாளர்களுக்கும் நகை பெட்டி வழங்கப்படும்.




# Sri Palsani Jewels

110, Dr. Radha Krishnan Road, (Near Sri Krishna Sweets) Chennai - 4
**Phone: 2811 1737, 2811 7036 | www.sripalsanijewels.net**

Shivaa

மங்கையர் மலரைப் புரட்ட புரட்ட ஏதோ கல்லூரி திருவிழாவுக்குள் நுழைந்தாற்போன்ற மகிழ்ச்சி உண்டானது.

**- ஏ. மெஷ்னாஸ், கீழக்கரை**




A to Z கல்வி கைடும், பூஞ்சாரல் பக்கங்களும் நிச்சயம் இன்றைய மாணவ, மாணவிகளுக்கு பயனுள்ள பூங்கொத்தாய் அமைந்திருக்கும் என்பதில் துளியும் சந்தேகமேயில்லை.

**- எஸ். ராஜம்மாள், திருச்சி**

கல்லூரி முதலாமாண்டு படிக்கும் நான் பரீட்சை தீவிரத்தில் ஸ்டூடன்ட் ஸ்பெஷலுக்கு என் பங்களிப்பைத் தர முடியவில்லை. ஆனால் படிக்க, படிக்க எத்தனையோ ஃப்ரெண்ட்ஸ் புதிதாகக் கிடைத்தது போலிருந்தது.

**- எம்.ஜி.பரத், திண்டுக்கல்**

எங்கள் காலத்தில் பள்ளிக் கல்வி முடித்தால் பி.யூ.சி அல்லது ஆசிரியர் பயிற்சி; என் பெண்களுக்கு கல்லூரியில் ஒரு பட்டம், அவ்வளவுதான். இந்த மாதிரி 'ஏ டு இசட்' கல்வி கைடு எல்லாம் கிடைக்கவில்லையே என்று வருத்தம்தான். ஆனாலும் எனக்கும் என் பெண்களுக்கும் கிடைக்காத வாய்ப்பு என் பேத்திக்குக் கிடைத்ததில் மகிழ்ச்சி!

**- எஸ். மங்கையர்க்கரசி, வடலூர் ஆபத்தாரணபுரம்**

கடந்த இரு மாதங்களாக கவர் ஸ்டோரிகள் கலக்கல்! அட்டகாசமான அபி, கலக்கலான கார்த்தி... அடுத்தது யாரோ? கார்த்தியின் கலந்துரையாடலில் இளமை ததும்பியது.

**- ஹேமலதா கிருஷ்ணன், கும்பகோணம்**

'ஒரு வார்த்தை!' வாசகங்களை மாணவன் மனத்தில் இருத்தி படித்தாலே வாழ்க்கையில் வெற்றி நிச்சயம்! நான் படித்த காலத்தில் இந்த அளவுக்கு விரிவான பத்திரிகை வழிகாட்டுதல் இல்லையே என ஏங்க வைத்து விட்டீர்கள்.

**- மகாலெக்ஷ்மி சுப்ரமணியன், காரைக்கால்**

மாணவ மணிகளுக்கு அனுஷா நடராஜனின் அறிவுரை சூப்பர்! இருபது வயதுக்குள் வாழ்க்கையை செம்மைப்படுத்திக் கொள்ளுங்கள் என்ற வரி, கோல்டன் வோர்ட்ஸ். கட்டடத்துக்கு அஸ்திவாரம் பலம். கடினமாக உழைக்கத் தூண்டிய மங்கையர் மலருக்கு தலையங்கம்தான் பலம்!

**- அம்புஜம் முராரி, சேலம்**




'ஆஹா 50!'ல் எனது குறிப்பு வெளியானதைப் பார்த்து திக்கு முக்காடி விட்டேன். ஏனெனில் ஏழு வருடங்களாக எத்தனையோ

# என் பேத்திக்குச்

எழுதியும், எந்தப் பத்திரிகையிலும் எனது எழுத்துக்கள் இடம் பெறவில்லை. முதன்முதலாகப் பார்த்ததில் மகிழ்ச்சி தாங்கவில்லை!

**- வி. உமா, தூத்துக்குடி - 2**

**இ**து என்ன போட்டி மாதமா? பல போட்டிகளை அறிவித்து அதிரிபுதிரி செய்து விட்டீர்களே? சொக்கா... பரிசு கிடைக்கும்படி அருள் புரியப்பா!

**- ஹிமயா, பொன்மலை**

**எ**ன் போன்ற இல்லத்தரசிகளும் புரிந்து கொள்ளும் வண்ணம், குரூப் டிஸ்கஷன் கேள்விகளும், அதன் டிப்ஸும் இருந்தன. நடைமுறையில் உள்ளவற்றை எங்களுக்குப் புரிய வைத்து, குழந்தையை அழைத்துச் செல்வதுபோல் கைபிடித்து கூட்டிச் செல்லும் மங்கையர் மலருக்கு என் மதிப்பெண் நூற்றுக்கு நூறு.

**- பானுபெரிய தம்பி, சேலம் - 30**




'**சு**குணா டீச்சர்' படிப்பினை தந்த சிறுகதை! 'எதுவுமே அதிகமானால் வலி தானே மிஞ்சும்?' என்ற வரிகள் அற்புதம்!

**- வளர்மதி மனோதாஸ், கன்னியாகுமரி**

'**பூ**ஞ்சாரல்' பக்கங்கள் படித்தேன். சலசலப்பின்றி செல்கிறது கலகல உலா! சிறியவர் முதல் பெரியவர்கள்வரை அனைவருக்கும் பயனளிக்கும் வகையில் டிப்ஸ் வழங்கிய மாணவர் அறிவரசுக்கு

# கிடைச்சுதே!

## சொல்ல விரும்புகிறோம்

எனது பாராட்டு.

**- பத்மினி ராஜாராம், சேலம்**

**ரா**திகா ரவி எழுதிய ஹைகூவின் இரண்டு வரியே இரண்டாயிரம் விஷயத்தைச் சொல்லிவிட்டது.

**- ராஜி குருஸ்வாமி, ஆதம்பாக்கம்**

"**எ**ன்றும் 16' ஸ்வீட் டீன் ஏஜ் ஸ்பெஷல் தொட(ர்) அசத்தல் ஆரம்பம்.

**- மயிலை கோபி, சென்னை 83**

**ம**ங்கையர் மலர் வந்தவுடன் முதலில் படிப்பது என் வீட்டுக்காரர்தான். ஜூன் மாத இதழில் 'தலைவாழை சமையல்' பகுதியைப் படித்து விட்டு ரொம்ப ஜாலியாக 'தலைவாழை இலை போட்டு விருந்து வைப்பாய்; உன் தலைவன் என் வருகைக்குத் தவம் இருப்பாய்!' என்று பாட ஆரம்பித்துவிட்டார். நன்றாக மாட்டிக் கொண்டேன். **- திலகவதி, தேனி**

**மே இதழில் 'பாஞ்சாலி ஏன் சிரித்தாள்?' கட்டுரையில் பீஷ்மர், அம்புப் படுக்கையில் படுத்தவாறே தட்சிணாயன புண்ய காலத்தை எதிர் நோக்கிக் கொண்டிருந்தார்' என்று வெளியாகியுள்ளது. அவர் உத்தராயண புண்ய காலத்தை எதிர் நோக்கியிருந்தார் என்பதுதான் சரி.**

**- கே.ஸ்ரீனிவாஸன், ஸ்ரீரங்கம்**

**சாந்தா ஜனார்த்தனம் கோவை,**

**மதுரம் சீனுவாசன், சென்னை**

# Senior Care Beyond Compare

## SOUNDARYAM @ IDIGARAI

Our experience in creating and managing care of Senior Citizens in Coimbatore, has taken us to the n level. We understand the concept of senior care. We match care with service and our facilities are NOT O AGE HOMES.

### ▸▸▸ Project Highlights ▸▸▸

- Soundaryam @ Idigarai in Coimbatore is spread over five acres and is 3 kms from Thudiyalur on Mettupalay Road in Coimbatore.
- Surrounded by hills in the distance, pristine and eco friendly atmosphere
- Studio Apartment (583 sq ft) 2BHK (890 to 1000 sq ft), 3BHK (1429 sq ft) & Villas (1612 sq ft & 1676 sq ft)
- Excellent infrastructure to include Roads, Walkways, Green Belt, Storm water drains, Street Lights, RO Wa Sewage Treatment Plant, Solar Water Heaters, Tree-lined avenues and Landscaped Gardens etc

### ▸▸▸ Facilities ▸▸▸

- Modern Club House with Lounge, Dining Room, Reading Room, Card & TV Room, Indoor Games, Kitc Pantry, Lift, Ramp, etc.
- Medical Centre with Ambulance
- Activity Centre
- Quarters for staff
- Guest Houses
- Resident Manager
- 24X7 Security
- Amenities include Open Air Theatre, Reading Room, access to Assisted Care Centre, Centre for Alzhei being made available at Soundaryam Comfort Homes. Stand-by Generator for Common areas and lifts. for Villas and apartments.



## ▸▸▸ Services (At Nominal Cost) ▸▸▸

:atering, House-keeping, Gardeners, Garbage disposal, Travel Services including pick-up and drop, ticketing tc. Recreation arrangements including Social Evenings, Religious Tours as well as organizing holidays ırough Travel Agents, Picnics and Outings including Movies and Restaurants, Entertainment, Medical Check-p (Wellness), Lectures on Religion, Spiritualism and common subjects of interest.

reventive maintenance by Electrician, Plumber and Carpenter, Payment of taxes, Telephone and Electricity ills, Guest House facilities, Arrangements for celebrations etc.

mergency services, Evacuation to Hospitals, Geriatric Care including Maintenance of Health Records, Supply f medicines and home needs.

ı-House Doctor and Nurse.



## ▸▸▸ Cost of Dwellings ▸▸▸

**ffordable cost of Rs.17.75 lacs, 26.75 lacs, 42 lacs, 53.50 lacs for Studio, 2BHK, 3BHK apartments and three edroom villas respectively**

ost includes everything except registration and Service Tax

lo Hidden Cost

*Conditions apply

For more details, visit our web site : **www.covaiprop.com**

An ISO 9001 : 2008 certified Company



* Member-CPDA *




An Ex- Serviceman's Enterprise

727, Damu Nagar, Puliakulam Main Road, Coimbatore - 641 045.
Ph : 91-422-2312367, +91-422 6572625,
Mob: 9894317841. Fax: +91-422-2312367.
E-mail: covaiprop@vsnl.net (or) covaiprop@airtelmail.in

**BOOKINGS OPEN**



# குக்கரி க்வீன்!

## கான்செப்ட் சமையல் போட்டி!

குக்கரி தர்பாரில் கலந்துக் கொள்ள சமையல் ராணிகளை அழைக்கிறோம். ஒரிஜினல் சமையல் குறிப்புகளைத் தெளிவாக எழுதி, கீழே உள்ள கூப்பனையும் நிரப்பி அனுப்புங்க. தேர்ந்தெடுக்கப்படும் ஐந்து ரெஸிபிகளுக்கு தலா ரூ. 300/- பரிசு!



குக்கரி க்வீன் சமையல் போட்டி (ஜூலை)

**கலக்கல் கொழுக்கட்டை**

பெயர்:.........................................................................

முகவரி:.......................................................................

..................................................................................

..................................................................................

கடைசித் தேதி: **25.07.2010**

---

இந்த இதழில் 'ஆஹா 50!' என்ற தலைப்பில் இடம் பெற்றுள்ள டிப்ஸ்களைப் படியுங்கள். மிகச் சிறந்த ஒரே ஒரு குறிப்பைத் தேர்ந்தெடுத்து எழுதி அனுப்புங்கள். உங்கள் தேர்வும், ஆசிரியர் குழுவின் தேர்வும் பொருந்தினால் குலுக்கல் முறையில் ரூ.150/- பரிசு! தேர்ந்தெடுப்பவருக்கு மட்டுமல்ல, அந்தக் குறிப்பை எழுதியவருக்கும் ரூ.150/- பரிசு! 'ஜூலை - ஆஹா பரிசு' என்று மறக்காமல் குறிப்பிட்டு பக்க எண், வாசகி பெயருடன் அஞ்சல் அட்டையில் மட்டுமே எழுதி அனுப்புங்கள்.

கடைசித் தேதி: *15.07.2010*



## ஆஹா பரிசு!

## அடிச்சாங்க பரிசு!

ஜூன் (2010) ஆஹா பரிசு போட்டியில் "ரயிலில் முன்பதிவு செய்யும்போது இரவு பன்னிரண்டு மணிக்கு மேல் என்றால் தேதி போடுவதில் கவனமாக இருக்க வேண்டும்" என்ற குறிப்பை எழுதி ரூ.150/- பரிசு பெறுகிறார். இந்திரா சந்திரன், திருச்சி.

அதே டிப்ஸை தேர்வு செய்த பல வாசகியரில் குலுக்கல் முறையில் ரூ.150/- பரிசு பெறுகிறார் பி.மதனவள்ளி, குற்றாலம்.

# பெரிய கடைவீதியில் உங்களுக்கு

# பெரிய லாபம்






916 நகைகளுக்கு சேதாரம்

| | |
|---|---|
| தமிழ்நாடு ஸ்டோன் டிசைன்ஸ் | 5-8% |
| தமிழ்நாடு செயின் | 8-12% |
| தமிழ்நாடு டிசைன்ஸ் | 8-13% |
| கொல்கத்தா டிசைன்ஸ் | 10-13% |
| ஆன்டிக் மாடல்ஸ் | 13-15% |
| ஒட்டியாணம் | 15% முதல் |

**செய்கூலி இல்லை**

+

இதற்கு மேலும்
பவுனுக்கு
**ரூ.500/-**
தள்ளுபடி



Special designs:
Kempu, Antique, Fusion,
Meenakari, Nakasu, Polki and Filigiri.

தங்கத்தை இப்போது 15% மட்டும் செலுத்தி ஆர்டர் செய்து 3 மாதத்திற்குள் மீதி தொகையை செலுத்தி டெலிவரி பெறும் வசதியும் உள்ளது

பெரிய கடை வீதி

## D.A.R jewellery

since -1931

92, Big Bazaar Street, Coimbatore - 1 Phone: 0422 2394586, 4220916, **09952433386**

Sundays open



# பிரமிக்க வைக்கும் பிரசாந்தி!

சில்க் காட்டன் புடவைகளில் சாதனை படைத்து வரும் பிரசாந்தியை பற்றி அனைவரும் ஒரு முகமாகச் சொல்லும் கருத்து–

- பிரசாந்தியில் உள்ள கலர் காம்பினேஷன்ஸ், டிசைன்கள் எங்கும் பார்க்க முடியாது..
- அதேபோல் தரத்திலும் தமக்கென்று ஒரு தனி முத்திரை படைத்து மக்கள் மனதில் ஓர் நிரந்தர இடத்தைத் தக்க வைத்துக் கொண்டுள்ளனர்.
- எல்லாவற்றுக்கும் சிகரமாக, பிரசாந்தியின் கனிவான கஸ்டமர் சர்வீஸ், ஷோரூமின் அமைதிச் சூழல்.. ஆகா.. ஷாப்பிங் செய்ய இதைவிட என்ன வேண்டும்?

## "பிரசாந்தி என்றால் என்ன?"

திருமதி. சிவசங்கரி



திருமதி. சிவசங்கரி

பிரசாந்தி என்றால் - முழுமையான மனநிறைவு, மனத்திருப்தி, மனநிம்மதி - என்று அகராதி பொருள் கூறுகிறது. பிரசாந்தியில் ஸில்க் காட்டன் புடவைகளை நாம் வாங்கினால், முதலில் நமக்குக் கிட்டுவது, நல்ல பொருளை வாங்கினோமென்ற மனநிறைவு மலிவாகவும் வாங்கமுடிவதில் கிடைப்பது, மனத்திருப்தி. நிறைவும் திருப்தியும் சூழும் இடத்தை, தொடர்ந்து நிம்மதி ஆக்ரமிப்பது இயற்கைதானே!



## "என்றென்றும் சாந்தி தரும் பிரசாந்தி"

திருமதி. ரோகிணிராவ், SBI, ஹைதராபாத்

எனது பெண்ணின் திருமணத்திற்காக புடவைகள் வாங்கும் கவலையில் நான் ஆழ்ந்திருந்த போது எனக்கு வரப்பிரசாதமாக அமைந்தது பிரசாந்திதான். ஹைதராபாத்திலிருந்தே கம்ப்யூட்டர் மற்றும் போன் மூலம் கலர் மற்றும் டிசைன்களை செலக்ட் செய்து எனக்குத் தேவையான புடவைகளை குறித்த நேரத்தில் கிடைக்கச் செய்த பிரசாந்தியை என்றும் என்னால் மறக்க முடியாது. திருமணத்திற்கு வந்திருந்த அத்தனை பேரிடமும் பாராட்டுமழை!! ஹேட்ஸ் ஆஃப் அண்டு தேங்க்யூ பிரசாந்தி!!!



திருமதி. ரோகிணிராவ்

## "எங்கள் குடும்ப புடவை பிரசாந்தியின் சில்க் காட்டன்தான்"

திருமதி. ராதா நரசிம்மன், மங்கையர் மலர் எழுத்தாளர், பெங்களூர்



இப்படி சொல்ல வைப்பது நம்மை பிரமிப்பில் ஆழ்த்தும் பிரசாந்தியின் சில்க் காட்டன் புடவைகள்... அப்பப்பா... எத்தனை வெரைட்டி, கண்களை கவர்ந்திழுக்கும் வண்ணக் குவியல்... நாம் கேட்கும் விலையில்... எல்லாவற்றுக்கும் மேலாக பெங்களூர் மல்லேசுவரம் ஜெயநகர் கிளைகளில் புடவைகளை செலக்ட் செய்வது ஓர் புதிய இனிய அனுபவம்... அவர்கள் நமக்குத் தரும் லவ்லி டிப்ஸ் பிரசாந்தியின் கஸ்டமர் சர்வீஸுக்கு ஓர் சிகரம்! 24.6.2010 அன்று பிரசாந்தி திறக்கும் புதிய மல்லேசுவரம் கிளைக்கு எங்கள் மனப்பூர்வமான நல்வாழ்த்துக்கள்...



திருமதி ராதா நரசிம்மன்



# திக்...திக்... லிப்ஸ்டிக்!



பல ஆண்டுகள் முன்புவரை நடிகைகள், விமானப் பணிப் பெண்கள் மற்றும் பெரிய நிறுவனங்களில் பணிபுரியும் நவநாகரிகப் பெண்கள் மட்டும்தான் லிப்ஸ்டிக்கை உபயோகித்து வந்தனர். ஆனால், நாகரிகம் வளர ஆரம்பித்தவுடன், வேலைக்குச் செல்லும் பெண்மணிகளும், கல்யாணம் மற்றும் பல பொது நிகழ்ச்சிகளுக்குச் செல்லும் பெண்களும் உதட்டுச் சாயம் பூச ஆரம்பித்தனர்.

சமீபத்தில் அகமதாபாத்தில் உள்ள 'கன்ஸ்யூமர் எஜூகேஷன் ரிசர்ச் சொஸைட்டி'யின் சோதனைச் சாலையில் சுமார் நாற்பத்தாறு வகையான, சிறிய மற்றும் புகழ் பெற்ற நிறுவனங்களின் உதட்டுச் சாயங்களை ஆராய்ந்தனர். இதில் பத்து ரூபாய்க்குக் கிடைக்கும் மலிவு விலை உதட்டுச் சாயத்தைவிட, நூறு ரூபாய்க்கு விற்கும் சாயத்தில் அதிக அளவு 'நச்சுத்தன்மை' பெற்ற ஈயம் (lead) இருப்பதாகக் கண்டறிந்துள்ளனர். இதை நீண்ட காலம் உபயோகிப்பதால், பெண்கள் மலடாகப் போகவும், கருவுற்ற பெண்ணானால் கருச்சிதைவு ஏற்படுத்தவும் வாய்ப்புள்ளதாகக் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது.

ஆகவே, லிப்ஸ்டிக்கை தினமும் உபயோகிக்காமல், அவசியம் இருந்தால் மட்டுமே போட வேண்டும். குழந்தைகளுக்கு கண்டிப்பாக வேண்டாம்.

- ரமா பாண்டுரங்கன், அகமதாபாத்



## மழை!

நல்ல நீரில் நூல் திரித்து
விண்ணுக்கும் மண்ணுக்கும்
நெய்து பார்க்கும்
சிறிது நேர ஆடை!

- ஆர்.புவனேஸ்வரி, சென்னை - 18

''ம்...என்னடா நிகில் இன்னுமா கௌம்பல? மணியாச்சு, சீக்கிரம்.''

''இதோ'' சாண்ட்விச்சைக் கடித்துக்கொண்டே ஸ்கூல் பேகை எடுத்து முதுகில் போட்டுக்கொண்டான்.

''சீக்கிரம் வாடா. நான் கொஞ்சம் நோட்ஸெல்லாம் காப்பி பண்ணணும்'' ஆர்த்தி வாசலிலிருந்து கத்தினாள்.

படீரென்று கார் கதவை இழுத்துச் சாத்திக்கொண்டு, ''போலாம் டிரைவர் அங்கிள்'' என்றான்.

அருணாவுக்கு மூச்சு முட்டியது. வேக வேகமாக குளித்து, உடை மாற்றிக்கொண்டாள். டைனிங் டேபிளில் தயாராயிருந்த சாண்ட்விச் இரண்டை விழுங்கி தண்ணீரைக் குடித்தாள்.

''பிள்ளைங்களுக்கு சாயங்காலம் என்னம்மா பண்ணி வெக்க?'' சுமதி கேட்டாள்.

''சேமியா கிச்சடி பண்ணிடு சுமதி.''

''நைட்டுக்கு?''

''சப்பாத்தியும் சென்னாவும் பண்ணிடு. நான் ஈவ்னிங் கால் பண்றேன். ஜாக்கிரதையா இரு. எங்க பார்த்தாலும் கொலையும் கொள்ளையுமா இருக்கு. சொல்லிட்டேன்.''

''சரிம்மா.''

சரியாக அவள் வாசலுக்கு வரும்போது டிரைவர் குழந்தைகளை ஸ்கூலில் இறக்கிவிட்டு தெரு முனையில் திரும்பிக் கொண்டிருந்தார்.

''சார ஈவ்னிங் ஏர்போர்ட்டுல இருந்து பிக்கப் பண்ணணும். ஆஃபீஸ் வர வேண்டாம். நான் வேற வண்டி ஏதாவது பாத்துக்கறேன் மூர்த்தி.''

''சரிங்கம்மா.''

''கரெக்ட் டயத்துக்குப் போயிடு. டிலே பண்ணாத.''

''போயிடறேம்மா.''



லக்ஷ்மி மோகன்

# இடை வேளை!



**பெ**ருமூச்சுடன் தன் கேபினுக்குள் நுழைந்தாள். அருணா, அந்த சாப்ட்வேர் நிறுவனத்தின் ப்ராஜக்ட் மேனேஜர். தன் கீழ் இருக்கும் நாற்பது பேரையும் விரட்டி வேலை வாங்க வேண்டும். வெளிநாட்டு ஆர்டர்களை காலம் தாழ்த்தாமல் முடித்துக் கொடுக்க வேண்டும்.

''என்ன அருணா? ஹரி, எப்போ ரிடர்ன்?'' சுந்தர் கேட்டான்.

''இன்னைக்குச் சாயங்காலம்.'' வாய் பதில் தந்தாலும் கண் கம்ப்யூட்டரில் ஓடியது.

மாலை, ஃபோனில் அருணா விசாரித்தாள்.

''சுமதி, பசங்க வந்தாச்சா?''

''வந்தாச்சும்மா.''

''சாப்ட்டாங்களா?''

''சாப்ட்டாங்க.''

''என்ன பண்றாங்க?''

''பாப்பா, ஹால்ல டீ.வி பாத்துட்டு இருக்கு. தம்பி, பெட் ரூம்ல டீ.வி பாத்துட்டு இருக்கு.''

**அ**ன்று அருணா அலுவலில் பரபரப்பாய் இருந்தபோது செல் சிணுங்கியது.

'ஸ்கூல் நம்பராச்சே... இது' பரபரப்புடன் எடுத்தாள்.

''ஹலோ... குட்ஈவ்னிங்.''

''நான் நிகிலோட க்ளாஸ் டீச்சர் பேசறேன்.''

''டெல் மீ மேடம்...''

''நாளைக்கு வந்து என்ன மீட் பண்ணுங்க. ஐ வாண்ட் டு டாக் டு யூ.''

''எனி ப்ராப்ளம் மேடம்?''

''நேர்ல வாங்களேன்... ப்ளீஸ்''

**சிறுகதை**

சிறிது நேரத்துக்கு ஒன்றும் ஓட வில்லை.

**"எ**ன்ன சொல்ற அருணா? ஐ கெநாட் பிலீவ் இட்...."

"எனக்கும் அப்பிடித்தான் இருந்துச்சு. மொதல்ல நம்பவேயில்ல. ஆனா அவங் களும் கொஞ்ச நாளா அவனை க்ளோஸா வாட்ச் பண்ணிட்டுதான் சொல்றாங் களாம். நல்ல சைல்டு சைக் யாட்ரிஸ்ட்டப் பாக்கச் சொன்னாங்க."

"என்ன குறை வெச்சோம் நாம? இத ஜாக்கிரதையா அப்ரோச் பண்ணணும்."

"கரெக்ட். என் க்ளையண்டோட பிர தர் சைல்ட் சைக்யாட்ரிஸ்ட். நாளைக்கே அப்பாயிண்மெண்ட் வாங்கிடறேன்."

"அதைப் பண்ணு மொதல்ல."

மறுநாள்.

"அப்பாயிண்ட்மெண்ட் கிடைச் சுதா?"

"அவர் யு.எஸ். போயிருக்காராம். வர ஒரு வாரமாகுமாம். வேற டாக்டர் யாரா வது பாக்கலாமா?"

"வேணாங்க. அவரே வரட்டும். பொறுத்திருப்போம்."

"என்னம்மா வேலைக்குப் போகல யா?" சுமதி கேட்டாள்.

"ரிஸஷன்."

"அப்டீன்னா?"

நாக்கைக் கடித்துக்கொண்டு, "இடை வேளை. இப்ப நெலம ரொம்ப மோசமா இருக்கு. நீங்கல்லாம் வீட்டுக்குப் போங்க. சரியானப்புறம் கூப்புடறோம்'னு சொல்லி அனுப்பிச்சுட்டாங்க" என்று முடித்தாள்.

**ஸ்**கூல் விட்டு வந்து டிபன் சாப் பிட்டு விட்டு வழக்கம்போல பெட்ரூம் கதவைச் சாத்திக்கொண்டு உள்ளே சென் றான் நிகில்.

ஆறு வயசுப் பையன் கதவைச் சாத்திப்பானேன்.

"என்ன பண்றடா நிகில்?" கதவைத் தட்டினாள் அருணா.

"கார்ட்டூன் பாக்கறேம்மா."

"அதுக்கு எதுக்குக் கதவைச் சாத்த ணும்?"

"அக்கா ஹால்ல டிவிய சத்தமா வெப்பா. அவளும் சேர்ந்து வேற பாடுவா. அதான்."

"இன்னைக்கு நானும் ஒங்கூட பாக்கப் போறேன். பக்கத்தில் வந்து உட்கார்ந்துகொண்டாள்.

**"எ**ன்ன சொல்ற அருணா? ரியல்லி?"






**ஹ**ரிக்கொழுந்து (துளசி) சிவக்கொழுந்து (வில்வம்) ஆத்தாள் கொழுந்து (வேப்பிலை) இம்மூன்று கொழுந்து களையும் அரைத்து (1 டீஸ்பூன் அளவுக்கு விழுது இருக்கட்டும்.) அதை நீரிலோ, மோரிலோ கலந்து, காலையில் வெறும் வயிற்றில் அடிக்கடி சாப்பிட்டு வர, பற்பல உடல் உபாதைகள் நீங்கும். ஒரு வைத்தியர் சொல்லி மிகவும் பயன் அடைந்தேன்.

- ஆர். மீனாக்ஷி, புதுதில்லி

''ஆமா டாக்டர் நெஜம்தான். நேத்து ராத்திரிகூட தூக்கத்துல அந்தக் கார்ட்டூன் கேரக்டர் பேரச் சொல்லிட்டுத் திரும்பிப் படுத்தான்.''

எல்லாவற்றையும் பொறுமையாகக் கேட்ட டாக்டர், ''அப்சல்யூட்லி இது மிரர் நியூரானோட வேலைதான்'' என்றார்.

''புரியல டாக்டர்'' என்றார்கள் இருவரும் ஒரே குரலில்.

''நம்ம மூளைல உள்ள மிரர் நியூரான் அப்படிங்கற நியூரானாலதான் நாம எல்லாமே கத்துக்கறோம். குரங்கு குல்லா கதை தெரியும் இல்லையா. கண் பாக்கறத நாம அறியாம அப்படியே திருப்பி செய்றதுக்கு, இந்த மிரர் நியூரான்கள்தான் காரணம். நல்லது கெட்டதை பகுத்து அறிய முடியாத வயசுல, எதா இருந்தாலும் அப்பிடியே மூளை ஏத்துக்கும். அதான் அந்தத் திருடன் கேரக்டரையே தினமும் ஆழ்ந்து தனியா உக்காந்து பார்க்கும் நிகில், அவன மாதிரியே சின்னச் சின்னத் திருட்டுகள ஆரம்பிச்சுருக்கான்.

''இன்னைக்கு பென்சில், ஸ்கெட்ச் பேனானு ஆரம்பிக்கற பழக்கம்தான் நாளைக்கு பெருசா மாற வாய்ப்பிருக்கு. முளையிலயே கிள்ளி எறிஞ்சிட்டா ப்ராப்ளம் சால்வ்டு.

''இப்பிடித்தான் ரெண்டு மாசம் முன்னாடி ஒரு கேஸ் வந்தது. க்ளாஸ் பசங்கள எல்லாம் அடிச்சு விளாசறான் டாக்டர்னு ஒன்பது வயசு சித்தார்த்தைக் கூட்டிட்டு வந்தாங்க அவன் பேரண்ட்ஸ். விசாரிச்சுப் பார்த்ததுல இதே மாதிரிதான் அப்பா அம்மா ஆபீஸுலருந்து வர லேட்டாகும். அது வரைக்கும் அவன் டீவில குத்துச் சண்டை போன்ற ஃபைட்டிங்கைதான் விரும்பிப் பார்ப்பான். அதுதான் அவனோட செயல்லயும் தெரிய வந்தது.'' மூச்சு விடாமல் டாக்டர் முடித்தார்.

''தேங்க்யூ டாக்டர்.''

வெளியேறினர் இருவரும்.

அன்று ஸ்கூல் விட்டு வந்த நிகிலை, ''கம் ஆன். வி வில் ப்ளே சம் கேம்'' என்று டீ.வியிலிருந்து திசை திருப்பினாள் அருணா. முதலில் மறுத்தாலும் அம்மாவின் ஆஜர், அவனை உற்சாகத்தில் ஆழ்த்தியது.

''நீங்க இனிமே ஆபீஸுக்கே போக மாட்டீங்களாம்மா?'' கழுத்தைக் கட்டிக்




நான் சமீபத்தில் பாரதி கலைக் கழகம் நடத்திய நிகழ்ச்சிக்கு சென்னை நங்கநல்லூரில் உள்ள 'வாழ்க வளமுடன்' மினி ஹாலுக்குச் சென்றிருந்தேன். அங்கு காலணிகளை விட இருந்த இடத்தில் 'உங்கள் காலணிகள் நீங்கள் திரும்பி வரும்வரை அதற்குரிய இடத்தில் இளைப்பாறட்டும்' என்று நல்ல தமிழில் நளினமாக எழுதி இருந்தது என்னை மகிழ்வித்தது.

– கே. பானுமதி, சென்னை – 61



# பஞ்சாமிர்தம்!

கொள்ளுப் பாட்டி - கடையம்மாள், எள்ளுப்பாட்டி - சிவகாமி சுந்தரி, பாட்டி - பார்வதகுமாரி, மகள் - சாரதா தேவி, குழந்தை - கிருத்திகா

கொண்டான்.

''இல்லடா கண்ணா. இனிமே அம்மா ஒன்கூட இருப்பேன்.'' ஸ்கூல் விட்டு வந்தவுடன் ஒருநாள் ஸ்டோரி டெல்லிங், ஒரு நாள் செஸ், ஒருநாள் ஸ்விம்மிங் என்று டைம்டேபிள் போட்டு டீ.வியிலிருந்து குழந்தையைத் திசை திருப்பினாள். அவளும் குழந்தையோடு குழந்தையாய்க் குதூகலித்தாள்.

வாழ்க்கையே முற்றிலுமாய் மாறினாற் போலிருந்தது. தலைவலி, ஸ்ட்ரெஸ், எரிச்சல் ஒன்றுமே இல்லை.

''டீவியுடன் ஒன்றிணைந்து ஆர்த்தி என்ன அழகாய் பாடறா. அவள் பாட்டியின் குரல்வளம் அப்படியே. நல்ல பாட்டு டீச்சராய்த் தேடி வகுப்பில் சேர்த்தாள்.

ஆறு மாதம் கழித்து...

''என்ன நியூஸ் அருணா?'' ஷூவைக் கழட்டிக்கொண்டே ஹரி கேட்டான்.

''ரீ ஜாயின் பண்ணச் சொல்லி மெயில் வந்துருக்கு. அஃபிஷியல் லெட்டரும் வந்துருக்கு.''

''அப்படியா? வெரிகுட்!''

''லேப்டாப்பை மடியில் வைத்துக் கொண்டு அவனருகில் உட்கார்ந்தாள். அவன் பார்த்துக் கொண்டிருக்கும்போதே மெயிலை டெலிட் செய்து ட்ராஷ் பாக்ஸில் சேர்த்தாள்.

''என்னாச்சு அருணா?''

''குழந்தைகள் வளர்ந்து பெரியவர்கள் ஆகும்வரை... கொஞ்ச காலத்துக்கு ரிஸஷன்தான்.''

சிரித்துக்கொண்டே அப்பாயிண்மெண்ட் லெட்டரையும் கிழித்துப் போட்டாள் அருணா.

புன்னகையுடன் அவளையே பார்த்துக்கொண்டிருந்தான் ஹரி. ●

'நெஞ்சில் ஓர் ஆலயம்' படத்துல டாக்டரா நடிச்சாரே கல்யாண் குமார், அப்போது தமிழில் நாடகங்களில் நடித்துக் கொண்டிருந்தார். அவருடைய மனைவியான ரேவதியும் நடிகைதான். கல்யாண்குமாரின் நாடகங்களில் சுருளி ராஜன் நடித்துக்கொண்டிருந்தார். அந்த நாடகங்களிலிருந்தே சுருளியை எனக்குத் தெரியும். முதல் தடவை சுருளியின் நடிப்பை நான் பார்த்தபோது, என்னை மிகவும் கவர்ந்த அம்சம் அவரது வித்தியாசமான குரலும், அந்தக் குரலில் அவர் வசனங்களை நீட்டியும், குறைத்தும் பேசிய ஸ்டைலும்தான்.

நானும், சுருளியும் காமெடி ஜோடியாக நடிச்ச முதல் படம் டைரக்டர் ராமநாராயணனின் 'மீனாட்சி குங்குமம்'. அப்புறம் 'இவள் ஒரு சீதை'ன்னு ஒரு படம் நடிச்சோம். விஜயகுமார், சுமித்ரா, பண்டரிபாய், அசோகன் எல்லோரும் நடிச்ச படம் அது. அந்தப் படத்தில் எங்களுக்கு வீடு வாசல் வேலை எதுவும் இல்லாமல் உதைமணியோட வீட்டுக்கு வந்து ஏதாவது வேலை போட்டுக் கொடுங்கன்னு கேட்போம். அவரும் ''சம்பளம் எதுவும் தரமாட்டேன்; வீட்டுலயே தங்கி வேலை செய்யணும்; வேளாவேளைக்கு சாப்பாடு போடுவேன்''னு சொல்லி வேலைக்கு வைத்துக் கொள்வார். கொஞ்ச நாள் அப்படியே ஓடும்.

**எ**த்தனை நாளைக்கு சம்பளம் இல்லாமல் வேலை பார்க்க முடியும்? ஒரு நாள் ஏதோ சின்ன சண்டை வரும். ''சம்பளமே கொடுக்காம எங்க ரெண்டு பேரையும் வேலை வாங்கினீங்களே''ன்னு நாங்க சொல்ல, ''நீங்க சாப்பிட்ட சாப்பாட்டுக்கு நீங்கதான் பணம் கொடுக்கணும்''னு அவர் திட்ட, பெரிய சண்டையாயிடும். வேலையை விட்டு போகச் சொல்லுவாரு. நாங்க, ''உன்கிட்டே யார் வேலை பார்ப்பாங்க?'' என்று திட்டி விட்டு, அந்த வீட்டிலிருந்து புறப்பட்டுப்போய் விடுவோம்.



**சச்சுவின் அச்சுவெல்லத் தொடர்**

தங்க இடம்? சாப்பாட்டுக்கு வழி? அசோகன், பண்டரிபாய் தம்பதி பத்தி சில விஷயங்களைத் தெரிஞ்சுக்கிட்டு, அவங்க வீட்டுக்குப் போய், அவங்களோட தூரத்து உறவுக்காரங்க மாதிரி நாடகம் ஆடுவோம். அவங்களும் எங்களை நம்பிடுவாங்க. ''காசிக்குப் போகிற வழியில் இந்த ஊருக்கு வந்தோம். வாழ்க்கையில் பணம் காசா முக்கியம்? சொந்த பந்தங்கதானே முக்கியம்?''னு அவங்ககிட்டே சொல்ற மாதிரி எங்களுக்குள்ளேயே பேசிக்கொள்வோம்.

அந்தப் படத்துல காமெடி டிராக் என்னன்னு ஒரு அவுட்லைன்தான் கொடுத்தாங்க. சுருளி, தானே ஆங்காங்கே எகப்பட்ட டயலாக் சேர்த்துக்கிட்டாரு. மொத்தத்துல தியேட்டர்ல அந்தப் படத்தோட காமெடி சீன்களுக்கு நல்ல வரவேற்பு. நம்ம ஊர்லதான் முதல் படம் கிளிக் ஆனா போதுமே! வரிசையா நிறைய படங்கள்ல புக் பண்ணிடுவாங்களே! எங்களுக்கும் அப்படித்தான் ஆச்சு!

**எ**ண்பதுகளின் துவக்கத்தில் மட்டும் இரண்டு வருஷத்தில் நாற்பது படங்களுக்கு மேல் நாங்க சேர்ந்து நடிச்சிருக்கோம் என்பதை இப்போ நினைச்சுப் பார்த்தால் எனக்கு ரொம்ப ஆச்சரியமா இருக்கு. சில நாட்களில் நாங்க ரெண்டு பேரும் வெவ்வேறு இடங்கள்ல, மூணு படங்களோட ஷூட்டிங்ல சேர்ந்து நடிச்சிருக்கோம். நாங்க ரெண்டுபேருமே நல்ல அனுபவம் உள்ளவங்க என்பதால மூணு ஷூட்டிங்கிலுமா சேர்ந்து இருபது, இருபத்தஞ்சு சீன் வரை 'மட மட'ன்னு நடிச்சு முடிச்சுடுவோம். 'முதலிரவு'ன்னு ஒரு படத்துல சுருளியும் நானும் நடிச்சோம். சுருளி என்னை விரும்புவார். ஆனா எனக்கு அப்பாவான கே. ஏ. தங்கவேலு, அதுக்கு சம்மதிப்பாரான்னு அவருக்கு சந்தேகம். ஒரு நாள் சுருளி என்னைப் பார்க்க எங்க வீட்டுக்கு வருவாரு. தோட்டத்துல மாடுகள் இருக்கும். அங்கே நான் நின்னுக்கிட்டு இருப்பேன். சுருளி வந்த சமயம் பார்த்து, என் அப்பா தங்கவேலுவும் தோட்டத்துப் பக்கம்

10

சந்திப்பு : எஸ். சந்திரமௌலி

* படம்: ஸ்ரீஹரி

# ரோஜா மலரே ராஜகுமாரி!




❋ சுருளியுடன் சச்சு!

வந்திடுவாரு. அவரோட பார்வையிலே யிருந்து சுருளி தப்பிக்கணும். அந்த சீன்ல சுருளி தூள் கிளப்பி இருப்பாரு பாருங்க! இன்னிக்கும் அந்த சீனை நினைச்சா எனக்கு சிரிப்பை அடக்க முடியாது.

முதல்ல கொடியில துண்டு ஒண்ணை உலர்த்தற மாதிரி சுருளி நிப்பாரு. அப்புறம் அங்கேயும், இங்கேயுமா கை, காலைக் கோணல் மாணலாக்கிக் கொண்டு, பயந்து ஓடி, சட்டுன்னு ஒரு பசுமாட்டுக்குப் பக்கத்துல உட்கார்ந்துக்கிட்டு பால் கறக்கற மாதிரி நடிப்பாரு. கொடியில கிடந்த துண்டு, இப்போ ஒரு பக்கம் மாட்டோட முதுகிலேயும், இன்னொரு பக்கம் சுருளியின் தலையை மறைச்ச மாதிரியும் இருக்கும். தங்கவேலு அதை கவனிச்சிடுவாரு. சுருளியை, எங்க வீட்டு மாட்டுக்காரன்னு நினச்சிக்கிட்டு ''பால் கறக்க இந்த நேரத்துல ஏன் இவன் வந்திருக்கான்?'' என்பார். நான், ''அவரு ஏதோ வேலையா வெரியூர் போகணுமாம்! அதனாலதான் கொஞ்சம் முன்னாடியே வந்துட்டாரு!'' என்று சொல்லி சமாளிப்பேன். தங்கவேலு விடாமல், ' ''என் அந்தப் பய மாடுமேல துண்டைப் போட்டு மறைச்சு பால் கறக்கறான்?'' என்று கேட்பார். அதற்கு சுருளி, ''மாட்டுக்கு வெட்கமா இருக்காம்! அதனாலத்தான்'' என்பார்.

**சு**ருளியிடம் எனக்குப் பிடிச்ச குணமே அவரோட எளிமைதான். நம்மளோட மினிமம் தேவைகளுக்கு மட்டும் தான் பணம் செலவழிக்கணும். ஆடம்பரமா செலவு செய்யறது தப்புன்னு அடிக்கடி சொல்வாரு. சினிமாவில் ரொம்ப பிசியாக இருந்த கால கட்டத்தில் அவரது கல்லீரல் பாதிப்புக்குள்ளாகி சுருளி இறந்தது ரொம்ப துரதிருஷ்டவசமானது.

எத்தனையோ காமெடி நடிகர்களோட நான் நடிச்சிருக்கேன். ஆனா, என்னோட ஜோடியா நடிக்கணும்னு ஒரு காமெடியன் ஆசைப்பட்டு, கடைசிவரை அது நிறைவேறாமலே போயிடுச்சு. அவர் யார் தெரியுமா? யோசியுங்க... அடுத்த இதழ்ல சொல்றேன்...

**- அச்சுவெல்லம் இனிக்கும்**

தெற்கத்திய கிராமங்களில் ஆடி மாதம் முதல்நாளை பண்டிகையாகக் கொண்டாடும் பழக்கம், பழங்காலந் தொட்டே உள்ளது. புதிதாக திருமணமான பெண்ணின் பெற்றோர், புது மாப்பிள்ளையை வீட்டுக்கு அழைத்து விருந்து வைத்து, இந்த 'ஆடிப்பாலை' வெள்ளித் தம்ளரில் ஊற்றிக் கொடுத்து கௌரவப்படுத்து வார்கள். எல்லாப் பண்டிகைகளுக்கும் முன்னே இந்த ஆடி வருவதால் எல்லாரும் 'ஆடி அழைச்சதா?', என விசாரிப்பார்கள்.

## ஆடிப்பால்

பண்டிகை

**தேவையான பொருள்கள்:**

மிகவும் முற்றலாக இல்லாமலும், அதிக வழுக்கையாக இல்லாமலும் இளந் தேங்காய்த் துருவல் - 2 கப், ஏலப் பொடி - ½ டீஸ்பூன், சர்க்கரை - ½ கப், முந்திரி - 10, குங்குமப் பூ - 5 இதழ், பச்சை கற்பூரம் - சிறிது, ஊற வைத்த பச்சரிசி - 2 டீஸ்பூன், நெய் - 1 டீஸ்பூன்.

**செய்முறை:**

பச்சரிசியையும், தேங்காய்த் துருவலையும் மிக்ஸியில் போட்டு அரைத்து முதல் பால், இரண்டாம் பால், மூன்றாம் பால் எனத் தனித்தனியே பிழிந்தெடுக்கவும்.

மூன்றாம் பாலை ஒரு அடி கனமான பாத்திரத்தில் ஊற்றி, இரண்டு நிமிடங்கள் கழித்து இரண்டாம் பாலை விட்டு சர்க்கரையைச் சேர்க்கவும். இதில் அரிசி சேர்த்திருப்பதால் அடி பிடிக்கக் கூடும். அதனால் கை விடாமல் கிளறவும்.

சர்க்கரை கரைந்ததும் முதல் பாலைச் சேர்த்து இலேசாகப் பொங்கி வரும்போது அடுப்பை அணைக்கவும். (அதிக நேரம் கொதிக்க வைத்தால் தேங்காயிலிருந்து எண்ணெய் பிரிந்துவிடும்.)

வாணலியில் நெய்விட்டு முந்திரியை வறுத்து சிறியதாக உடைத்துப் போடவும். ஒரு டீஸ்பூன் பாலில் குங்குமப் பூவைக் கரைத்து ஊற்றவும். ஏலப்பொடியையும், பச்சைக் கற்பூரத்தையும் சேர்க்கவும். அடுத்த ஆடி எப்போது வரும் என உங்களின் ஆவலைத் தூண்டும் இந்த ஆடிப்பால்!

- எஸ். ரமாமணி, சென்னை



திருமணத்துக்கு முன் ஆண்/பெண் இருவரும் சேர்ந்து வாழ்வதிலோ இல்லை உறவு கொள்வதிலோ சட்டப் படி தப்பில்லை என்று உச்சநீதிமன்றம் கூறியிருப்பது எல்லார் புருவத்தையும் உயர்த்தி வியக்க வைத்துவிட்டது. இந்திய கலாசாரம், பண்பாடு, இந்திய உறவு முறையை வியந்து, பாராட்டி, ஆராய்ச்சி செய்ய வெளிநாட்டவர் இங்கே வந்து பழகி இந்திய பெண்களைத் திருமணம் செய்துகொண்டு இங்கேயே செட்டிலாகி வருவது நடந்து கொண்டிருக்க.... நம்மவர்களோ அதுவும் கல்லூரி வாழ்க்கை முடிந்து வேலை கிடைத்தவுடன் பிடித்தவனுடன் சேர்ந்து வாழ்வதில் தப்பில்லை என்ற கலாசாரத்தை நடைமுறைபடுத்தி வருகிறார்கள். இதில் நிறைந்திருக்கும் ஆபத்து தெரியாமல் அகல கால் வைப்பது சரிதானா? எதனால் இந்த மாற்றம்?

### அவர்கள் தரப்பு வாதம்

★ இருவரும் வேலைக்குச் செல்வதால் ஏகப்பட்ட பேங்க் பாலன்ஸ். தன்னிறைவு. இதனால் யாரும் யாரையும் சார்ந்திருக்க வேண்டிய அவசியம் இல்லை.

★ திருமணமானால் அது ஒரு ஒப்பந்தம் என்ற நிணிப்பாகிவிடும். விட்டுக்கொடுத்தல், அரவணைத்தல், தியாகம் செய்தல்... இதெல்லாம் எங்களுக்கு சரிபட்டு வராது.

# சேர்ந்து வாழ்வதில்



★ பிடிக்கும் வரை சேர்ந்து வாழலாம். சரிபட்டு வராமல் போனால் விலகிடலாம். இதனால் ஒருவர் மேல் மற்றொருவரின் ஆதிக்கம் கிடையாது. உனக்குப் பிடித்தது உனக்கு. எனக்குப் பிடித்தது எனக்கு என்ற உறவுமுறை நடைமுறையில் சுலபமாக இருக்கிறது.

★ சேர்ந்து வாழும்போதே அடுத்தது பெட்டர் அல்லது பெஸ்ட் என்று கவரப்பட்டால் 'டாடா' சொல்லிவிட்டு விலகிவிடலாம். திருமணமானால் கோர்ட், விவாகரத்து தேவையில்லாத சமூகச் சாடல் அதைவிட விவாகரத்து ஆனவர்கள் என்ற முத்திரையால் ஏற்படும் மனக்கசப்போ அல்லது மனச்சோர்வோ கிடையாது. என்றும் புதுமை என்றும் இளமையாக வாழலாம்.

★ திருமண உறவில் இரண்டு குடும்பங்கள் இணைவதால் உன் குடும்பம், என் குடும்பம், அவர்களுக்காகத் தியாகம் செய்தல், விட்டுக் கொடுத்தல் எல்லாம் செய்ய வேண்டி வரும். இதனால் என் வாழ்க்கை உயர்ச்சி தடைபடும். அதெல்லாம் சுத்த போர்!

★ கட்டுப்பாடு மிக்க பழைமைவாதிகள் உள்ள குடும்பத்தில் மாட்டிக் கொண்டு அவர்கள் வீட்டுப் பழக்கத்தை கடைப்பிடிக்க முடியாமல் விழிப்பதை விட இது மேல். அதைவிட கணவன் - மனைவி என்ற பந்தத்தை ஒப்பந்தம் செய்துவிட்டால் மனைவியிடம் ஒருவித அலட்சியம் ஏற்படும். இவள் எங்கே என்னைவிட்டுப் போக முடியும் என்ற நினைப்பு வந்துவிடுவதால் பல குடும்பங்களில் பிரச்னை வருகிறது. இந்தப் பந்தத்தில் அது கிடையாதே? ஜாலியாக, சுதந்திரப் பறவையாக வாழலாம்.

★ இப்படிச் சேர்ந்து வாழ்வது வாழ்க்கையில்லை என்று நினைப்பதே தவறு. இந்த வாழ்க்கை முறையிலும் இரு உள்ளங்களின் ஆழமான உறவு முறைதான் அதை நிலைபடுத்துகிறது. அப்படி இல்லாத உறவுமுறை திருமண மாணவர்களிடமும் நிலைக்காது. விவாகரத்து ஆகிவிடும். அதனால் இரண்டு வாழ்க்கை முறையும் ஒன்றுதான். ஆனால், அதன்மேல் ஒட்டப்படும் லேபிளின் முகவரி மட்டும்தான் வேறு.

## ...ப்பில்லை!?

## நம் தரப்பு வாதம்

★ இப்படிப்பட்ட உறவினால் பிறந்த குழந்தைகள் பெரும்பாலும் மனச்சிதைவுக்கு உட்படுகிறார்கள் என்று ஆராய்ச்சி கூறுகிறது. தாயால், 'இவர்தான் உன் தந்தை!' என்று கூற முடியாமல் போகும்போதோ, இல்லை... தாய் தனக்குப் பிடித்த இன்னொருவரைத் தேர்ந்தெடுத்து வாழும்போதோ இந்தக் குழந்தையின் அந்தஸ்து தாழ்த்தப்படுகிறது. சுற்றத்தினரும், உறவினர்களும் அக் குழந்தையை ஒதுக்கிவிடுவதால் தாயின் மீது வெறுப்பு ஏற்படும். படிப்பில் நாட்டமின்மை, புரிந்து கொள்வதில் குறைபாடு, மனச்சிதைவு நோய் இப்படி பல வகையில் இக் குழந்தைகள் மிக இள வயதிலேயே பாதிக்கப்படுவதால் வளர்ந்த பின் ஒரு சமூகக் குற்றவாளியாகக்கூட மாறி விட வாய்ப்பு அதிகம்.

## -கவலை தரும் தீர்ப்பு!

★ சேர்ந்து வாழும் பந்தத்தில் எந்தவித கட்டுப்பாடோ ஆதிக்கமோ இல்லாததால் உள்ளார்ந்த அன்பு, கனிவு, கருணை, பிடிப்பு எதுவுமே இருக்காது. தேனை நாடிப் பறக்கும் வண்டுபோல மாறத் துடிக்கும் மனம் மட்டுமே இருக்கும். இதனால் வாழ்க்கையில் ஒரு நிரந்தரப் பிடிப்பு இருக்காது. ஏனோதானோ உறவாகிவிடும். இதில் மாறிப் போனவர்களுக்கு பாதிப்பு இருக்காது. நல்ல உறவு முறை என்று நினைத்து வாழ்ந்த எதிராளியின் மனம் உடைந்துபோய் மனச்சிதைவு ஏற்பட அதிக வாய்ப்பு உள்ளது.

★ இந்த வாழ்க்கை முறையில் பல பேர்களின் பந்தம்/உறவு முறை இருப்பதால் ஹெச்.ஐ.வி நோயின் தாக்கம் அதிகமாகும்.

★ லிவிங் டு கெதர் உறவு முறையில் பிறந்த குழந்தைகள் இந்திய சட்டத்தின் முன் செல்லாக்காசாகி விடுவார்கள். சமூக அந்தஸ்து மட்டும் தொலைந்து போகாது. கூடவே ஸ்கூல், சொத்து என்று சட்டப் பிரச்னை வந்தால் தாய்/தந்தை என்று முறைப்படி சுட்டிக் காட்ட வலுவான பத்திரங்கள் இருந்தாலே எதற்கும் பிரயோஜனப் படும். இதெல்லாம் தெரிந்துதான் வாழ்கிறார்களா? புரியவில்லை.



★ அவர்களுக்குள் ஒரு பிரச்னை என்று வந்து விட்டால் கைகொடுத்து தூக்கிவிட எந்த உறவும் வரத் தயங்குவார்கள். ஒட்டு மொத்தமாக சமூகத்தில் சுற்றத்தினர், உற்றாரின் மதிப்பு, மரியாதை என்று எதுவுமே கிடைக்காது. இப்படிப்பட்ட புறக்கணிப்பு மனச்சோர்வை ஏற்படுத்தும். நண்பர்கள் கூட ஒரு சமயத்தில் விலகிப் போவார்கள்.

இனி தீர்மானியுங்கள். இப்படிப்பட்ட நிரந்திரமில்லாத வாழ்க்கை தேவைதானா? சுதந்திரப் பறவையாக கட்டுப்பாடில்லாத தான் தோன்றி வாழ்க்கையெல்லாம் உடலில் இளமையும் முறுக்கும் இருக்கும்வரை இனிப்பாக இருக்கும். கஷ்டம் தெரியாது. பணமே வாழ்க்கையாகிவிடாது. முதுமையில் மனம் நிலையாகப் பிடித்துக் கொள்ள ஊன்றுகோல் தேடும்போது எந்த உறவும் கை கொடுக்காது. ஆதரவற்று நிற்க வேண்டிய நிலை வரும். பெற்றோர்கள் அதிலும் தாய் இந்த உறவுமுறை பற்றிய விழிப்புணர்வை குழந்தைகளுக்குப் புரிய வைக்க வேண்டிய கால கட்டத்தில் இன்று உள்ளோம். கல்லூரியில் கால் எடுத்து வைக்கும்முன்னே இதை உபதேசிக்கா விட்டால் காலங்கடந்த உவமையாகிவிடும். மனம் அந்த வாழ்க்கையில் லயித்து ஈடுபாடு ஏற்படும் முன் தாய் விழித்துக்கொண்டு, அதன் பின் விளைவுகளை சுட்டிக்காட்டி உணர்த்த வேண்டும். உறவின் முன்னோ, சட்டத்தின் முன்னோ செல்லுபடியாகாத இவ்வாழ்வு ஒரு கானல் நீர்தான். அன்பு, கனிவு, கருணை என்ற உறவால் பின்னிப் பிணைக்கப்படும் இந்தியப் பண்பை குலைத்து நாடோடி வாழ்க்கைக்கு அனுமதி தர சட்டமே முன் வந்தாலும் அதை ஆதரிக்க வேண்டுமா? யோசிப்பீர்களா?

- ஷியாமளா சுவாமிநாதன், திருவனந்தபுரம்

---





கல்யாணத்துக்குப் பரிசு கொடுக்கும்போது ஒரு மடக்குக் குடை கொடுத்தால், வெயில், மழைக்கு உதவும்.

- ஆர். பார்வதி, சென்னை - 53

Mambalam Iyers™
THE TRADITIONAL TASTE

மாம்பலம்
ஐயர்ஸ்



# சமையல் இப்போ ரொம்ப ஈசி !

**ரைஸ் மிக்ஸ் பேஸ்ட்**

- புளியோதரை
- தக்காளி
- எலுமிச்சை
- வத்தக்குழம்பு
- பூண்டு குழம்பு
- வெங்காயக் குழம்பு
- புதினா இலை
- கருவேப்பிலை
- கோங்குரா இலை
- கொத்தமல்லி
- புளி இஞ்சி
- மிளகு ரசம்

**ஊறுகாய்கள்**

- வடுமாங்காய்
- எலுமிச்சை
- மாங்காய்
- ஆவக்காய்
- மாங்காய் தொக்கு
- நெல்லிக்காய்
- பூண்டு
- இஞ்சி
- கடாரங்காய்
- நார்த்தங்காய்

**அப்பளம்**

**பொடி வகைகள்**

- இட்லி மிளகாய் பொடி
- சாம்பார் பொடி
- பருப்பு பொடி
- ரைஸ் உப்புமா மிக்ஸ்
- சட்னி பொடி
- ரசப் பொடி
- அடை மிக்ஸ்
- பஜ்ஜி மிக்ஸ்

**ஸ்குவாஷ் (ஜூஸ்)**

- நன்னாரி
- எலுமிச்சை இஞ்சி
- ரோஸ்
- எலுமிச்சை மின்ட்
- கிரேப் ஸ்குவாஷ்

**Manufactured by**
Mangaiyar Food Products

**Marketed by**
Thai Food Products

Ph : 044 - 24718830,27498607,Cell : 9841438729
www.mambalamiyers.com



**கா**ஞ்சிப் பட்டுடுத்தி
கஸ்தூரிப் பொட்டு வைத்து
தேவதைபோல் வந்தாள்
அன்றைய காதலி
சுடிதார் அணிந்து வந்த
சொர்க்கம் - இன்றைய காதலி!

பட்டுச் சேலை காற்றாட
காதோரம் லோலாக்கு
கதை சொல்ல
கல்யாண வளையோசை கொண்டு
மெட்டி ஒலி
காற்றோடு தாலாட்ட
ஊராரின் சந்நிதியில்
பூ முடித்தாள் பூங்குழலி, அன்று...
''ஓடிப்போயி கல்யாணந்தான்
கட்டிக்கலாமா?''- இன்று!

நாடுவிட்டு நாடு வந்தால்
பெண்மை நாணமின்றி
போய் விடுமோ என
காதலை நாணத்தில்
மறைத்தது - அன்று
''டாடி - மம்மி வீட்டிலில்லை
தடைபோட யாருமில்லை
விளையாடலாமா?'' - இன்று

பெண்மை வாழ்கவென்று
கூத்திட்டது, அன்று...
பெண்மையே கூத்திடுவது, இன்று!

-மீனாக்ஷி பட்டாபிராமன், மதுரை

# அன்றும்... இன்றும்!

இப்பொழுதெல்லாம் சில வயதான தாய் தந்தையர்கள் கதி, நம்மைக் கலங்க வைக்கிறது. எனக்கும் தொண்ணூற்றி இரண்டு

# "எங்கள்

வயதில் ஓர் அம்மா இருக்கிறாள். எங்கள் குடும்பத்தில் தம்பி, மனைவி இரு மகன்கள், நான், அம்மா இருக்கிறோம். அம்மாவைப் பார்த்துக் கொள்வதற்காகவே நான் வேலையிலிருந்து ஓய்வு பெற்றேன். அம்மாவுடன் இருப்பதில் மகிழ்ச்சியை அனுபவித்ததால் ஒரு சிரமமாகவோ பாரமாகவோ தோன்றுவதில்லை.

எங்கள் அம்மா வேதாம்பாள், தன் காலத்தில் ரொம்பவே சுறுசுறுப்பாக இருந்திருக்கிறாள். மனத்தில் இன்னும் அந்தத் துடிப்பு இருக்கிறது. சரீரம் ஒத்துழைப்பதில்லை. அம்மா எண்பத்தைந்து வயதுவரை வீட்டு காரியங்கள் எல்லாம் செய்துகொண்டிருந்தார். அம்மாவுக்கு பிள்ளை வழி முதல் பேரன் எழுபது வயதில்தான் பிறந்தான். அதற்கு இரண்டு வருடம் கழித்து இரண்டாவது பேரன். அம்மாதான் இருவரையும் பார்த்துக்கொண்டார்கள். அவர்களை பஸ் ஸ்டாப்பிலிருந்து கூட்டிவந்து, டிரெஸ் மாற்றி, சாப்பாடு கொடுத்து, தூங்க படுத்தி என்று எவ்வளவு வேலைகள். இப்பொழுது பெரிய பேரன் இதோ இன்ஜினியர் ஆக போகிறான். சிறியவன் பி.டி.எஸ் முடிக்கப்



போகிறான். இந்த அம்மாக்களுக்கு நாம் என்ன செய்தால் தகும்? அம்மாக்கள் நல்ல குழந்தைகளை மட்டும் வைத்துக்கொண்டு பிடிவாத, படிக்காத, மூளையில்லாத, வியாதிக்கார குழந்தைகளை எல்லாம் வெளியே தள்ளி இருந்தால் பாதி குழந்தைகள் ரோட்டில் இருந்திருக்கும்.

எங்கள் அம்மா காலையில் ஆறு மணிக்குள் எழுந்து விடுவார். அவர்களுக்கு நாங்கள் ஒரு பெண் உதவியாளர் போட்டிருக்கிறோம். அவள், அம்மா காபி சாப்பிட்டபின் அம்மாவிற்கு கை கால் பிடித்து விடுவாள். கழுத்துக்கும், கால்களுக்கும் கொஞ்சம் எக்செர்சைஸ் பண்ணி விடுவாள். வேறு பெரிய நடவடிக்கை எதுவும் இல்லாததால், இப் பயிற்சிகள் உடம்பை இலகுவாக்கும். இதற்குப் பின் அம்மா காலை கடன்களை முடித்துக்கொண்டு குளித்துவிடுவாள். அடுத்தது பக்தி சிரத்தையாக உட்கார்ந்துகொண்டு கிட்டதட்ட நூறுமுறை ராம-ராம எழுதிவிட்டு ஜப மாலை ஜபிப்பாள். பின்னர் மெதுவாக வாக்கர் பிடித்துக்கொண்டு நடந்து வீட்டுக்குள்ளேயே இரண்டு சுற்று வருவார். அதன் பிறகு காலை டிபன்.

எல்லோரும் சேர்ந்து பஜனைப் பாடல்கள் பாடுவோம். பிறகு என் அக்கா பெண்ணும் சென்னையிலிருந்து 'ஸ்கய்ப்பில்' வருவாள். அதிகம் அவளுடனும் பாட்டு தான். எங்கள் பெரிய அக்கா தன் மகன் குடும்பத்துடன் டெல்லியிலேயே இருக்கிறாள். அக்கா முக்கால்வாசி சனி ஞாயிறும் அம்மாவுடன் இருப்பதற்கு முயற்சி செய்வாள். அக்கா பையன் அம்மாவை நன்றாக சீண்டுவான். அவன் மனைவி அம்மாவுக்குப் பிடித்ததாக ஏதாவது பண்ணி வருவாள். அம்மாவுக்கு எல்லோரும் சேர்ந்து இருக்க ஆசைதான். வெளியூர் அக்கா, அத்திம்பேர், அக்கா பெண் எல்லோரிடமும் சனி, ஞாயிறு இங்கு டெல்லி வந்து விடச் சொல்வார். மறதியினால் கேள்விகளுக்கு கோவையாக பதில் வருவதில்லை. சில சமயம் அப்பா போனதே தெரியாது என்று வருத்தப்படுவாள். டீ.வியில் சீரியல் எல்லாம் ரசித்துப் பார்த்தது போய், சில முகங்கள் சொந்தக்காரர்களாகவும் சில



# வயது அம்மா!,,

இவர்கள் சாப்பாட்டிலும் கவனம் தேவை. சாப்பாடு சத்தாகவும் எளிதாகவும் இருக்க வேண்டும். இதற்குப்பின் சிறிது நேரம் ஓய்வு.

காலை பத்து மணி அளவில் எங்கள் வெளியூர் அக்கா, அத்திம்பேர் 'ஸ்கய்ப்பில்' வருவார்கள். அம்மாவும் அவர்களுடன் அரை மணி நேரம் பேசுவார். கொஞ்சம் ஞாபக மறதி வந்துவிட்டதால் அதிகமாக பேரைப் பார்த்து பயப்படுவதும் ஆகிவிட்டது. அதனால் இப்பொழுதெல்லாம் பஜனை, பாட்டு மட்டும்தான்.

மதியம் 12.30 மணி அளவில் சாப்பிட்டுவிட்ட பின்பு சற்று ஓய்வு. பின்பு காபி டயம். அடுத்த ஒரு மணி கேரம் விளையாட்டு. அம்மா ஒரு காலத்தில் கேரம் சாம்பியன் ஆக இருந்தார். இப்பொழுதும் தன் வயதிற்கு நன்றாகத்

தான் விளையாடுகிறார். நாமெல்லாம் இந்த வயதில் இப்படி விளையாட முடியுமா என்று சந்தேகம்தான். அடுத்து சிறிது நேரம் டீ.வியில் பக்தி சேனல் பார்ப்பார். பின்னர் துணி மடிப்பது வேலை. அம்மா மடித்தால் துணியை பிரஸ் பண்ண வேண்டிய அவசியமே இருக்காது. தவிர அழகாக யார் துணி என்று பிரித்து வைத்து விடுவார். ஐந்து மணிக்கு டிபன் சாப்பிட்டால் இன்னும் கொஞ்சம் ஓய்வு. தம்பியும் மனைவியும் ஆபீஸிலிருந்து திரும்பியபின் இன்னும் ஒரு மணி, நாலு பேர் கேரம் விளையாட்டு. இதில் எப்பொழுதும் தம்பி தான் அம்மாவுக்கு ஜோடி. அவன் அம்மாவைச் சீண்டிக்கொண்டே இருப்பான் அம்மாவும் அவனுக்கு சரிக்குச் சரி பதில் அளிப்பாள். அந்த ஒரு மணி நேரம் எங்களுக்கு காமெடி டயம்தான். சிரிப்பு வெடிகள் கேட்டுக்கொண்டே இருக்கும். அம்மாவுக்கு பல்லும் இல்லாததால் சிரித்தால் அழகாக இருக்கும்.

**நா**ங்கள் எங்களால் முடிந்தவரை அம்மாவின் அவசியங்களையும் ஆசைகளையும் பூர்த்தி செய்ய முயலுகிறோம். தம்பி அடிக்கடி சொல்வான். 'இவ்வளவு நாட்கள் நாம் அம்மாவின் குழந்தைகள். இனி அம்மா நம் குழந்தை' என்று. அது ரொம்ப நிஜம். சின்ன குழந்தை மாதிரி சில சமயம் பிடிவாதம்கூட பிடிப்பார். அக்கா வீட்டுக்கு, அத்தைவீட்டுக்கு என்று அழைத்துப் போவோம். மரணம் என்றாலே பயம். எல்லோரையும் எப்படி விட்டுப் போவோம் என்று.

ஒருமுறை கால் எலும்பு உடைந்து ஆபரேஷனும், இன்னொரு முறை ஆக்ஸிஜன் போதாமையாலும் ரொம்ப சீரியஸ் ஆக இருந்திருக்கிறார். இருமுறையும் தன் மன பலத்தினால், சரியானார். அதற்குப் பிறகும் எவ்வளவோ முன்னேற்றம் இருக்கிறது. வாழ்க்கையில் ஒரு பிடிப்பு இருப்பது ரொம்ப சந்தோசமான விஷயம்தானே!

எங்களால் முடிந்தவரை அம்மாவைப் பார்த்துக் கொள்கிறோம். அம்மா கஷ்டப் படாமல் இருக்க வேண்டும் என்பதுதான். எங்கள் எல்லோர் பிரார்த்தனையும்.

இதை எழுதுவதின் நோக்கம் என்ன வென்றால் இதுவரை பெரியவர்களின் மகிமையைப் புரிந்து கொள்ளாதவர்கள் யாருக்காவது அவர்களைப் பராமரிப்பது அவ்வளவு கஷ்டம் இல்லை என்று தோன்றி, அவர்களை நன்றாகப் பார்த்துக் கொள்ள மாட்டார்களா என்பதுதான் எங்களைவிட அருமையாகப் பெரியவர்களைப் பார்த்துக் கொள்பவர்கள் எவ்வளவோ பேர் இருப்பார்கள். அவர்களுக்கு எங்கள் வணக்கங்கள்!

**- டி.ஏ.கமலா, புதுதில்லி**






**கா**லை ஒன்பது மணி முதல் பதினொரு மணி வரை மண்ணீரல் வேலை செய்யும் நேரம். இந்த நேரத்தில் நீங்கள் சாப்பிட்ட உணவிலிருந்துதான் சத்துக்கள் கிரகிக்கப்பட்டு சக்தியாக அனுப்பப்படுகிறது. மூளைக்கு வேண்டிய பாஸ்பரஸும் சேகரிக்கப்படுகிறது. ஞாபகத் திறன் செழிக்கிறது. ஆகவே வைட்டமின் நிறைந்த பால், முட்டை, தேன், இட்லி, காய், பழம், கீரை, போன்றவற்றை காலை ஒன்பது மணிக்குள் சாப்பிட்டால் உடல் ஆரோக்கியம் மேம்படும்.

**- டாக்டர் சி.வி அருணா, கோவை**

ஆழ்மனம்-6

# மை டியர்

நமது உடலில் ஏற்படும் பல உபாதைகளுக்கு மனம்தான் காரணம் என்பதற்கு சந்திரிகாதேவி மிகச் சரியான உதாரணம். அவருக்கு 53 வயதாகிறது. ஒரு பெரிய நிறுவனத்தின் நிர்வாகியாக இருக்கிறார். அவரது பிரச்னை தீராத உடல் உபாதைகள். பல வருடங்களாக தொடர்ந்து ஏதேனும் உடல் நலக் குறைவால் தினமுமே அவதிப்பட்டுக் கொண்டிருக்கிறார்.



# மைண்ட் பவர்

''எத்தனையோ மருத்துவம் பார்த்து விட்டேன். ஒரு பிரச்னை சரியானவுடன் அடுத்த பிரச்னை வந்துவிடுகிறது. எல்லா விதமான பரிசோதனைகளும் செய்து பார்த்தாச்சு! எல்லாமே நார்மல்னுதான் வருது. ஆனால் திடீர்னு நெஞ்சுவலிக்கும். மூச்சுவிட சிரமமா இருக்கும். அது சற்று குறைந்ததும் வயிறு வலிக்கத் துவங்கும். இப்படி ஏதேனும் பிரச்னைகள் ஒண்ணு மாறி ஒண்ணு தொடர்ந்து வருகின்றன. கடைசியில் டாக்டர்கள் எனது மனத்தில்தான் ஏதோ பிரச்னைனு சொல்லிட்டாங்க. என்ன செய்றது?'' கேள்வியுடன் என்னைப் பார்த்தார்.

''இது போன்ற மோசமான உடல் நிலையுடன் தினசரி வேலைகளை எப்படிச் சமாளிக்கிறீங்க? அடிக்கடி லீவு எடுப்பீங்களா?''

''அதெல்லாம் இல்லை. எவ்வளவு உடல் உபாதை இருந்தாலும் அலுவலகத்துக்குப் போய் என் அறையில் உட்கார்ந்துப்பேன்!''

''வேலையில பிரச்னைகள் அதிகம் இருக்குமா?''

''ஆமாங்க, தினமும் விதவிதமான பிரச்னைகள்தான்.''

''அதையெல்லாம் இந்த உடல் நிலையுடன் எப்படிச் சமாளிக்கிறீங்க?''

சந்திரிகாவின் முகத்தில் சட்டென்று ஓர் ஒளி. பூவாக மலர்ந்தது. புன் சிரிப்பு.

''என்னோட இந்த உடல்நிலைதான் எனக்கு ரொம்ப உதவியா இருக்குது. எப்படின்னா, என்னோட அறைக்கு ஏதேனும் ஒரு பெரிய பிரச்னையுடன் ஒருவர் பேச வருவார். நான் மூச்சு வாங்கியபடியோ, இருமிக் கொண்டோ, பேச முடியாமல் தவிப்பதைப் பார்த்ததும் அந்தப் பிரச்னையை அப்படியே விட்டுவிடுவார். அல்லது பிறகு பார்த்துக் கொள்ளலாம்னு போய்விடுவார். அந்த வகையில் இந்த உடல்நிலையே எனக்கு சௌகரியமா இருக்கு.'' என்றாரே பார்க்கலாம்!

சந்திரிகாவின் உடல்நலக் குறைவுக்கான காரணம் உங்களுக்கும் புரிந்திருக்கும் என நினைக்கிறேன். தினம் தினம் பல பிரச்னைகளை எதிர்கொண்டு தீர்வு காண வேண்டிய சூழ்நிலை அவருக்கு. உடல்நிலை சரியில்லை என்பது மற்றவர்களின் அனுதாபத்தை அவருக்குப் பெற்றுத் தந்தது. அதுவே அந்தப் பிரச்னைகளிலிருந்து நழுவவும் அவருக்கு உதவியது. இதைப் புரிந்துகொண்ட அவரது மனம், தொடர்ந்து பல பிரச்னைகளை அவரது உடலில் தோற்றுவித்தது.




டாக்டர் விஜயலக்ஷ்மி பந்தையன்

அவரது ஆழ்மனத்தில் புதைந்திருக்கும் அந்த எண்ணத்தை எப்படி வெளியில் எடுப்பது? அடுத்தக்கட்ட நடவடிக்கை எடுக்கப்பட்டது. அவருக்கு இதை மிக வும் கஷ்டப்பட்டு புரிய வைத்தேன். நல்ல உடல் ஆரோக்கியம் என்பது ஒரு மிகப் பெரிய வரப்பிரசாதம். தவறான சிந்தனையினால் அதைக் கெடுத்துக் கொள்வது எவ்வளவு விபரீதம் என்பதைப் புரிய வைத்தேன். உடலும் மனமும் ஆரோக்கியமாக, தெம்பாக இருந்தால்தான் எந்தப் பிரச்னையையும் நாம் எதிர்கொண்டு ஜெயிக்க முடியும் என் புரிந்துகொண்டார்.

ஆல்ஃபா தியானம் பற்றி அவருக்கு விளக்கினேன். தியானத்தின் மூலம் மூளை யின் வேகத்தை விநாடிக்கு 14 சைக்கிளுக் குக் கீழே கொண்டு வர முடியும். 7- 14 சைக்கிள் என்பது ஆல்ஃபா நிலை. அந்த நிலையில் ஆழ்மனம் திறக்கிறது. நமது ஆழ்மனதுக்குத் தகுந்த கட்டளைகள் கொடுத்து அங்கிருக்கும் தேவையற்ற எண்ணங்களை மாற்றிவிட முடியும்.

'நான் ஆரோக்கியமாக இருக்கிறேன்'

'எனது ஆரோக்கியம் எனக்கு மிகவும் முக்கியம்.'

'என் உடலும் மனமும் நிம்மதியாக இருக்கின்றன.

'என் உடல் மிகுந்த சக்தியுடன் இருக்கிறது.

'எனது ஆரோக்கியம் எனக்கு நன்னம் பிக்கையைத் தருகிறது.

இதுபோன்ற ஆக்கப்பூர்வமான வாக் கியங்களை கட்டளைகளாக ஆல்ஃபா தியான நிலையில் தன் ஆழ்மனத்தில் தினமும் பதிய வைக்கும்படி சொன் னேன். அவரும் அதைத் தொடர்ந்து செய்துவந்தார்.

ஒரு மாதம் கழித்து அவர் மீண்டும் என்னைச் சந்தித்தார்.

''என்னால நம்பவே முடியலை. நான் ரொம்ப சந்தோஷமா இருக்கேன். இந்த ஒரு மாசத்துல் ஒருநாள்கூட உடம்புல சின்ன பிரச்னைகூட வரலை. பூரண ஆரோக்கியத்துடன் இருக்கிறேன். எல்லா பிரச்னைகளையும் என்னால எதிர்கொண்டு சமாளிக்க முடியுது. என்னைச் சுற்றி இருப்பவங்களும் மாற்றத்தைக் கண்டு மிகவும் மகிழ்ச்சியா இருக்காங்க!'' என்றபோது, அவரிடம் நான் பார்த்த சுறுசுறுப்பு, எனர்ஜி லெவல், பிரமிக்க வைப்பதாக இருந்தது. அடுத்தவர்களின் இரக்கத்தை சம்பாதித்துத் தரும் நோயைவிட தனது தன்னம்பிக்கையையும், திறமையையும் வளர்க்கும் ஆரோக் கியமே சிறந்தது என்பதை சந்திரிகா புரிந்துகொண்டார். ஏற்றுக்கொண்டார். அதன்பின் அவரது எண்ணங்களின் திசையே மாறிவிட்டது. இன்று முழுமையான ஆரோக்கியத்துடன், தெளிவான மனதுடன் சிறப்பானதொரு ஒரு நிர்வாகியாகத் திகழ்கிறார். எல்லாவற்றுக்கும் காரணம் மனம்தான். அதை ஆல்ஃபா மைண்ட் பவர் மூலம் வசப்படுத்தி வெற்றி கண்டுவிட்டார் சந்திரிகா!

–தொடரும்



பாண்டிச்சேரி அரசினர் பொது மருத்துவமனை யில் பிறக்கும் குழந்தைகளுக்கு பிறந்த 48 மணி நேரத்துக்குள் பெயர் சூட்டிவிட வேண்டும். குழந் தையை மருத்துவமனையிலிருந்து அனுப்பும்போது அதன் பெயரை பிறப்புச் சான்றிதழில் குறித்து விடு கிறார்கள். இந்த நடைமுறையை நமது தமிழக அரசு மருத்துவமனைகளில் பின்பற்றலாமே!

– உமா தேவி பலராமன், திருவண்ணாமலை

வானவில்லைப் பார்க்க குழந்தைகள் முதல் பெரியவர்கள்வரை அனைவருக்கும் ஒரே குதூகலம்தான். பல வண்ண நிறங்கள் வளைந்து தோன்றும் போது, அதைப் பார்க்க ஒரே பரபரப்பு. வீட்டினுள்ளே இருப்பவர்களைக் கூவி அழைத்து ''சீக்கிரம் வா, மறைஞ்சுடும்'' என்று கூப்பிட்டு வந்து காட்டும் போது மனம் கொள்ளா சந்தோஷம். ஏனெனில் கொஞ்ச நேரத்தில் அது மறைந்துவிடும்.

ஆனால் இந்த அயல்நாட்டு மண்ணிலே வானவில் என்பது கொஞ்ச நாட்கள் நிதானமாக ரசித்துப் பார்க்கக் கூடிய இனிய அனுபவம். என்ன, எங்கே என்று கேட்கிறீர்களா? எல்லாம் நம்ப அமெரிக்கா, ஐரோப்பாவில் தான். அதுவும், செப்டெம்பர், அக்டோபர் மாதங்களில் பயணம் செய்தால், கண்டிப்பாகக் கண்டு ரசிக்க முடியும்.

சாதாரணமாக மேலை நாடுகளில் 'ஃபால்சீஸன்' எனப்படும் இலையுதிர் காலத்தில் மரங்கள் இலையுதிர்ப்பதற்கு முன் தங்களை வித

# மண்ணிலே



விதமாக நிறமாற்றம் செய்து கொள்கின்றன. எப்படி குழந்தைகளுக்கு பல வண்ண உடைகளைப் பரத்தி வைத்து, ''உங்களுக்குப் பிடித்ததை எடுத்துக் கொள்ளுங்க'' என்று சொன்னால், அவை தங்களுக்குப் பிடித்ததை ஆசையுடன் எடுத்து அணியுமோ அதுபோல மரங்களும் மஞ்சள், சிவப்பு, மெரூன், பழுப்பு என தங்கள் இலைகளை மாற்றிக்கொண்டு நம்மை மயக்குகின்றன.

கொஞ்ச நாட்கள்தான். பிறகு ஒவ்வொன்றாக இலைகளை உதிர்த்து ஒரே மொட்டையாகிவிடுகின்றன. ஏனெனில் குளிர்காலத்தில் வெப்பம் கிடைப்பதே கொஞ்சம். பூமியிலுள்ள கொஞ்ச நீரும் இலைகள் மூலம் ஆவியாகிவிட்டால் மரங்கள் திண்டாடி விடுமே. அதோடு பனி வேறு பெய்ய ஆரம்பித்தால் இலை இல்லாமல் இருப்பதே சௌகரி

# வானவில்!

யம். வெறும் குச்சியில் பனிக்கட்டி தங்க முடியாதல்லவா? ஆகவே பல வண்ணங்களைக் காட்டி மரங்கள் நம்மை மயக்குகின்றன.

ஒருநாள் பார்த்த நிறம் மறுநாள் காண முடியாது. அடேயப்பா.. என்ன அழகு... எத்தனை வர்ண ஜாலம். எல்லோராலும் இந்த மாதங்களில் வட அமெரிக்காவில் தங்க முடிவதில்லை. 'குளிர் தாங்காது' என்று இந்தியா திரும்பி விடுகின்றனர். இம்முறை அங்கு தங்கி மரங்களின் இலைகள் நிறம் மாறும் காட்சியைக் காணும் வாய்ப்பு எனக்கு அமையவே இதனை எழுத முடிந்தது. யாம் பெற்ற இன்பத்தை நீங்களும் ரசிங்களேன்!

- அம்புஜம் ஸ்ரீநிவாஸன், சென்னை-61



அன்புக் காதலியே!
கடற்கரை மணலிலும்
மலைப் பாறைகளிலும்
வெற்றுச் சுவர்களிலும்
நம் இருவர் பெயர்களும்
இணைந்திருந்தன; ஏனோ
திருமண அழைப்பிதழில்
மட்டுமே
உன் பெயரை
யாரோ ஒருவனின் பெயரோடு
இணைத்துக் கொண்டாய்!

- நவிமும்பை 'பிரஸன்னா'

(வாசகரின் முழு முகவரி தேவை...)

"'சாரதா பேசுகிறேன்' தொடரைப் படித்து வருகிறேன். என்னுடையதும் விநோத நோயை எதிர்த்துப் போராடும் எதிர்நீச்சல் வாழ்க்கைதான்!"

வாழ்க்கை

# "நானும் போராடுகிறேன்!"

**1949**ம் வருடம் தஞ்சாவூரில் பிறந்தேன். எல்லா குழந்தைகளையும் போல தவழ்ந்து, நீந்தி, நடந்து விளையாடியதாக என் அம்மா கூறுவார். 65ம் வருடம் என் அப்பாவின் மாமா பையனைக் கல்யாணம் செய்து கொண்டேன். 67ல் முதல் கருவைச் சுமந்த போதுதான் முதல் பிரச்னை தோன்றியது. எல்லோரையும் போல் குனிய, நடக்க, பஸ் ஏற எல்லாம் கஷ்டப் பட்டேன். வலி ஒன்றும் இல்லாததால் வெளியில் சொல்லவும் கஷ்டமாக இருந்தது. என்ன என்றே தெரிந்துகொள்ள முடியவில்லை. அதற்கு பின் ஐந்து மாத கர்ப்பம் தானாகவே கலைந்துவிட்டது.



72ல் இரண்டாவது மகன். அதுசமயம் கரூரில் பரமேஸ்வர ஐயர் என்ற டாக்டர்தான் ''இது ஒரு விதமான மஸ்க்குலர் டிசீஸ்'' என்று கூறினார். சென்னையில் ஒரு பிரபல டாக்டரைப் பார்க்கச் சொன்னார். அவரைப் பார்த்ததில் மஸ்க்குலர் பயாப்ஸி செய்து அமெரிக்கா அனுப்பியும், வேறு ஏதேதோ பரிசோதனை செய்தும் ஒன்றும் கண்டுபிடிக்க முடியவில்லை.

75ல் மூன்றாவது பையனும் பிறந்தான். அதற்குபின் 77ல் 1 அபார்ஷன், 78ல் 1 அபார்ஷன். குழந்தைகள் மூவரும் நல்ல படியாக வளர்ந்தார்கள். 80ம் வருடம்முதல் 93ம் வருடம்வரை நடக்க பேலன்ஸ் கிடைக்காமல் கீழே விழுந்து அடிக்கடி அடிபட்டுக் கொண்டே இருப்பேன். 92ல் என் பெரிய பையன் கல்யாணம். 95ல் கீழே விழுந்ததில் கால் முறிவு ஏற்பட்டது. அதற்கு பின் சக்கர நாற்காலியில்தான் என் வாழ்க்கை. அதாவது என்னுடைய நாற்பத்தாறாவது வயதிலிருந்து எல்லாமே சக்கர நாற்காலியில்தான். அதற்குப் பின் கொஞ்சம் கொஞ்சமாக கை தூக்குவதும் நின்று போனது. கைவிரல் அசைவுகள் மட்டுமே நன்றாக உள்ளதால் எழுதுவது, படிப்பதுபோன்ற கைவேலைகளைச் செய்ய முடிகிறது. குழந்தைகள் அனைவருக்கும் கல்யாணம் ஆகி பேரன் பேத்திகள் உள்ளனர். மருமகள் வீட்டைக் கவனித்துக் கொள்கிறாள். இரண்டாவது பையன் யு.எஸ்ஸில் இருப்பதால் 2007ல் அமெரிக்கா சென்று வீல் சேரிலேயே ஊர் சுற்றிப் பார்த்து வந்தோம்.

போன வருடம் என் கணவருக்கும் பி.பி அதிகமாகி ஸ்ட்ரோக் வந்து கஷ்டப்பட்டு நடக்கிறார். மகள், மருமகளைத் தொந்தரவு செய்கிறோமே என்ற குற்ற உணர்வே என்னைக் கஷ்டப்படுத்துகிறது. இந்த இரண்டு வருடமாக என் வாழ்க்கை படுக்கையிலேயே கழிகிறது. இன்னும் அதிகம் கஷ்டப்படாமல் என் வாழ்க்கை முடிய இதைப் படிப்பவர்களின் வாழ்த்துகளும் கடவுள் அருளும் கிடைக்க வேண்டுகிறேன்.

- காமாட்சி வெங்கடேஷ், ஈரோடு

**முன்னோர்களுக்கு திதி செய்ய மறந்தவர்களுக்கும், தர்ப்பணம் செய்யத் தவறியவர்களுக்கும் பித்ரு பூஜை நிறைவேற்ற ஏற்ற காலம் மஹாளயபக்ஷ அமாவாசையே. பித்ரு க்ஷேத்ரமான**

# காசியில் மஹாளய அமாவாசை அன்று

## (7-10-2010) நடைபெறும் பித்ரு பூஜையிலும் அன்னதானத்திலும்

### அனைவரும் கலந்து கொண்டு பித்ருக்களின் ஆசிர்வாதத்தை பெற அன்புடன் அழைக்கிறோம்

பித்ரு பூஜை நமக்குக் கிடைத்த **ஒப்பற்ற வாய்ப்பு** ஆகும். பித்ரு பூஜையால் நம் குடும்பம் பெறக் கூடிய நன்மைகள் ஏராளம். **புண்ணியத்தின் புதையல் அது.** எவ்வித **துன்பத்தையும்** போக்கும் **சக்தி பித்ரு பூஜைக்கு** மட்டுமே **உண்டு.** பித்ருக்களுக்கு நாம் செய்ய வேண்டிய பூஜைகளை நாம் எக்காரணம் கொண்டும் **விட்டுவிடக்கூடாது** என்பதால் பித்ரு க்ஷேத்ரமாக விளங்கும் காசியில் 12 **ஆண்டுகளாக ஸ்ரீ அன்னபூரணி அன்னதான சேவா டிரஸ்ட்** மூலம் **மஹாளய அமாவாசை அன்று காசியில் பித்ருக்கள் நினைவாக கங்கைக்கு ஜல தீபம் ஏற்றி வஸ்தாரதானத்துடன் அன்னதானமும் வைதீக முறைப்படி செய்யப்படுகிறது.** மஹாளய அமாவாசை அன்று காசியில் தர்ப்பணமும், அன்னதானமும் செய்தால் பித்ருக்கள் பூரண திருப்தி ஏற்பட்டு நமக்கும், நம் சந்ததிகளுக்கும் அனைத்து வகை ஆரோக்யத்தையும் அளிக்கின்றார்கள். **மஹாளய அமாவாசை** அன்று காசியில் நடைபெறும் **அன்னதான திருப்பணி** மற்றும் **முன்னோர் வழிபாட்டில் அனைவரும் கலந்து கொண்டு** தங்களால் இயன்ற கீழ்கண்ட நன்கொடையை அனுப்பி **பித்ருக்களின் ஆசிர்வாதத்தை பெற்று அனைத்து பித்ரு தோஷங்களில் இருந்தும் நிவர்த்தி** பெற அன்புடன் **அழைக்கிறோம்.**

**பித்ருக்கள் நினைவாக நடைபெறும் அன்னதானம், தர்ப்பணத்திற்கு தாங்கள் அளிக்கும் நன்கொடை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் ஏற்றுக் கொள்ளப்பட்டு திருக்கயிலாயத்தில் இருந்து நேரடியாக பெறப்பட்ட கீழ்கண்ட ருத்ராட்சங்கள் அனுப்பி வைக்கப்படும்**

- ரூ. 300 - அனுப்பும் அன்பர்களுக்கு, **5 முகம் கொண்ட ருத்ராட்சம்** 3 அனுப்பி வைக்கப்படும்
  (5 முக ருத்ராட்சத்தை அணிபவர்களுக்கு அனைத்து தோஷங்களும் நிவர்த்தியாகும். ரத்த அழுத்தம், இதய கோளாறுகளை சீர் செய்யும்)
- ரூ. 500 - அனுப்பும் அன்பர்களுக்கு, **ருத்ராட்ச மாலை** அனுப்பி வைக்கப்படும்
  (ருத்ராட்ச மாலை அணிபவர்கள் அனைத்து சிவ ஸ்தலங்களையும் தரிசித்த மஹாபுண்ணிய பலனை பெறலாம்)
- ரூ. 1000 - அனுப்பும் அன்பர்களுக்கு, **3 முகம் (மஹா சரஸ்வதி)** கொண்ட ருத்ராட்சம் அனுப்பி வைக்கப்படும்
  (3 முக ருத்ராட்சத்தை அணிபவர்களுக்கு அறிவு வளர்ச்சி, கல்வி மேம்பாட்டிற்கும் உதவும். குழந்தைகளுக்கும் மாணவர்களுக்கும் பொருத்தமானது)
- ரூ. 2000 - அனுப்பும் அன்பர்களுக்கு, **6 முகம் (ஸ்ரீசுப்பிரமணியர்)** கொண்ட ருத்ராட்சம் அனுப்பி வைக்கப்படும்
  (6 முக ருத்ராட்சத்தை அணிபவர்களுக்கு வியாபாரத் தடை நீங்கி, தொழில் வளர்ச்சி சிறப்பாகும். மேலும் அசுவமேத யாக பலனையும் தரவல்லது)
- ரூ. 3000 - அனுப்பும் அன்பர்களுக்கு, **7 முகம் (சப்த ரிஷி)** கொண்ட ருத்ராட்சம் அனுப்பி வைக்கப்படும்
  (7 முக ருத்ராட்சத்தை அணிபவர்களுக்கு தடைபட்ட திருமணம் நடக்கும். மேலும் செவ்வாய்தோஷம் விலகி சுப நிகழ்ச்சிகள் கைகூடும்)
- ரூ. 4000 - அனுப்பும் அன்பர்களுக்கு, **11 முகம் (வீர ஹனுமான்)** கொண்ட ருத்ராட்சம் அனுப்பி வைக்கப்படும்
  (11 முக ருத்ராட்சத்தை அணிவதால் குழந்தை பாக்கியம் இல்லாதவர்களுக்கு புத்திர பாக்கியம் உண்டாகும்)
- ரூ. 5000 - அனுப்பும் அன்பர்களுக்கு, **கௌரி சங்கர் (சிவ-பார்வதி)** ருத்ராட்சம் அனுப்பி வைக்கப்படும்
  (கௌரி சங்கர் ருத்ராட்சத்தை அணிபவர்கள் கணவன் - மனைவி ஒற்றுமையுடன் வாழ்வார்கள். நீண்ட ஆயுளையும் தரும்)
- ரூ. 6000 - அனுப்பும் அன்பர்களுக்கு, **ஒரு முகம் (ஸ்ரீபரமேஸ்வரன்)** ருத்ராட்சம் அனுப்பி வைக்கப்படும்
  (ஒரு முக ருத்ராட்சத்தை அணிந்தவர்களை எதிரிகளால் கூட வெல்ல முடியாது மற்றும் பிரம்மஹத்தி தோஷமும் நீங்கும்)
- ரூ. 7000 - அனுப்பும் அன்பர்களுக்கு, **ஸ்ரீகணேஷ் (விநாயக பெருமானின் முழுத்தோற்றம்)** ருத்ராட்சம் அனுப்பி வைக்கப்படும்
  (ஸ்ரீகணேஷ் ருத்ராட்சத்தை அணிபவர்களுக்கு தேஜிப்பான வளர்ச்சியுடன் எடுத்த காரியத்தில் வெற்றியும், அஷ்ட லக்ஷ்மிகளின் அருளும் கிடைக்கும்)
- ரூ. 8000 - அனுப்பும் அன்பர்களுக்கு, **வெள்ளியிலான அன்னபூரணி விக்ரகமும், அன்னபூரணி யந்திரமும்** அனுப்பி வைக்கப்படும். (9 முகம் கொண்ட ருத்ராட்சமும் (**ஸ்ரீமகா பைரவர்**) அனுப்பி வைக்கப்படும். இதனால் நவகிரக தோஷம் நீங்கும்)
- ரூ. 10000 - அனுப்பும் அன்பர்களுக்கு, **21 முகம் (குபேர ஸ்வரூபம்)** கொண்ட ருத்ராட்சம் அனுப்பி வைக்கப்படும்
  (சகல ஆன்மீக சக்திகளையும், ஆத்ம பலத்தையும், ஆரோக்கியத்தையும் வழங்கி, சகல செல்வங்களும் சொத்துக்களும், சுகங்களும் கிடைக்கும்)

**ஆண்கள் பெண்கள் மற்றும் குழந்தைகள் அனைவரும் ருத்ராட்சத்தை அணிந்து மகிமையை பெறலாம்**

பித்ருக்களுக்கு காசியில் தர்ப்பணம் செய்ய மேற்கண்ட தொகை அனுப்பும்போது யாருக்கு திதி செய்ய விரும்புகிறீர்களோ அவரின் பெயர், திதி, கோத்ரம் போன்ற விபரங்களை தெரிவித்தால், அதன்படி மஹாளய அமாவாசை அன்று காசியில் தர்ப்பணம் செய்யப்பட்டு, **அவர்களின் நினைவாக சாதுக்களுக்கு வஸ்திரதானத்துடன் அன்னதானம் செய்யப்படும்.** இதில் கலந்து கொள்பவர்களுக்கு **பித்தளையிலான அன்னபூரணி விக்ரகமும்,** காசியில் உள்ள விஷ்ணு பாதம், அக்ஷய வடத்தின் படமும், கங்கா தீர்த்தத்துடன் கூடிய காசி சொம்பு, காசி கயிறு மற்றும் மேற்கண்ட ருத்ராட்சமும் அனுப்பி வைக்கப்படும். நம் வீட்டில் செய்யும் தர்ப்பணத்திற்கு தாய், தந்தை, உறவினர்கள் மட்டுமே பங்குகொள்ள வாய்ப்புண்டு. காசியில் தர்ப்பணம் செய்தால் 7 தலைமுறைக்கு **பித்ருக்கள் அனைவரும் திருப்தி அடைவதுடன் பித்ரு தோஷங்களும் நமக்கு நிவர்த்தியாகும்.**

மஹாளய அமாவாசை அன்று முன்னோர்கள் நினைவாக காசியில் நடைபெறும் அன்னதான திருப்பணியிலும், தர்ப்பண வழி பாட்டிலும் ஈடுபட விரும்பும் அன்பர்கள் தங்கள் நன்கொடையை **Cheque/D.D/M.O.** மூலம் **Sri Annapoorani Annadhana Seva Trust, Chennai** என்ற பெயருக்கு எடுத்து கீழ்கண்ட முகவரிக்கு அனுப்பி பித்ருக்களின் ஆசியை பெறுமாறு அன்புடன் வேண்டுகிறோம்.

பணம் அனுப்பும் அன்பர்களுக்கு ரசீதும், மேற்கண்ட பிரசாதங்களும் மஹாளயபக்ஷம் முடிந்த பிறகு கூரியர் மூலம் அனுப்பி வைக்கப்படும்

நன்கொடைகளுக்கு 80G பிரிவின் படி வரி விலக்கு உண்டு


## ஸ்ரீஅன்னபூரணி அன்னதான சேவா டிரஸ்ட்

**SRI ANNAPOORANI ANNADHANA SEVA TRUST (Regd)**

**4, Appavoo 3rd Street, (Opp: Tel Ex.) R.A.Puram, Chennai - 28 Ph : 044 - 3246 4848**


**காசியில் பித்ருக்களுக்கு மஹாளய அமாவாசை அன்று தர்ப்பண பூஜை செய்வது இந்துக்களின் இன்றியமையாத கடமையாகும்**

## ஏகாதசி விரத மகிமை



# துரத்திய சக்கரம்!

சிறந்த பகவத் பக்தனான அம்பரீஷ் மன்னன் ஏகாதசி விரதம் இருந்து துவாதசி அன்று விரதம் முடிப்பான். எப்பொழுதும் ஸ்ரீஹரி தியானம் செய்வதிலேயே பொழுதைக் கழிப்பான்.

ஒருமுறை அம்பரீஷ் மன்னனின் அரண்மனைக்கு துர்வாச முனிவர் வந்தார். அன்று துவாதசி திதி முடிய கொஞ்ச நேரம் இருந்தது. மன்னனும் முனிவரைச் சாப்பிட வேண்டினான். தான் குளித்து வருவதாகச் சொல்லி சென்ற துர்வாச முனிவர் வர நேரமாயிற்று. துவாதசி திதி முடிய சற்று நேரமே இருந்தது.

மற்ற முனிவர்களின் ஆலோசனைப்படி மன்னன் துளசித் தீர்த்தம் எடுத்துக் கொண்டு விரதம் முடித்தான். இதை அறிந்த முனிவர், மன்னனைப் பலவாறு நிந்திக்கலானார். இதைக் கண்டு வெகுண்ட மகா விஷ்ணுவின் ஸ்ரீசுதர்சன சக்கரம் முனிவரைத் துரத்த ஆரம்பித்தது.

மூன்று உலகம் சென்றும் துர்வாசரை ஸ்ரீ சுதர்சன சக்கரம் விடவில்லை. அவர் அம்பரீஷனிடமே மீண்டும் வந்து சரணடைய, ஸ்ரீ சக்கரம் துரத்துவதை விட்டது. பகவான் தன்னை நிந்திப்பவரைப் பொறுத்தருள்கிறான். ஆனால் தன் பக்தனை சோதனைக்குள்ளாக்குவோரை விடுவதில்லை.

- எம். லீலா, சென்னை

## ஸ்ரீ அக்ஷய ஸ்துதி!



சமையல் செய்யும்போது அரிசி எடுத்துக் களையும்போது சொல்ல வேண்டிய ஸ்ரீ அக்ஷய ஸ்துதி!

''கீர்த்தி பாண்டம், திரௌபதி கலயம், பாண்டவர் யக்ஞம், பஞ்ச பாண்டவர் போஜனம். அரிசி அலை மோத, அன்னம் மலை போல் குவிய, அர்ஜுனன் படை வந்தாலும் மறித்து உலை வைக்க மாட்டேன். ஸ்ரீ கிருஷ்ணா! உன் அக்ஷயம், அக்ஷயம், அக்ஷயம்!''

நம்பிக்கை உள்ளவர்கள்சொல்லலாமே!

- லலிதா தியாகராஜன், சென்னை

# பூமியிலேயே சொர்க்கத்தை அனுபவிக்கணுமா?

புதிய கேஸ் அடுப்பு வாங்கி, பதினைந்து நாட்கள் ஆகியிருந்தன. தினமும் சமையல் செய்தபின் அடுப்பைச் சுத்தம் செய்தாலும் எண்ணெய்ப்பிசுக்கும் அழுக்கும் படிய ஆரம்பித்திருந்தது. இப்படியே ஏனோ தானோவென்று தினமும் துடைப்பதில் பயனில்லை என்று புரிந்தது. உடனே பாத்திரம் தேய்க்கும் நாரில் சிறிது சோப்புப் பவுடர் போட்டு, சிறிது நல்ல தண்ணீர் விட்டு அழுந்தத்தேய்த்து, அடுப்பைத் துடைத்துப் பார்க்கையில் மிகவும் சுத்தமாகவும் பளிச்சென்றும் மின்னியது. இது போலவே தினமும் செய்வதால் இன்றும் தூய்மையாகவே பளிச்சிடுகிறது.

இந்தச் செயலால் நம் வாழ்வில் கடைப்பிடிக்க வேண்டிய ஓர் உயர்ந்த உண்மையும் அந்த நேரத்தில் மனதுக்குள் பளிச்சென உருவானது.

அடுப்பை ஒழுங்காகத் தினமும் துடைக்காத பட்சத்தில் எண்ணெய்ப் பிசுக்கு சேர ஆரம்பித்து, ஒவ்வொரு நாளும் கூடிக்கொண்டே போய் ஒரேயடியாக அடுப்பு பாழ்பட்டு விடுவது உறுதி. பின் அந்த அடுப்பைப் பார்த்தால் அருவருப்புதான் மிஞ்சும்.



சேற்றுப் புண்ணுக்கு பாம் ஆயில் தடவி வர குணம் தெரியும்.

- செந்தமிழ் ராம், செமபொன்னார்கோவில்



அதேபோலதான் நம் மனதும். நம் மனத்தில் பொறாமை, கோபம், வெறுப்பு, ஒழுக்கமின்மை போன்ற பலவகையான கீழ்த்தரமான எண்ணங்கள் முதலில் மெல்லியதாகத் தோன்ற ஆரம்பிக்கும். அதனை வளரவிடாமல் உடனுக்குடன் அகற்றப் பழக வேண்டும். அதற்கு நம் மனத்தை நல்லெண்ணங்களால் நிரப்ப வேண்டும். தியானம், இறைநாமம் சொல்லுதல், யோகக் கலை பயிலுதல் மற்றும் நற்செயல்களில் மனத்தைச் செலுத்துதல் என தூய்மைப்படுத்திக் கொள்ள வேண்டும்.

இப்படிச் செய்தால் பூமியில் வாழும் ஒவ்வொரு நாளும் சொர்க்கத்தை மட்டுமே அனுபவிக்கலாம் என்பது நிச்சயம்!

- கமலா கந்தவேல், சென்னை - 89

# ஆன்மீக உலகில் ஓர் அற்புதம்!



ஆன்ம சக்தியை அழித்து, அறிவின் திறனை குறைத்து, மனவலிமையை தகர்த்து, நிம்மதியைக் குலைத்து, வலிவை பாழாக்கி, ஆரோக்யத்தைக் குறைத்து, குடும்பத்தில் குழப்பம், தொழிலில் நஷ்டம், உத்தியோகத்தில் பிரச்சனை, கல்வியில் தோல்வி, காதலில் வீழ்ச்சி போன்ற காரியங்களை பில்லி, சூன்யம், ஏவல் இவற்றால் தீமை உண்டாகின்றன.

விண் மட்டும் விஞ்ஞானம் வளர்ந்த போதும், இவைகளுக்குத் தீர்வு அருள் மறையில் மாத்திர முண்டு. இந்தக் குறைகளை நீக்கி எல்லாத் துறையிலும் வெற்றி பெறச் செய்கிறார் மாபெரும் தவச்சீலர் **மறையகம் பாபா.** உடனே அணுகவேண்டிய முகவரி:

அருள்

## மறையகம்

1 B, மகாலட்சுமி அப்பார்ட்மெண்ட், நெ.3, அப்துல் ரசாக் தெரு, நூர்ஜஹான் தியேட்டர் எதிரில் (தற்போது ராஜ் தியேட்டர் என்று மாற்றப்பட்டுள்ளது), சைதாப்பேட்டை, சென்னை - 600 015.

☎ : 2435 1190, 2433 2047. செல்போன் : 98404 11551

குறிப்பு : வெளியூர், வெளிநாடுகளில் வசிப்பவர்கள் தங்கள் பிரச்சனை தீர்க்க தங்கள் பெயர், தங்கள் தாயார் பெயருடன் தங்கள் பிரச்சனைகளை எழுதி, ரூ. 10 (அ) அதற்கான அஞ்சல் தலையுடன் அனுப்பி வைத்து ஆலோசனை பெறவும்.

---

விவரப் புத்தகம்

**இலவசம்!**

கல்வித் தகுதி SSLC, +2

ஆண்கள், பெண்கள்

## வீட்டில் இருந்தபடியே தபால் மூலம் படிக்கலாம்!

வரும் நவம்பரில்

தமிழ்நாடு அரசுத் தொழில் நுட்பத் தேர்வு

**FREEHAND DRAWING - HIGHER GRADE**

தேர்வு எழுதி நீங்களும்

## ஓவிய ஆசிரியர் ஆகலாம்

உங்கள் முகவரியை ஒரு தபால் கார்டில் எழுதி அனுப்புங்கள்.
போனில் தெரிவியுங்கள். அல்லது SMS அனுப்புங்கள்.
இலவச **விவரப் புத்தகம்** உங்கள் இல்லம் தேடி வரும்.




## AJANTHA SCHOOL OF ARTS

(Govt. Regd.)

6, Muthu Nagar, Poonamallee, Chennai - 56

Ph : 044-26490363 Cell : 9381050477, 9940390708

# தலை வாழை

தேவிகா காளியப்பன்

**இந்த மாதம் கமகமக்கும் பருப்பு, பச்சடி, வறுவல், கூட்டு, பொடி மாஸ் என தினுசு தினுசாய் வித்யாசமான ருசியுடன் களம் இறங்கலாமா?**



## உப்புப் பருப்பு

**தேவையான பொருள்கள்:**

துவரம் பருப்பு - ½ கப்
உப்பு - தேவைக்கு
நெய் - சிறிது
மஞ்சள் தூள் - சிறிது

**தாளிக்க**

கடுகு - 1 டீஸ்பூன்
பச்சை மிளகாய் - 1
கறிவேப்பிலை - சிறிது
கருவடகம் - 1 டேபிள் ஸ்பூன்



**செய்முறை:**

துவரம் பருப்பை நீரில் மஞ்சள் தூள் சேர்த்து குக்கரில் குழைய வேக வைக்கவும். அதனுடன் உப்பு சேர்த்து மசிக்கவும். கடாயில் நெய் சிறிது விட்டு கடுகு, அரிந்த பச்சை மிள காய், கறி வேப்பிலை, தாளிக்கவும். பிறகு கருவடகம் தாளித்து, மசித்த பருப்புடன் சேர்த்து நன்றாகக் கலக் கவும்.

இதனை சூடான சாதத்தில் போட்டு நெய் விட்டுப் பரிமாறவும்.

**கருவடகம் செய்முறை:**

உளுத்தம் பருப்பு - 1 கப்
பாசிப் பருப்பு - ½ கப்
வெங்காய விழுது - ½ கப்
உப்பு -

உளுத்தம் பருப்பு, பாசிப் பருப்பை ஒரு மணி நேரம் ஊற வைத்து, நீரை வடிக்கவும். நன்றாக உலர்ந்ததும், எல்லாவற்றையும் ஒன் றாக நைசாக அரைத்து வடாம் களாகக் கிள்ளி வெயிலில் காய வைக்கவும். தேவையானபோது, பொன்னிறமாகப் பொரித்துப் பயன் படுத்தவும்.

# சமையல்!

## வாழைக்காய் பொடிமாஸ்



**கிராமிய மணம் கமழும் புத்தம் புதிய சமையல் பகுதி 2**

**தேவையான பொருள்கள்:**
வாழைக்காய் - 2 (சிறியது)
எலுமிச்சை சாறு - 1 டீஸ்பூன்
தேங்காய்த் துருவல் - 1 டேபிள் ஸ்பூன்

**தாளிக்க:**
எண்ணெய் - சிறிதளவு
கடுகு - 1 டீஸ்பூன்
உளுத்தம் பருப்பு - 2 டீஸ்பூன்
வரமிளகாய் - 2 (அவரவர் காரத்துக்கு ஏற்ப)
கறிவேப்பிலை - சிறிது
உப்பு - தேவைக்கு

**செய்முறை:** முழு வாழைக் காயை தோலுடன் இட்லித் தட்டில் ஆவியில் வேக வைக்கவும். வாழைக் காயின் தோலை உரித்து நீக்கி, கேரட் துருவியில் துருவவும்.

கடாயில் எண்ணெய் விட்டு கடுகு, உளுத்தம் பருப்பு, கிள்ளிய வர மிளகாய், கருவேப்பிலை தாளித்து துருவிய வாழைக் காயைப் போட்டுக் கிளறவும். உப்பு சேர்க்கவும். எலுமிச்சைச் சாறு, தேங் காயத் துருவல் சேர்த்து, நன்றாகக் கிளறி இறக்கவும். ரசம் சாதம், தயிர் சாதத்துக்குத் தொட்டுக் கொள்ள ஏற்றது.





## சேனை தட்டி வறுத்தல்

**தேவையான பொருள்கள்:**

சேனைக் கிழங்கு - ¼ கிலோ

பச்சை மிளகாய் - 2 அல்லது 3 (அவரவர் காரத்துக்கேற்ப)

உப்பு - தேவையான அளவு

எண்ணெய் - பொரிக்க

**செய்முறை:** சேனைக் கிழங்கின் தோலை நீக்கி சிறு துண்டுகளாக அரியவும். அதனுடன் உப்பு, பச்சை மிளகாய் சேர்த்து அம்மி (அல்லது) மிக்ஸியில் ஒன்றிரண்டாகத் தட்டவும். கட்டிகள் இருக்கக்கூடாது. தட்டிய காய்கள் பட்டைப் பட்டையாக இருக்க வேண்டும். அப்போதுதான் நன்றாக வறுக்க முடியும்.

கடாயில் எண்ணெய் விட்டு எண்ணெய் காய்ந்ததும் தட்டிய சேனையைப் போட்டு வறுக்கவும். நன்றாக மொறுமொறு என்று ஆனபின் எடுத்து சூடாகப் பரிமாறவும்.

தயிர் சாதம், ரசம் சாதம் ஆகியவற்றுக்குத் தொட்டுக் கொள்ள சுவையானது.

## புடலை பால் கூட்டு

**தேவையான பொருள்கள்:**

புடலங்காய் பிஞ்சு - 1

காய்ச்சி ஆறிய பால் - 1 கப்

மிளகு - 1 டீ ஸ்பூன்

உப்பு - தேவைக்கு

கருவடகம் - 1 டேபிள் ஸ்பூன்

**செய்முறை:** மிளகை வெறும் வாணலியில் வறுத்துப் பொடி செய்யவும். புடலங்காயைப் பொடியாக அரிந்து தண்ணீர், உப்பு சேர்த்து வேக வைத்து மிகுதியான நீரை வடிக்கவும். ஆறிய பாலை அதில் சேர்த்து உப்பு, மிளகுத் தூளைப் போடவும்.

கருவடாகத்தை எண்ணெயில் சிவப்பாக வறுத்துக் கூட்டில் சேர்க்க, சுவையான பால் கூட்டு தயார்! சாதத்தில் பிசைந்து சாப்பிடலாம். இரவு நேரங்களில்



எளிமையாகச் செய்ய ஏற்றது. புடலங்காய் கிடைக்கவில்லை எனில் காய்ச்சி ஆறிய பாலில் மிளகுத்தூள், உப்பு, வறுத்த கருவடகம் சேர்த்து வெறுமனேயும் செய்யலாம். அவசரத்துக்கு ஏற்ற குழம்பு இது. நொடியில் தயாராகி விடும்.



## மாங்காய் பச்சடி

**தேவையான பொருள்கள்:**

மாங்காய் - 1
தேங்காய்த் துருவல் - 1 டேபிள் ஸ்பூன்
சீரகம் - 1 டீ ஸ்பூன்
வரமிளகாய் - 2
வெல்லம் - சிறிது
உப்பு - தேவைக்கு
மஞ்சள் தூள் - சிறிது

**தாளிக்க:**

எண்ணெய் - சிறிது
கடுகு - 1 டீஸ்பூன்
உளுத்தம் பருப்பு - 2 டீஸ்பூன்
கிள்ளிய வரமிளகாய் - 2
கறிவேப்பிலை - சிறிது



**செய்முறை:** மாங்காயின் தோலை சீவிவிட்டு சிறிய துண்டுகளாக அரியவும். பிறகு அதனுடன் தேவையான தண்ணீர், மஞ்சள் தூள் போட்டு வேக வைக்கவும். மாங்காய் வெந்தபின் வெல்லம், உப்பு சேர்க்கவும். புளிப்பில்லாத மாங்காய் என்றால் சிறிது வெல்லமும் புளிப்புள்ள மாங்காய் என்றால் கொஞ்சம் அதிகமாகவும் வெல்லம் சேர்க்கவும்.

தேங்காய்த் துருவலுடன் சீரகம், வர மிளகாய் சேர்த்து நைசாக அரைக்கவும். வேக வைத்துள்ள மாங்காயில் சேர்த்து கொதிக்க வைக்கவும். கடாயில் எண்ணெய் சிறிது விட்டு கடுகு, உளுத்தம் பருப்பு, வர மிளகாய் தாளித்துச் சேர்த்து சூடாகப் பரிமாறவும்.

(மாங்காயுடன் பரங்கிக்காய் (சிவப்பு பூசணி சேர்த்தும் பச்சடி செய்யலாம். வித்தியாசமான சுவையுடன் இருக்கும்.)

**(விருந்து தொடரும்)**

# வித்தியாசமாய்

இக் காலத்தில், பிறந்த நாள், திருமண நாள் ஆகிய முக்கியமான நாட்களில் கேக் வெட்டி, செய்து, தடபுடலாக பார்ட்டி வைப்பது வழக்கமாகிவிட்டது. ஆனால் எங்களுடைய பெற்றோர், வித்தியாசமாக, அருமையாக தங்கள் 55வது திருமண நாளைக் கொண்டாடினார்கள்.

எங்களுடைய தாய் - தந்தை, கிருஷ்ணன் - ராதாகிருஷ்ணன் இருவரும் வாழ்க்கையில் பக்தியாலும், உழைப்பினாலும் உயர்ந்தவர்கள். அப்பா நன்றாகப் பாடுவார். புல்லாங்குழலும் வாசிப்பார். அம்மாவுக்குக் கல்யாணத்துக்கு முன்னால், சங்கீதம் கற்றுக் கொள்ள இயலவில்லை. கல்யாணத்துக்குப் பிறகு, நானும் என் அண்ணனும் பிறந்து, ஸ்கூலுக்கு போகத் தொடங்கியபின், எங்கள் அம்மாவின் ஆசையை அறிந்து, எங்கள் அப்பா, அம்மாவை, பாட்டும், வீணையும் பயில அனுப்பினார்.

சென்னை சாலிக்கிராமத்தில் 'வைதிக பக்த சபை' என்று தொடங்கிய எங்கள் அப்பா, சனிக்கிழமைதோறும் ஸ்ரீ விஷ்ணு சஹஸ்ரநாமம் பாராயணம் செய்து வந்தார். ''கோயில் இல்லா ஊரில் குடியிருக்க வேணாம்' என்பதை மனத்தில்கொண்டு அப்பா, சிறு தொகை வசூலித்து, இடம் வாங்கி சிறியதாகத் தொடங்கப்பட்ட கோயில். இப்பொழுது பெரிய அளவில் 7 தள ராஜ கோபுரத்துடன் அருள்மிகு சங்கர - நாராயணர் திருக்கோயிலாக உருவாகியுள்ளது.

அம்மாவும் வீட்டுப் பொறுப்புகளுக்கு நடுவில் 'ஸௌந்தர்ய லஹரி'யின் 100 ஸ்லோகங்களை, 100 விதமான



ராகங்களில் கற்று வந்தார். காளிகாம்பாள் கோயிலில் எடுத்துக் கொண்ட திருவிளக்குப் பூஜையையும் தினமும் செய்துவந்தார். ''ஸௌந்தர்ய லஹரி ஸத்ஸங்கம்' என்று தொடங்கி, அதன் மூலம் வரும் வருமானத்தில், கோயிலுக்கு மாதா மாதம், அரிசி, எண்ணெய் வாங்கிக் கொடுப்பது என்று பலவித தொண்டுகளைச் செய்து வருகிறார்.

# ஒரு விழா!

இவ்வாறு இருக்கும்போதுதான், தம்பதியரின் 55வது திருமண நாள் நெருங்கியது. அன்று அம்மாவின் எல்லா மாணவிகளும் ஒன்று சேர்ந்து, ''ஸௌந்தர்ய லஹரி' ஸ்லோகங்களையும், 'மந்திர மாத்ருகா புஷ்ப மாலா' என்ற ஸ்லோகத்தையும், 'பாலா த்ரிபுரசுந்தரி' ஸ்வாமி பேரில் அம்மா இயற்றிய பாடலையும் பாடினோம். எல்லோருக்கும் காமாட்சியம்மன் விளக்கு, தாலிக்கயிறு, பாலா திரிபுரசுந்தரி பாடல், எல்லாவற்றையும் தாம்பூலத்தில் வைத்து கொடுத்தார்கள். வடை பாயசத்துடன் விருந்து அளிக்கப்பட்டது.

அம்மாவுக்குக் கற்றுக் கொடுத்த குருவும் (80 வயது), அவரது கணவரும் பூஜையில் கலந்துகொண்டு வாழ்த்தியது எல்லோரையும் மகிழ வைத்தது.

- உஷா மகாதேவன்,
கோலார் தங்க வயல்

"வலது காலை எடுத்து வைச்சு, உள்ளே வாம்மா,'' என்றாள் மதுரம். திருமணம் முடிந்து வரும் மகன் விக்னேஷையும், மருமகள் வித்யாவையும் மதுரமும், அவள் கணவர் வேங்கடமும் உள்ளே வரவேற்றனர். வித்யாவின் தந்தை சபேசனும், தாய் பங்கஜமும் பின் தொடர்ந்தனர். வித்யாவைப் பூஜை அறைக்கு கூட்டிச் சென்றாள் மதுரம். ''குத்து விளக்கை ஏற்றம்மா,'' என்றாள். சிறிது நேரத்துக்குப் பிறகு வித்யாவின் பெற்றோர் விடை பெற்றுச் சென்றனர்.

வித்யா வீட்டுக்கு ஒரே பெண். குழந்தையிலிருந்து தனியாகவே வளர்ந்ததால், எங்கு திருமணத்துக்கு பிறகு அவள் புகுந்த வீட்டாரை அனுசரித்துக் கொள்ளாமல் போய் விடுவாளோ என்ற ஒரு சிறிய அச்சம் பங்கஜத்தின் மனத்தில் இருந்து வந்தது. இதனாலேயே நிச்சயத்துக்கு பின் வித்யாவுக்கு அறிவுரை கூறுவதை ஒரு தினசரி வேலையாகவே வைத்துக்கொண்டிருந்தாள். வித்யாவும்



தன் தாயின் மனம் நோகக்கூடாது என்று பொறுமையாக எல்லாவற்றையும் கேட்டுக்கொண்டிருந்தாள்.

வித்யாவுக்கு சம்சாரமான குடும்பத்தில் வாழ ரொம்ப இஷ்டம். அவளுக்குக் கூடப் பிறந்தவர்கள் யாரும் இல்லை என்று வருத்தம். புகுந்த வீட்டுக்குள் காலடி எடுத்து வைத்தவுடனேயே விக்னேஷின் குடும்பத்தாரை தனது குடும்பத்தாராக மனத்தில் ஏற்றுக்கொண்டாள். ''அண்ணி வாங்க, என் ரூமைக் காட்டறேன்'' என்று வித்யாவின் கையைப் பிடித்து இழுத்துக் கொண்டு போனாள் அனு, விக்னேஷின் தங்கை.

ஒரே வாரம்தான். வித்யாவுக்கு அந்த வீட்டின் நித்திய வேலைகள் மிகவும் பழகிவிட்டன.

''ஏங்க, வித்யா ரொம்ப நல்ல பொண்ணுங்க. எல்லாம் பார்த்து பார்த்துச் செய்யறா. என்னையும் எதையும் செய்ய விடற தில்லே'' என்ற மதுரத்தைப் பார்த்து, ''உன்னையே திருப்தி படுத்திட்டாளா! என் மருமக புத்திசாலிதான்'' என்று

# மின்னல்!

**வி.காயத்ரி**

ஏளனமாகக் கூறினார் வேங்கடம்.

அன்று மாலை வித்யாவும், விக்னேஷும் ஒன்றாக ஆபிஸிலிருந்து வீட்டுக்குள் நுழைந்தனர். வந்ததும் கிச்சனுக்கு சென்ற வித்யா, ''ஏம்மா, நான் வைத்த உப்புமாவை சாப்பிடலையா?'' என்று கேட்டபடியே வெளியே வந்தாள். ''எப்படிச் சாப்பிடறது! அதில்தான் நீ வெங்காயத்தைப் போட்டிருக்கியே. செவ்வாய்க்கிழமை, நான்தான் விரதம்னு சொன்னேனே, மறந்துட்டியா?'' என்று மதுரம் கேட்க, ''ஐயோ!

ஸாரிம்மா... மறந்தே போய்ட்டேன்'' என்று பதறினாள். ''ரொம்பச் சின்ன வயசுக்காரி நீ! மறதி மன்னியா இருக்கியே!'' என்றாள் மதுரம் சலிப்பான குரலில்...

இதையனைத்தையும் கேட்டுக் கொண்டே சோபாவில் அமர்ந்திருந்த விக்னேஷ், ''ஏம்மா! ஓவரா பண்றே, விரதம் ஒருநாள் அனுசரிக்கலைன்னா என்ன?'' என்று கூறியவாறே ரூமுக்குச் சென்றான்.

அவனைப் பின்தொடர்ந்த வித்யா, ''நீங்க எதுக்கு இந்த விஷயத்துல தலையிட்டிங்க?'' என்று கேட்டாள்.

''இதென்ன கேள்வி? நீ கஷ்டப்பட்டு செஞ்சு வச்சுட்டுப் போற, அதைக் குறை சொல்றது சரின்னு படல. அதனாலதான் சொன்னேன் எங்கம்மாவ சொல்ல எனக்கு உரிமையில்லையா என்ன?'' என்று கேட்டபடியே டையைக் கழற்றினான்.

''இந்த இடத்தில் யாருக்கு யார் மீது உரிமை என்பது பிரச்னையில்லை. ஒரு மாமியாருக்கும், மருமகளுக்கும் சிறிய விஷயங்கள் எல்லாம் பெரிய வாதமாக மாறுவதற்குக் காரணமே அந்த மகன் தலையிடும்பொழுதுதான்.

''பொதுவாகவே ஒரு தாய்க்கு உள்ள அச்சம், எங்கே மருமகள் வந்தவுடன் தன் மகன் மீது உள்ள உரிமை குறைஞ்சுடுமோங்கிறதுதான். இது மாதிரி சாதாரண விஷயங்கள்ல நீங்க தலையிட்டு எனக்குப் பரிஞ்சு பேசினீங்கன்னா, அவங்களுக்கு உங்க மேல வர்ற கோபம் என் மீது வெறுப்பா மாறிடும். அது நம்ப யாருக்குமே நல்லது இல்ல!'' என்றாள் வித்யா. அதைக் கேட்டு ஆச்சரியத்தில் உறைந்தான் விக்னேஷ்.

'' என்ன ஆச்சரியமா பார்க்கறீங்க? உறவுகள் நதிகளைப் போலதான். அனைத்து நதிகளும் ஒன்று சேரும் கடல்தான் ஒரு அழகான குடும்பம். எப்படி ஒரு கல் எறிந்தால், அந்த நதியில் ஒரு சலசலப்பு ஏற்படுகிறதோ அதுபோலதான் ஒரு உறவுக்குள் அதற்கு அப்பாற்பட்டவர் நுழையும்பொழுது பிரச்னைகள் வரும். ஒத்துமையா வாழறது கஷ்டமேயில்ல. அவங்கவங்க இடத்தைப் புரிந்துகொண்டு வாழ்ந்தால்...'' என்றாள்.

அவள் பேச்சைக் கேட்ட விக்னேஷ், மெய்மறந்து நின்றான், ''வித்யா குட்டி, எனக்கு ஒரு சந்தேகம். பி.இ படிக்கும்பொழுது சைட்ல ஏதாவது சைக்காலஜி கோர்ஸ் படிச்சியா என்ன?'' என்று அவளது கன்னத்தைத் தட்டினான். அதற்கு விடையாக அழகிய புன்னகையை ஃப்ளாஷ் செய்துவிட்டு அவன் மார்பின் மீது சாய்ந்துகொண்டாள்.



உன் வீட்டில்
ஒரு 'ஹோம் மேக்கராக'
இல்லாமல்
ஒரு 'ஹோம் அப்ளையன்ஸாக'
நான்
இருந்திருக்கலாம்...
உடைந்தால்,
வருத்தப்பட்டிருப்பாய்...
சரி செய்ய,
முயற்சிகள் எடுத்திருப்பாய்!

- ஷக்தி, பெருமாள்பட்டு

# ஆசை!



இந்த வயதிலும் ஏனோ
ஆசையாயிருக்கிறது
மூன்று சக்கர சைக்கிள்
மரக்குதிரை, தொட்டில்
சாவி கொடுத்தால்
கொட்டு மேளமடிக்கும்
கரடி பொம்மை
தட்டினால் நடைபயிலும்
நாய் பொம்மை
ஒலியெழுப்பும் கார்,
சுற்றி வரும் ரயில் வண்டி
இவற்றை வைத்து விளையாட
பெரியவர்களின் மனம்
குழந்தைகளுக்கும் புரியும்
போலிருக்கிறது...
உடைவதைத் தடுக்கவும்
ஓலமிடவும் தூரத்திலிருந்தே
என்னை நோட்டமிடுகிறாள்
என் பேத்தி!

- வி. கிரிஜா,
பெங்களூரு



ஷாம்பூ, எண்ணெய் முதலியன தீர்ந்த பின், பாட்டிலை இறுக மூடிக் கவிழ்த்து, இரவு முழுவதும் வைக்கவும். மறுநாள் காலை பாட்டிலில் இருந்த எல்லா எண்ணெயும் மூடியில் வந்து விட்டிருக்கும். இதனையும் எடுத்த பின் பாட்டிலை அப்புறப்படுத்த லாம்.

**- லக்ஷ்மி கணபதி, கோவை**

ரவிக்கைத் துணிகளில், பார்டர் வைத்து தயாரிக்கப்படும் வகையில், ஜரிகைக்கு பதில் அதே கலரில் நூல் பார்டர் வைத்து, தயாரித்தால் எல்லோரும் விரும்பி அணியும்படி இருக்கும்.

**- உஷா நாராயணன், சென்னை - 44**

வெயிலால் வரும் தலைவலிக்கு ஒரு டம்ளர் வெது வெதுப்பான நீரில் இரண்டு டேபிள் ஸ்பூன் எலுமிச்சை சாறும் அரை ஸ்பூன் உப்பும் கலந்து அருந்தவும்.

**- என். ராஜேஸ்வரி, பெங்களூரு - 27**

வயிற்றுவலி பாடாய்ப் படுத்துகிறதா? வெந்நீரில் நான்கைந்து சொட்டு நெய் விட்டுக் குடித்தால் நிவாரணம் கிடைக்கும்.

**- என். உஷா நடராஜன்,சென்னை - 75**




புதிதாக வாங்கும் துணிகள், செருப்பு, பைகள் போன்றவற்றுக்கு வாங்கிய உடன் ஒட்டுமொத்தமாக ஒரு தையல் போட் டால், நீண்ட நாள் உழைக்கும்.

**- சுபா, தஞ்சை**

அரிசி கழுவிய நீருடன் 1 சிட்டிகை மஞ்சள், 1 சிட்டிகை சேர்த்து காய்கறிச் செடி, பூச் செடிகளுக்கு ஊற்றினால் பூச்சி வெட்டுவதைத் தவிர்க்கலாம்.

**-பி. உதயராணி, பெரும்பாக்கம்**

மசாலா உணவுப் பொருள்கள் தயாரிக்கும் போது, பொருள்களை வதக்க நெய்யுடன் சிறிது வெண் ணெய் சேர்த்தால் சுவையும் மணமும் சூப்பராய் இருக் கும்.

**-வி.லோகநாதன், சென்னை - 53**

# இவை எல்லாமே ஆஹா 50 தான்!

இன்றைய தினம் மீடியாவும், டீ.வி சீரியல்களும் மாமியார் பற்றிய ஒரு தவறான எண்ணத்தையே பரப்பி வருகின்றன. நான், என் மாமியார் தெய்வம்மாள் பற்றியும் அவர்தம் சிறப்பு பற்றியும் எழுதியே ஆக வேண்டும்.

# சகோதரிகள் சபதம்!

என்னுடைய புகுந்த வீட்டில் நான்தான் மகளும், மருமகளும். என் கணவர், என் மாமி




யாருக்கு பதின்மூன்று ஆண்டுகள் கழித்து பிறந்த ஒரே பையன். அவர் பிறந்த ஒன்றரை ஆண்டு நிறைவில் எனது மாமியார் விதவைத் தாயானார். நான் பிறந்த வீட்டில், நானும் என் தங்கையும் மட்டும்தான். எனக்கு மூன்றுமே ஆண் குழந்தைகள். என் மூன்று பிரசவத்தையும் என் மாமியார், தன் பொறுப்பிலேயே பார்த்துக் கொண்டார். நான் பிறந்த வீடே செல்லவில்லை. இதெல்லாம் எனது மாமியாரின் பிறந்த வீடு வளர்ப்பு தந்த மன தைரியம்தான்.

என் மாமியாருடன் கூட பிறந்தவர்கள் ஏழு பெண்கள், ஒரு ஆண். இதில் என் மாமியார் ஆறாவது குழந்தை. இந்த எட்டு குழந்தைகளும் ஒரு தாய் மக்கள் கிடையாது! நான்கு தாய்களுக்கு *(3:1:1:3.)* பிறந்த குழந்தைகள். பிரசவத்தின்போது தொடர்ந்த மரணங்கள்தான் இதற்குக் காரணம். என்னுடைய ஏழு மாமியார்களையும், கடைசி இரு சின்ன மாமியார்களின் கணவர்களையும் எனக்குத் தெரியும்.

இதில் ஹைலைட்டான விஷயம் என்னவென்றால், எனது மாமியார்தான், *1951*-ல் முதன்முதலாக விதவைக் கோலம் பூண்டவர். இவர் சிறுவயதில் விதவைக் கோலம் கண்டதால் ஏற்கெனவே திருமணமான மூத்த மாமியார்களில் ஒருவர் இனி தான் சட்டை அணிவதில்லை என்றும், மற்றொருவர் வெள்ளைச் சட்டை மட்டும் அணிவது என்றும் இன்னொருவர், இனி தலைக்குப் பூ வைத்துக் கொள்வதில்லை என்றும் வைராக்கியமாய் இறுதிக்காலம்வரை செயல்படுத்தினார்கள். தற்போது என் மாமியாரும் அவருக்கு நேர் மூத்த சகோதரி ருக்மணியும் மட்டும்தான் உயிரோடு உள்ளனர்.

வெவ்வேறு தாயின் வயிற்றில் பிறந்திருந்தாலும் வேற்றுமையின்றி தங்களுடைய சபதத்தை நிறைவேற்றியது எத்தனை சிறப்பு!

- ஐ. பகவதி சுந்தரம், சென்னை



கே.எஸ்.கிருஷ்ணவேணி, சென்னை-75

வீடு, மனைவி, மக்களைத் துறந்து ஒரு நாயுடன் வந்த சீடனை ''சம்சாரி'' என்றார் பட்டினத்தார். அவர் இன்றிருந்தால், நம் சாமியார்களைப் பார்த்து என்ன சொல்லியிருப்பார்?

''ஐயாம் சாரி!''



சரோஜா வாஞ்சி, பெங்களூர் - 93.

எப்போதுமே புத்துணர்ச்சியுடன் இருக்க என்ன செய்யணும் டியர் அனுஷா?

எல்.எஸ்.டி.-ஐ தவறாமல் எடுத்துக் கொள்ளுங்கள்.

திகைக்க வேணாம் சரோஜா மேடம்! நான் சொல்ல வருவது போதைப் பொருள் சம்பந்தப்பட்டதல்ல. சிரிப்பு (laughing), பாட்டு (singing), ஆட்டம் (dancing) என்பதன் சுருக்கமே எல்.எஸ்.டி! வாழ்க்கையின் ஆதார ஆற்றல்களை இழக்கும்போதெல்லாம் இவற்றில் ஏதாவது ஒன்றில் ஈடுபட்டால், புத்துயிர் கிடைக்கும்! காட் இட்?

மு.மதிவாணன், அரூர்

பத்திரிகைகள் வாங்குவதற்காக ஒரு மாதத்திற்கு எவ்வளவு செலவு செய்வீர்கள்?

வாங்க ஆகும் செலவு என்னவோ கொஞ்சம் தான். ஆனால் பத்திரிகைகள் வருவதற்கு ஆகும் செலவுதான் எக்கச்சக்கம். ஐ மீன்... கல்யாணப் பத்திரிகைகள்!



இ.டி.ஹேமமாலினி, சென்னை - 101

பணத்துக்கு ஆசைப்படாத மனிதர்களைப் பார்க்க முடிவதில்லையே!

பணத்துக்கு ஆசைப்படுவதில் தப்பில்லை. பிறர் பணத்துக்கு ஆசைப் படுவதுதான் தப்பு!





அனுஷா நடராஜன்



மு.ரா.பாலாஜி, சொர்ணார்குப்பம்

இப்படி எல்லாம் கூட நடக்குதே? என்று வருந்திய விஷயம்?

தமிழ்நாட்டின் ஒரு கிராமத்தில், பத்தாம் வகுப்பு மதிப்பெண் பட்டியல் வாங்க, மாணவர்கள் தங்கள் பள்ளிக்கு வந்த போது, தலைமையாசிரியர் குடிபோதையில் மயங்கிக் கிடந்ததும், மதிப்பெண் தாளில் கண்டபடி கையெழுத்திட்டு கலாட்டா செய்ததும்தான்... அதையும் மீறி பல மாணவர்கள் 95 சதவிகிதம் மார்க் எல்லாம் வாங்குகின்றனரே... அந்தக் குழந்தைகளின் எதிர் காலம் ...?





எம். மகாலக்ஷ்மி, திண்டுக்கல்

மாமியாரும் நல்ல பெண்மணிதான். மருமகளும் தங்கமானவள்தான். ஆனால் இரண்டு பேரும் ஒரு வீட்டில் இருந்தால், சண்டை வருகிறதே...ஏன் அனுஷா?

நாய், நன்றியுள்ள பிராணிதான்! பூனையும் செல்லமாக வளர்க்கக்கூடிய விலங்குதான்! ஆனால், இரண்டும் ஒற்றுமையாக வாழ்கின்றனவா...? அதில் இன்னொரு விஷயம் இருக்கிறது. நாய்க்கு மகிழ்ச்சி வந்தால் வாலை ஆட்டும். பூனைக்குக் கோபம் வந்தால் வாலை ஆட்டும். நாய்க்குக் கோபம் வந்தால் காதுகளை நீட்டி விறைக்கும். பூனைக்கு மகிழ்ச்சி வந்தால் காதை நீட்டி விறைக்கும். இந்த லட்சணத்தில், ஒன்றை ஒன்று புரிந்து கொள்ளுமா என்ன?

# கண்டு கொள்ளாத ஆண்களை என்ன செய்வது?

சீனுப்ரியா, மைலாப்பூர்

கற்கண்டாய் மனைவி சமைத்துப் போட்டாலும், அதைக் கண்டு கொள்ளாத ஆண்களை என்ன செய்வது?

மாடு போல கணவன் உழைத்துக் கொட்டினாலும், அதைக் கண்டு கொள்ளாத பெண்களை என்ன செய்யலாமோ...

அதைவிட கொஞ்சம் கம்மியாக!

கே.எல்.சுபா, மேலகிருஷ்ணன்புதூர்

*எது தமிழ் பற்று?*

உங்கக் கேள்வியைப் படித்ததும், என் பேனா தானாக ஒரு 'ப்' போட்டு, தமிழ்ப்பற்று என ஆக்கியதே! அதுதான் நிஜ தமிழ்ப்பற்று!






பெயர் வெளியிட விரும்பாத வாசகி, சென்னை

*எனக்கு ஐம்பத்தைந்து வயது. அரசாங்க வேலையில் இருக்கிறேன். கல்யாணமான நாளிலிருந்தே என் கணவர் என்னிடம் அன்பு காட்டியது கிடையாது. இரண்டு ஆண் பிள்ளைகள். இருவருக்குமே திருமணமாகிவிட்டது. ஏதாவது பண உதவி, உடல் ஒத்தாசை, காரியமாகணும் என்றால் மட்டுமே ஒட்டிக் கொள்கிறார்கள். ஜாலி டூர், சினிமா, ஓட்டல் என்றால் மனைவி குடும்பத்துடன் போய் விடுகிறார்கள். வயதான மாமனார், மாமியாருக்கு முகம் சுணங்காமல் எல்லா வேலைகளையும் நான்தான் செய்கிறேன். ஆனாலும் ஒரு சின்ன பாராட்டுகூட கிடையாது. எனக்கு உடல்சுகமில்லை என்றாலும் ஏன் என்று கேட்க நாதியில்லை! கை நிறைய சம்பாதித்தும் அடிமை வாழ்வு வாழ்கிறேன். சுயநலப் பிண்டங்களுடன் போலியாக வாழ்ந்தது போதும். இவர்கள் யார் கண்ணிலும் படாமல் எங்கேயாவது போய் தனிமையில் வாழ விரும்புகிறேன். தங்களின் அறிவுரை என்னவோ?*

தாராளமாகத் தனியாகப் போங்க. ஆனால், அதற்கு முன்பு, அந்தப் பிரிவு, உங்களுக்கு நீங்கள் எதிர்பார்க்கும் நிம்மதியை, புது வாழ்வைத் தருமா என்று ஆலோசிக்கவும். முதலில் உங்கள் மனம், குடும்பப் பற்றை முழுமையாகத் துறக்கும் நிலையில் இருக்கணும். இல்லையென்றால், புது இடத்தின் தனிமையும், பழைய நினைவுகளின் பாரமும் சேர்ந்து உங்களைக் குதறிவிடும். வறு சட்டியிலிருந்து, அடுப்பு நெருப்புக்குள் விழுந்த கதையாகிவிடும்! அதற்குப் பதில், இருக்கும் இடத்திலேயே, எப்படி இவையெல்லாம் நம்மைப் பாதிக்காமல் வாழ்வது என்று யோசியுங்க. அதற்கு எத்தனையோ வழிகள் இருக்கு.

மேலும், நீங்க இப்போது மிகவும் உணர்ச்சிவசப்பட்ட நிலையில் இருக்கீங்க! எப்போதும் குழம்பிய நீரில் எதுவுமே தெரியாது. ஓரளவு தெளிவானதும் பாதையை வகுப்பது நல்லது.



விமலா ரங்கநாதன், கொல்கத்தா

*டியர் அனுஷா, நான் நம்ம மங்கையர்மலருக்கு கதை, கவிதை, சமையல் குறிப்பு, ஆஹா 50! என என்னென்னவோ அனுப்பி விட்டேன். எதுவுமே பிரசுரமாகவில்லை... எதை அனுப்பினா உடனடியா ஏத்துப்பீங்க?*

ஒரு வருஷ சந்தா!

**BRINDAVAN SENIOR CITIZEN FOUNDATION, COIMBATORE**

**ANNOUNCES THEIR THIRD PROJECT**

## "BRINDAVAN PARADISE"

**2 BED ROOM, SINGLE BEDROOM AND SINGLE ROOM BOOKING IN PROGRESS**



### FACILITIES OFFERED

★ Centrally located kitchen and dining hall which provides vegetarian food of good nutritional value. ★ Regular water supply, R O water for drinking. ★ Doctor's visit every day for medical care and tie- up with leading hospitals.★ Well maintained garden, walking space to move around, pollution free atmosphere, sewage treatment plant. ★ Prayer Hall, celebration of festivals, discourses and lectures. Good library.★ Maid servants to clean the cottages, 24 hour security.★ Underground cabling of electrical and telephone lines. ★ Transport and car parking facilities at reasonable cost. ★ Provision for cable TV, telephone, AC. ★ Gym, recreation room for carom, chess and cards.

**FOR MORE DETAILS VISIT OUR WEB SITE seniorhomebrindavan.com**

**CONTACT MR. R. MADHAVAN ( 94433 35848) MR. R. PARTHASARATHY (94426 14430)**

---

ஸ்ரீ வெங்கடாஜலபதி துணை



## ஜெய் ஹோட்டல்ஸ் & டிராவல்ஸ் பிரைவேட் லிமிடெட்

4,3வது குறுக்குத் தெரு, விவேகாநந்தா நகர், புதுச்சேரி - 605005

போன் : 0413-2201552, 2201613, செல் :(o) 94432-52652

E-mail : jhat@sify.com & jhat@sancharnet.ina

21.07.10 தமிழக, கேரள திவ்ய தேசங்கள் 95 டீலக்ஸ் வேனில் 13 நாட்கள். புறப்படும் இடங்கள் புதுவை ரூ. 9,100 சென்னை ரூ. 9,300 பெங்களூர் ரூ. 9,500

21.07.10 மலைநாடு, பாண்டியநாடு திவ்ய தேசங்கள் 31 டீலக்ஸ் வேனில் 7 நாட்கள்; புறப்படும் இடங்கள், புதுவை ரூ.5,000 சென்னை ரூ. 5,200 பெங்களூர் ரூ.5400

07.08.10 இலங்கை சுற்றுலா 8 நாட்கள், ரூ.9000+120 அமெரிக்க டாலர்கள் (1டாலர் சுமார் ரூ.46)

22.08.10 சிங்கப்பூர், மலேசியா சுற்றுலா, 6 நாட்கள் ரூ.17,000+400 அமெரிக்க டாலர்கள்

06.09.10 நவ(பஞ்ச)துவாரகா 12 நாட்கள் ரூ.9,000

06.09.10 நவ(பஞ்ச)துவாரகா, பத்ரி, கேதார் 20 நாட்கள் ரூ.14,000

06.09.10 நவ(பஞ்ச)துவாரகா, பத்ரி, கேதார்,அயோத்யா, நேபாள் 29 நாட்கள் ரூ.28,500

14.9.10 பத்ரி, கேதார் 12 நாட்கள் ரூ.9,000/-

14.09.10 பத்ரி, கேதார், அயோத்யா, நேபாள் 21 நாட்கள் ரூ.23,000

22.09.10 & 22.10.10 அயோத்யா, நேபாள் 13 நாட்கள் ரூ. 18,000

22.10.10 அயோத்யா, நேபாள், காசி (தீபாவளி கங்காஸ்நானம், தங்க அன்ன பூரனி, லட்டு தேர்) 21 நாட்கள் ரூ. 23,000

25.09.10 & 25.10.10 நேபாள் யாத்திரை விமானம் மூலம் : 5நாட்கள் புறப்படும் இடங்கள் சென்னை, பெங்களூர், ஹைதராபாத் மும்பை, டெல்லி Etc.

31.10.10 காசியாத்திரை (தீபாவளி கங்காஸ்நானம், தங்க அன்ன பூரனி, லட்டு தேர்) 12 நாட்கள் ரூ. 7,800

அனைத்து யாத்திரைகளிலும் விமானம் ரயில் (SL) போர்ட்டர் கூலி, பஸ்,டீலக்ஸ் வேன், சைவ உணவு, மினரல் வாட்டர், தனியரை தங்கும் வசதி கட்டணத்தில் அடங்கும்.

**அந்தப் பெரிய கார்க் கீ-போர்டின் கறுப்பு - வெள்ளை கட்டைகள் மீது ஒரு ஜோடி தளிர்க்கரங்கள் பதியப் பதிய ஹிந்தோளம் ராகத்தில் 'சாமஜ வர கமனா' ஜில்லென்று இழைந்து, தழைந்து, கல்பனா ஸ்வரத்துடன் மிதக்கின்றது...அடுத்து 'ஏன் பள்ளிக் கொண்டீரய்யா?'... பூவாணமாய் எம்பிய நாதம் காற்று அலைக்க அலைக்க விடுபடாத பூஞ்சாரமாய்க் குழைகிறது!**

கீ- போர்டு வாசித்த கே.மஹதிக்கு பதினொன்றே வயதுதான்! கோபால புரம் டி.ஏ.வி. பள்ளியில் ஏழாம் வகுப்பு! ஆனால் அவருடைய 'ப்ரொஃபைல்' எனப்படும் சுயக் குறிப்பு பத்து பக்கங்களுக்கும் மேல் நீள்கிறது. ஏகப்பட்ட 'பெஸ்ட் பெர்ஃபார்மர் அவார்டு'கள், 'யங் அச்சீவர் அவார்டு'கள்...' ரோட்டரி க்ளப்பின் அம்பாஸடர் சிறப்பு, 'பால ஸ்வர்ண ஜ்வாலா' பட்டம் என ஏதேதோ விசேஷங்கள்!

''ஒரு கல்யாணத்துக்குப் போயிருந்தோம். அங்க பதினொரு வயசு அண்ணா ஒருத்தன், கீ-போர்ட்டு வாசிக்கறதைப் பார்த்தேன்... எனக்கு அந்த இசை பிடிச்சுருந்தது....''அப்பா, இதைக் கத்துக்கறேன்!'' என்றேன். அப்பா உடனே எனக்கு ஒரு மாஸ்டரை ஏற்பாடு செஞ்சுட்டாரு. அப்ப எனக்கு நாலரை வயசு... அப்படித்தான் கீ-போர்டு கத்துக்க ஆரம்பிச்சேன்!'' என்கிறார் மஹதி.

''நிஜம்தான்! கீ-போர்டின் அடிப்படையை ஜான் என்ற பதினேழு வயசு இளஞரிடம் கற்றுக்கொண்டாள். சட்னு கிரகிச்சுக்கிட்டா! சில நாட்கள்லயே, தானாவே இங்கிலீஷ் ரைம்ஸை வாசிக்க ஆரம்பிச்சா! எங்களுக்கு ரொம்ப த்ரில் ஆயிடுச்சு. இசைமாமணி எம்.எஸ். மார்ட்டின்தான் மஹதியின் ஆரம்பக்கால குரு! அப்புறம், கான பூஷணம் லக்ஷ்மி அனந்தகிருஷ்ணன் கிட்ட சில இசை

உங்க ஊரிலும்
இதுபோன்ற இளம்
சாதனையாளர்கள் இருந்தால்
எங்களுக்கு அறிமுகப்படுத்துங்களேன்!

அடிப்படை நிபந்தனைகள்:

* வயது 5-15க்குள் இருக்க வேண்டும்.
* மாவட்ட/மாநில/தேசிய அளவில் பங்கேற்றிருக்க வேண்டும்.
* தகுந்த சான்றிதழ்கள், ஆதாரங்கள், புகைப்படங்களுடன் அனுப்பவும்.



நுணுக்கங்களைப் பயின்றாள். இசை மேதை டி.கே.ஜெயராமனின் முதன்மை சிஷ்யர் டி.ஜி. பத்ரி நாராயண், இவளோட வாசிப்பைப் பார்த்துட்டு, தன்னோட சிஷ்யையா ஏத்துக்கிட்டு இருக்காரு. மஹதியோட உழைப்புக்கும் இசை ஆர்வத்துக்கும் கிடைச்ச பரிசு இது!'' என்று நெகிழ்கிறார் மஹதியின் அப்பா கிஷோர் குமார். இவருக்கு தென் ரயில்வேயில் வேலை.





இருந்தா பர்ஃபெக்டா வாசிக்கலாம்! கீ-ஃபோர்டுல - 'பிச் பெண்ட்'ங்கிற ஒரு சிறிய சக்கரம் இருக்கும்! அதை ஒரு நுட்பத்தோட இயக்கினா, நாம கொடுக்க நினைக்கிற பாவம், கமகம் எல்லாம் அக்மார்க் தரத்தோட தரலாம்!'' என்று ஏதோ மியூஸிக் அகாடமியில் டெமோ தரும் பேராசிரியர் மாதிரி பதில் வருகிறது.

''2000லிருந்தே முழு நேர இரண்டரை மணி நேரக் கச்சேரிகள் பண்ண ஆரம்பிச்சுட்டா. மும்பை, சண்முகானந்தா ஃபைன் ஆர்ட்ஸ்ல ஆரம்பிச்சு, மலேசியா, சிங்கப்பூர் இசை விழாவரை நிறைய நிகழ்ச்சிகள் பண்ணியிருக்கா. அதுலயும் மலேசியாவில் திருமுறைப் பாடல்கள்னு தேவாரம், திருப்புகழ், திருவாசகம் பாடல்களை பாடிக்கொண்டே கீ - போர்டிலேயே வாசித்தது ரசிகர்களை வெகுவாகக் கவர்ந்துவிட்டது'' என்கிறார் தாயார் ரேவதி கிஷோர் குமார்!

# ஸ... மஹதி...

''மேற்கத்திய இசைக் கருவில், நம்முடைய சாஸ்த்ரிய இசையை வாசிக்கிறது புதுமையான முயற்சிதான். ஆனால் பாவம், கமகம்' எல்லாம் சுத்தமா வருமா? மற்ற வாத்தியங்களைப் போல 'கீ-போர்டில் கேல்குலேஷன் - வேரியேஷன் எல்லாம் எப்படிக் கொண்டு வர்றே?'' என்று கேட்டால்...

''மியூஸிக் ஈஸ் மேத்ஸ்! தாளத்துக்கு கவுண்டிங் உண்டு! கவனமா

''பான்யன்', 'ஸ்கார்ஃப்', 'விஷ்ராந்தி' போன்ற அமைப்புகளுக்கு நிதி திரட்டும் நிகழ்ச்சிகளை செய்தது மிகப் பெரிய மன நிறைவு தந்ததாகக் குறிப்பிடும் மஹதி, பேட்டி யை முடிக்கும்போது...

''எங்க பாட்டி தர்மாம்பாளை எனக்கு ரொம்பப் பிடிக்கும். அவங்கதான் என்னை ரொம்பவே மோட்டிவேட் பண்றவங்க! நான் இசைத்துறையில் நல்ல படியா வரணும்னு நிறைய பாடுபடறாங்க! அவங்களை நான் தாங்க் பண்றேன்னு எழுதுங்க ப்ளீஸ்!'' என்கிறார் ச,ரி,க,ம,மஹ...தி!

**- மங்களேஸ்வரி**
**படம்: ஸ்ரீஹரி**

# இருதய நோயாளிகளுக்கு



அறநிலையத்துறையில் உதவி கமிஷனராக பணியாற்றி 31.10.07ல் ஓய்வு பெற்ற சிவனானாகிய எனக்கு 61 வயது ஆகிறது. எனக்கு Sugar, BP உள்ளது. அதற்காக மருந்து, மாத்திரைகள் சாப்பிட்டு வந்தேன். வேகமாக நடந்தாலோ, ஓடினாலோ மூச்சு வாங்கியது. மேலும் தொடர்ந்து நடக்கவும் முடியவில்லை.

முகப்பேர் மெட்ராஸ் மெடிக்கல் மிஷன் மருத்துவமனைக்குச் சென்றேன். அங்கு X-ray, ECG, TMT, ஆஞ்ஜியோகிராம் போன்ற பரிசோதனைகள் செய்து, எனக்கு இருதயத்தில் 3 இடங்களில் 90% அடைப்பு உள்ளதாகவும், உடனே பைபாஸ் சர்ஜரி செய்ய வேண்டும் என்றும் கூறினர்.

இம்மருத்துவமனைக்கு அருகிலுள்ள Dr. K.M. செரியன் Frontier Life Line மருத்துவமனைக்கு சென்று விபரம் கேட்டேன். அவர்களும் பைபாஸ் சர்ஜரி செய்ய வேண்டும் என்று கூறினர்.

பைபாஸ் சர்ஜரி செய்ய எனக்கு விருப்பமில்லாததால், அதற்கு மாற்றுவழி உள்ளதா என விசாரித்து கொண்டு இருந்தபோது, ஒரு நாள் Jaya Plus Tvயில் Oxymed Hospitalன் தலைமை மருத்துவர் டாக்டர். அயாஸ் அக்பர் அறுவை சிகிச்சை இல்லாமல் இருதய அடைப்புகளை நீக்க முடியும் என்று கூறினார்.

உடனே நான், நந்தனம் ஆக்ஸிமெட் மருத்துமனைக்குச் சென்று டாக்டரை சந்தித்தேன். நன்கு விசாரித்த பிறகு சிகிச்சை எடுத்துக் கொள்ள சம்மதித்தேன்.

எனக்கு 35 நாட்கள் சிகிச்சை எடுக்கச் சொன்னார்கள். இந்த சிகிச்சையில் மருத்துவமனையில் தங்கும் அவதி இல்லை, வலி இல்லை, எந்த சிரமுமின்றி நான் சிகிச்சை பெற்றேன். எனது சிகிச்சை நாட்களில், ஒவ்வொரு நாளும் BP, Heart Rate, ECG Monitoring செய்தார்கள். மேலும் Duty Doctors, Nurses, Other Staffs அனைவரும் என்னை அக்கறையுடனும், கனிவுடனும் கவனித்துக்கொண்டனர்.

# ஓர் வரப்பிரசாதம்

நான் சிகிச்சை எடுத்த 10 நாட்களிலேயே என்னுடைய ஆரோக்கியத்தில் மாற்றம் கண்டு, எனது மனைவிக்கும் இங்கு சிகிச்சை எடுக்கச்சொன்னேன்.

35 நாட்கள் சிகிச்சைக்கு பின் 90% அடைப்புகள் குறைந்து வெறும் 11% மட்டுமே இருந்தது. என் மனைவியும் பூரண குணமடைந்துள்ளார்.




அறுவை சிகிச்சையின்றி இருதய நோய்க்கு சிகிச்சை அளிக்கும் ஆக்ஸிமெட் மருத்துவமனை இருதய நோயாளிகளுக்கு ஓர் வரப்பிரசாதம்.

மாற்று வழி மருத்துவத்தில் சிறந்த சிகிச்சை அளித்து கொண்டு இருப்பதற்காக கொல்கத்தாவில் நடைபெற்ற 18வது அகில உலக மாநாட்டில் Shiromony விருது பெற்ற டாக்டர் அயாஸ் அக்பர் அவர்களிடம் சிகிச்சை பெற்றதை நினைத்து நானும், என் மனைவியும் பெருமைபடுகிறோம்.

நான் பல மருத்துவமனைகளில் சிகிச்சைக்காக அலைந்து திரிந்த போது என்னைப் போன்ற நிறைய இருதய நோயாளிகள் சர்ஜரிக்கு பயந்து கஷ்டப்படுவதை கண்டேன். எனவே நான் பெற்ற எளிமையான சிகிச்சை பற்றியும் அனுபவத்தை பற்றியும் பகிர்ந்து கொண்டு அனைவரும் இந்த மாற்று சிகிச்சையை என்னைப் போன்று பெற்று பயனடைய வேண்டும் என எண்ணி என்னுடைய தொலைபேசி எண்ணை கொடுத்துள்ளேன்.

செல் : 9444945415.

மேலும் விவரங்களுக்கு

**OXYMED HOSPITALS**
PRIVATE LIMITED
CLOSE TO YOUR HEART
786, Anna Salai, Ch-35. Ph : 044-42131010 / 1014
E-mail : oxymedhospitals@yahoo.com
Website : www.oxymedhospital.in

advt.

தூரிகை டியூஷன்

# மினிபட்ஜெ

துளசி கண்ணன்
































▲ தேவையான பொருள்கள் ▲
கலர் சார்ட் பேப்பர். ஃபேப்ரிக் க்ளூ. ஃபேப்ரிக் கலர்ஸ், செராமிக் பவுடர், யெல்லோ கார்பன் ஷீட், டிஸைன் ஷீட், கேன்வாஸ் போர்டு (A4), பென்சில். சாட்டின் ரிப்பன், கோல்டன் லேஸ், கத்தரிக்கோல்.

# மியூரல்-வால் ஹேங்கிங்!

செய்முறை

★ கேன்வாஸ் போர்டு மீது மஞ்சள் நிற கார்பன் வைத்து அதன் மேல் கொக்கு டிஸைன் (தேன்வயான டிஸைன்) ஷீட் வைத்து, கவனமாக ட்ரேஸ் செய்து கொள்ளவும்.

★ செராமிக் பவுடருடன் ஃபேப்ரிக் க்ளூ சேர்த்து நன்றாகக் கலந்து (சற்று தளர்வாக) கொள்ளவும்.

★ கொக்கின் (டிஸைனின்) மீது ஃபேப்ரிக் க்ளூவை நிரப்பி, அதற்கு மேல் கலந்து வைத்த செராமிக் பவுடரை பிரஷ்ஷின் உதவியுடன் நிரப்பவும். தேவையெனில் டிஸைனின் எஞ்சியிருக்கும் பகுதியிலும் இலேசாக செராமிக் பவுடரை நிரப்பவும். (உங்கள் கற்பனைக்கேற்றவாறும், டிஸைனுக்குத் தகுந்தபடியும் செராமிக் பவுடரை கேன்வாஸ் போர்டில் தேவையான இடங்களில் நிரப்பி அழகுப் படுத்திக் கொள்ளலாம்.)

★கொக்கு டிஸைனின் மீது பூசிய செராமிக் நன்றாகக் காய்ந்த பிறகு, கேன்வாஸ் ஃபோர்டு முழுவதும் வெள்ளை நிற ஃபேப்ரிக் நிறத்தை நிரப்பவும்.

★ கொக்கு டிஸைனுக்கு வெளிர் நீல நிறத்தை அவுட்லைனாக கொடுக்கவும். டிஸைனின் கீழ் இருக்கும் (கேன்வாஸ் போர்டு கீழ் பகுதி ) தண்ணீர் போன்ற டிஸைன் பகுதியில் அடர்நீல நிறத்தையும், வெள்ளை நிறத்தையும் கலந்து கொடுக்கவும். டிஸைனின் மேல்பகுதியில் வெளிர் நீல நிறத்தை இலேசாக நிரப்பவும். கொக்கின் கால் பகுதிக்கு பிரௌன் நிறமும், மூக்குப் பகுதிக்கு கருஞ்சிவப்பும், கண்ணுக்கு (கீழே இருக்கும் மீனுக்கும்) கறுப்பு நிறமும் நிரப்பவும்.







இப்போது அழகான கொக்கு டிசைன் தயார்.

★ டிசைனின் மீது நிறமிடும்போதும், அவுட்லைன் கொடுக்கும்போதும் கவனமாகச் செய்ய வேண்டும். மியூரல் வால் ஹேங்கிங் மட்டுமல்ல பெயிண்டிங் என்றாலே அழகான டிசைனும், அதை இன்னும் அழகுப்படுத்தும் நிறங்களும் தான் முக்கியம். எனவே அதைத் தேர்ந்தெடுப்பதில் கவனம் தேவை.

★ கலர் சார்ட் பேப்பரை, கேன்வாஸ் போர்டு அளவுக்கு கட் செய்து, உள்ளிருக்கும் பகுதியை மட்டும் நீக்கவும். கேன்வாஸ் போர்டின் நான்கு முனைகளிலும் ஃபேப்ரிக் க்ளூ தடவி சார்ட் பேப்பரை ஒட்டவும். (படம் 12)

★ சார்ட் பேப்பரின் மேல், ஃபேப்ரிக் க்ளூ தடவி, அதன் மேல் கோல்டன் லேஸ் ஒட்டி நான்கு முனைகளின் ஓரங்களையும் அலங்கரிக்கவும்.

★ கேன்வாஸ் போர்டை திருப்பி 'ப' வடிவத்தில் சாட்டின் ரிப்பனை ஒட்டவும். மியூரல் வால் ஹேங்கிங் தயார்!

பர்த்டே பார்ட்டி, திருமணம் என அனைத்து நிகழ்ச்சிகளுக்கும் இதைப் பரிசாகக் கொடுக்கலாம்.




இந்த டிசைனை கடையில் கொடுத்து ஃப்ரேம் செய்தால் கிராண்ட் லுக் கிடைக்கும். ஸ்டார் ஓட்டல்களில் அதிகம் அலங்கரிக்கும் ஃபெயிண்டிங் இது. சின்னச் சின்ன கிஃப்ட் பொருள்களிலிருந்து பெரிய பெரிய சுவர் மியூரல் வரை இதை ஆர்டர் எடுத்து செய்யலாம். கொஞ்சம் கற்பனையும் அதிக ஆர்வமும் இருந்தால் வீட்டிலிருந்தபடியே வருமானம் பார்த்து விடலாம்.

## முதலீடு எவ்வளவு?

**கேன்வாஸ் போர்டு (A4) - அளவில் உருவாக்கப்படும் ஒரு டிசைனுக்குத் தேவைப்படும் முதலீடு ரூ. 100 வரை மட்டுமே. இந்தப் படத்தை ஃப்ரேம் செய்து இன்னும் அதிகமான விலை வைத்தும் விற்கலாம்.**

**தொகுப்பு: லக்ஷ்மி**




ஸ்ரீ அன்னையின் அன்பர்கள் - ஜனகன் சங்கை புத்தக நிலையம், சென்னை - 17, விலை ரூ.60.00

அறிஞர் கே.ஆர்.சீனிவாசய்யங்கர் உட்படப் பதினெட்டு அன்னையின் அன்பர்களைப் பற்றி சுருக்கமான விவரக் குறிப்புகள் அடங்கிய பயனுள்ள நூல். காலணிகளைச் சுற்றியிருந்த காகிதம்கூடப் படிக்கத் தூண்டி ஆன்மிக ஈடுபாட்டுக்கு உதவும் என்கிற அமல்கிரணின் அனுபவம் வெகு சுவாரசியமானது.




மைக்ரோவேவ் ஓவனில் சைவ - அசைவ சமையல் - செஃப் சுரேஷ், கற்பகம் புத்தகாலயம், சென்னை - 17, விலை ரூ.75.00

மணத்தக்காளி மோர்க்குழம்பு, வெண்டைக்காய் தேங்காய்ப் பால் குழம்பு என்று வித விதமான சமையல் குறிப்புகள். மைக்ரோவேவ் உலையைப் பயன்படுத்தும் முறை பற்றிய குறிப்பும் உண்டு.




சுட்டீஸ் டிபன் பாக்ஸ் டிபன்கள்- கீதா பாலகிருஷ்ணன், BAAGEES, சென்னை - 20, விலை ரூ.95.00

குழந்தைகள் பள்ளிக்குப் போகும் போது சுவையாக சிற்றுண்டி வகையிலும் வேண்டுமே. வெல்லப் பயறு சுண்டல் முதல் வெங்காயக் குழிப்பணியாரம்வரை விதம்விதமாகச் செய்து தந்து 'சுட்டீஸ்'களைக் கவர உதவும் நூல்.




தினம் ஒரு திருவாசகம்- சி.எஸ். தேவநாதன், திருமகள் நிலையம், சென்னை - 17, விலை ரூ.65.00

மாணிக்கவாசகர் அருளிய திருவாசகப் பாடல்களை 'தினம் ஒன்று' என்று பாடி வழிபட உதவும் நூல். திருவெம்பாவைப் பாடல்களை டிசம்பர் - ஜனவரியில் வைத்திருக்கலாம். கடுங் கோடையான மே மாதம் ஏன்?




தங்கமான பாப்பாவை வளர்ப்பது எப்படி? வாதூலன், சிவம் புக்ஸ், சென்னை - 34, விலை ரூ.30.00

குழந்தை வளர்ப்பைப் பற்றியும் பெற்றோரின் கடமைகள் என்ன என்பதையும் கதை சொல்கிற பாணியில் உரைக்கும் சிறு நூல்.

- வாசகன்

புக் பேங்க்

படிக்க... பயன் பெற...

சிகரமான

ன முடிவு !

வீடு !

72
LUXURY
2 & 3 BR
APARTMENTS

**2BR - 1275 Sq.ft at**
Rs.42.50 lakhs

**3BR - 1785 Sq.ft at**
Rs.59.00 lakhs

Registration Charges extra.

**43 Flats Booked already**

பொறியியல் தொழிற்சாலைகள், IT
வரும் கோவையில் ரியல் எஸ்டேட்
அடைந்து வருகிறது.
கழகங்கள், மருத்துவமனைகள்,
லைகளுக்கு அருகே உருவாகி வரும்
க்கு ஏற்றதாக உருவாகி வருகிறது.
கேட்டு அதன் சிறப்பறிந்து நீங்களும்

**இப்பொழுது ஒரு**
**இல்லத்தை உங்கள் வசமாக்கிட**
**ஓர் வாய்ப்பு**




**Building on the Foundation**
**of your Trust**

## சிறப்பம்சங்கள்

- கிளப் ஹவுஸ்
- பூங்கா மற்றும் குழந்தைகள் விளையாட்டு தளம்
- பைப்டு கேஸ் சப்ளை
- போர்வெல் தண்ணீருக்கு R.O. Plant
- ஹைட்ரோ நியூமேட்டிக் பம்பிங் சிஸ்டம்
- சூவேஜ் ட்ரீட்மெண்ட் பிளாண்ட்

**முழு வீச்சில் நடைபெற்றுக்**
**கொண்டிருக்கும் கட்டுமானப் பணி**
**ஆகஸ்ட் 2011-ல் முடிவடையும்.**

**P.P. Subramaniam. Legal Consultant : Mr. P.R. Ramakrishnan.**

**பி. லிட்.,**

30899 செல் : 94433 41901, 94430 21990

Member of






# சந்தித்தோம்... சிந்தித்தோம்...



ஏப்ரம் மாதம் 17, 18, 24 ஆகிய தேதிகளில் அருப்புக்கோட்டை, சிவகாசி, ஸ்ரீவில்லிப்புத்தூர், இராஜபாளையம், போடிநாயக்கனூர், கம்பம் போன்ற ஊர்களுக்குச் சென்று, நமது மங்கையர் மலர் வாசகியரைச் சந்தித்து, அளவளாவினோம். ஆடிப்பாடி, போட்டிகள்

## அருப்புக்கோட்டை










வாசகியரின் அன்புக் கோட்டை... அடடா... அதில்தான் எத்தனை சேட்டை!

## சிவகாசி










பட்டாசு மத்தாப்பு மட்டுமா சிவகாசி! பரிசும் புன்னகையும் மிகுந்ததே படு குஷி!

# சந்தோஷித்தோம்!

நடத்தி, பரிசுகள் தந்து குதூகலித்தோம். அடேயப்பா! அம்மா சொல்லக்கூடாது... உற்சாகம் கரை புரண்டோட, வாசகியர் பங்கு கொண்டு சிறப்பித்ததுடன் மங்கையர் மலரை மேம்படுத்த சீரிய கருத்துகளையும் தந்து உதவினார்கள். அனைவருக்கும் நன்றி! நன்றி!









இன்பம் தந்த ராஜபாளையம்...
இதயம் தொட்டது பாச வளையம்!

மங்கையர் மலர் படிக்கிறப்போ. ஏதோ பெஸ்ட் ஃப்ரண்ட்கிட்ட பேசற மாதிரி ஹாப்பியா இருக்கு!

தன்னம்பிக்கைக் கட்டுரைகள் ஒவ்வொன்றும் வைட்டமின் மாத்திரைகள்!





ஆடி வா... தேடி வா...
தித்திக்குதே பசும்பால்கோவா!













போடிநாயக்கனூர்



சினிமா,
அரசியல்... இரண்டும்
தேவையேயில்லை!






ஏலம் மணக்குது...
காலம் சிறக்குது...
கவலை மறக்குது...
ஆவலைத் தூண்டுது!

கம்பம்









மங்கையர் மலரை
மாசம் இரண்டு
புத்தகமா கொண்டு
வாங்க... ப்ளீஸ்...





பம்...பம்..பம்... ஆரம்பம்!
கம்பம் தந்ததே பேரின்பம்!

(மே மாத வாசகர் சந்திப்புப் படங்கள்
அடுத்த இதழில்...)



# மங்கள



ஆடி அமாவாசை முடிந்து அடுத்து வரும் செவ்வாய்க்கிழமையிலிருந்து இந்த நோன்பு ஆரம்பம். கல்யாணமான புதுப்பெண்கள், பிறந்த வீட்டுக்கு வந்து நான்கு வார செவ்வாய்க்கிழமையும் இந்த நோன்பை பக்தியுடன் செய்வார்கள். ஐந்தாவது வார செவ்வாயன்று சுமங்கலிப் பெண்கள் அனைவரும் கட்டாயம் செய்ய வேண்டிய நோன்பு இந்த மங்கள கௌரி நோன்பு.

வீட்டில் அம்மனை அலங்கரித்து, புரோகிதர் மந்திரம் சொல்ல அட்சதை, பூவுடன் பூஜை செய்வார்கள். பூஜை முடிந்து கையில் மஞ்சள் சரடு கட்டிக் கொள்வார்கள். இந்த நோன்பில் முக்கியமானது முறத பாகனம் (இரண்டு புதிய முறங்கள்), மூடி

போட்ட பிளாஸ்டிக் டப்பா கொடுத்தல். பிளாஸ்டிக் டப்பாவில் வெற்றிலை, பாக்கு, பழம், தேங்காய், மஞ்சள், குங்குமம், பூ, ரவிக்கைத் துணி, காசு, அரிசி, வெல்லம், பருப்பு வகைகள், கண்ணாடி வளையல், கண்ணாடி, சீப்பு, போன்ற மங்களகரமான பொருள்கள் அனைத்தையும் போட்டு, அதற்கு சந்தனம், குங்குமம் இட்டு பூஜை செய்வார்கள்.

# கௌரி நோன்பு!



பிறகு, பூஜை செய்பவர்கள், சுமங்கலிகளை பலகையில் உட்கார வைத்து இலைக் கொடுத்து, சந்தனம், குங்குமம் கொடுத்து பூவும் கொடுப்பார். பின் டப்பாவை புடவை முந்தானையின் இருபுறமும் பிடித்துக்கொண்டு (வாங்கும் சுமங்கலியும் முந்தானையால் இருபுறமும் பிடித்துக் கொள்வார்) ''சுமங்கலி சுமங்கலி இந்த மங்கலப் பொருள்களை உனக்கு கொடுக்கிறேன்... வாங்கிக் கொள்'' என்று சொல்லிக் கொடுப்பார். வாங்குபவர் ''நானும் சந்தோஷமாக வாங்கிக்கொண்டு உன்னை மனமார ஆசீர்வதிக்கிறேன்'' என்றும் சொல்லி அட்சதை போடுவார். வந்திருக்கும் அனைவருக்கும் தாம்பூலம் கொடுத்து, பாட்டுப் பாடி மிகக் கோலகலமாக நோன்பை கொண்டாடுவார்கள்.

**நோன்புக்கு செய்ய வேண்டியவை.**

**தெம்பிட்டு**

கால்கிலோ அரிசி மாவில் வெல்லத்தை சீவிப் போட்டு, மாவை கட்டியில்லாமல் கிளறி, சிறிது நெய் விட்டுப் பிசைந்து உருண்டை பிடித்து வைப்பார்கள்.

**சிகிலி**

எள்ளை வறுத்து இடித்து, (மிக்ஸியில் போட்டும்) வெல்லம் சேர்த்து உருண்டை பிடித்து வைத்துக் கொள்வார்கள்.

**கோசம்பரி**

பயத்தம் பருப்பை பத்து நிமிடங்கள் ஊற வைக்க வேண்டும். இதில் கேரட், மாங்காய், வெள்ளரித் துருவல், தேங்காய்த் துருவல், உப்பு தேவையான அளவு கலந்து, கறிவேப்பிலை, மல்லி, எலுமிச்சைச் சாறு சேர்க்க ருசியான கோசம்பரி ரெடி.

இம்மூன்றையும் நைவேத்யம் செய்து, எல்லோருக்கும் கொடுப்பார்கள்.

**கெஜவஸ்திரம் அதாவது பஞ்சினால் செய்த பூமாலை**

வசதியில்லாதவர்கள்கூட இந்த நான்கு பொருளையும் அம்பாளுக்குச் சமர்ப்பணம் செய்தால், நாம் வேண்டும் வரம் தருவாள் என்பது ஐதிகம். தெலுங்கு, கன்னட இனத்தவர்களின் முக்கிய பண்டிகை இந்த மங்கள கௌரி நோன்பு.

**-சீதாலக்ஷ்மி, கோவை - 31**

பாலா நடராஜன்

கடந்த இதழில் நுகர்வோர் பாதுகாப்பு சட்டம் மற்றும் நுகர்வோர் நீதி மன்றம் குறித்த பல விஷயங்களைப் பார்த்தோம். இப்போது நுகர்வோர் பாதுகாப்பு சட்டத்தின்படி, பாதிக்கப்பட்ட நுகர்வோர்கள், சம்பந்தப்பட்டவர்கள் மீது மாவட்ட, மாநில மற்றும் தேசிய நுகர்வோர் நீதிமன்றங்களில் போட்ட சில முக்கியமான வழக்குகள் பற்றியும், அவற்றில் வழங்கப்பட்ட தீர்ப்புகள் பற்றியும் பார்க்கலாம்.







# பாதிக்கப்பட்டால்

ஒருவர் தனக்கு வந்த, நாற்பதாயிரத்துக்கான வெளியூர் செக் ஒன்றை தமது கணக்கில் டெபாசிட் செய்தார். ஆறு மாதமாகியும், அந்தத் தொகை அவரது கணக்கில் கிரெடிட் ஆகவில்லை. பாதிக்கப்பட்ட வாடிக்கையாளர் இதற்கான காரணத்தைக் கேட்டபோது, வங்கி தரப்பில் சரியான பதில் கிடைக்காததால், மாவட்ட நுகர்வோர் நீதிமன்றத்தை அணுகினார். குறிப்பிட்ட செக்கை, தாங்கள் வழக்கமாக தபால்கள் அனுப்பும் கூரியர் நிறுவனத்தின் மூலமாக அனுப்பிவிட்டதாகவும், செக் காணாமல் போனதற்கு கூரியர் நிறுவனமே பொறுப்பு என்றும் வங்கி வாதம் செய்து, தன் பொறுப்பைத் தட்டிக் கழிக்கப் பார்த்தது. கூரியர் நிறுவனத்திடம் விசாரித்தபோது, அவர்கள் தாங்கள் நேரிடையாக அந்தச் செக்கை உரிய வங்கிக் கிளையில் பட்டுவாடா செய்யாமல், சர்டிஃபிகேட் ஆஃப் போஸ்டிங் மூலம் விலாசதாருக்கு அனுப்பி வைத்துவிட்டது அம்பலமானது. இதற்கிடையில், குற்றம் சாட்டப்பட்ட வங்கிக் கிளை, சம்பந்தப்பட்ட செக்கை அதற்குரிய வங்கிக் கிளைக்கு அனுப்பும்போது அதன் கவர் மீது, அந்த வங்கிக் கிளையின் முகவரியை எழுதாமல், அதே ஊரில் இருக்கும் தங்கள் வங்கிக் கிளையின் முகவரியையே தவறாக எழுதி கூரியர் நிறுவனத்திடம் கொடுத்துவிட்ட தவறும் வெளிச்சத்துக்கு வந்தது. வங்கிச் சேவையில் குறைபாடு காரணமாக அந்த வாடிக்கையாளர் பாதிக்கப்பட்டுள்ளார் என்றும், அதற்காக வங்கி நஷ்டஈடு அளிக்க வேண்டும் என்றும் மாவட்ட நீதிமன்றம் தீர்ப்பளித்தது.

வங்கியோ இந்தத் தீர்ப்பை எதிர்த்து மாநில ஆணையத்தில் முறையீடு செய்தது. கூரியர் நிறுவனம் தவறு செய்திருந்தாலும், செக்கை அனுப்பிய கவரின்மீது தவறான முகவரி எழுதியதுதான் இந்தப் பிரச்னைக்கு மூலகாரணம். எனவே, வங்கியின் பக்கம்தான் தவறு என்று மாநில ஆணையமும் முடிவில் தீர்ப்பளித்தது.

இன்னொரு வங்கியின் வாடிக்கையாளர், தனது செக் புத்தகத்தை, தொலைத்துவிட்டார். அதை யாராவது தவறாகப் பயன்படுத்தி பணம் எடுத்துவிடக் கூடாதே என்று பயந்து, முன் ஜாக்கிரதையாக தொலைந்த செக்குகளின்

ஓர் அயல்நாட்டுப் பயணத்தின்போது ஒரு பயணி, தனக்கு வழங்கப்பட்ட உணவில் கண்ணாடித்துண்டு இருப்பதைக் கண்டு அதிர்ந்துபோனார். உடனே விமானப் பணிப்பெண், கேப்டன் ஆகியோரிடம் புகார் சொல்ல, அவர் தவறுக்கு வருத்தம் தெரிவித்தாலும், மாற்று உணவு தர இயலாமையைத் தெரிவித்தார்கள். விமானப் பயணத்தின் போது அவர் பட்டினி கிடக்க நேரிட்டது.

இந்தியா திரும்பிய அந்தப் பயணி, சம்பந்தப் பட்ட விமான நிறுவன அலுவலகத்தில் புகார் செய் தார். அவர்கள் வருத்தம் தெரிவித்துவிட்டு, அடுத்த முறை அவர்களது நிறுவன விமானத்தில் அவர் பயணம் செய்யும்போது 50% கட்டணச் சலுகை அளிப்பதாக எழுத்து பூர்வமாகத் தெரிவித்தார்கள். பயணிக்கு இதில் திருப்தி இல்லை. நுகர்வோர் கோர்ட்டுக்குப் போனார்.

அங்கே, விமான நிறுவனம் உணவில் கண் ணாடித்துண்டு இருந்த குற்றச்சாட்டையே முற்றிலு மாக மறுத்தது. ''அப்படி என்றால் எதற்காக அந்தப் பயணிக்கு தக்க காரணமின்றி 50% கட்டணச் சலுகை கொடுத்தீர்கள்?'' என்ற கேள்விக்கு, அவர்களால் திருப்திகரமான விளக்கம் அளிக்க முடியவில்லை. அந்தப் பயணிக்கு விமான நிறு வனம் நஷ்டஈடு வழங்கும்படி தீர்ப்பானது. அப் பீலுக்குப் போனபோது தேசிய ஆணையமும் நஷ்டஈடு தரவேண்டும் என்ற தீர்ப்பையே உறுதி செய்தது.

எண்களைக் குறிப் பிட்டு எழுத்துமூலமாக 'ஸ்டாப் பேமென்ட் ஆர்டர்' கொடுத்தார். வங்கி யிலும் அதைக் குறித்து வைத்துக் கொண்டு அதற் குரிய கட்டணத்தையும், அவ ரது வங்கிக் கணக்கிலிருந்து எடுத்துக் கொண்டார்கள். ஆனால், அடுத்த சில தின களிலேயே காணாமல்

# பணம் உண்டு!

போன செக் புத்தகத்திலிருந்து நான்கு செக்குகளைப் பயன் படுத்தி யாரோ பணம் எடுத்து விட்டார்கள். பாதிக் கப்பட்ட வாடிக்கையாளருக்கு நுகர்வோர் கோர்ட் மூலம் நிவாரணம் கிடைத்தது.

இவை மட்டுமல்லாது வங்கிக் கணக்கில் போதிய பணம் இருந்தும், கவனக் குறை வாக 'போதிய பணம் இல்லை' என்று சொல்லி செக்கைத் திருப்பி அனுப்பிவைத்தபோது, பாதிக்கப்பட்டவர், 'வங்கி தன் நற்பெயருக்குக் களங்கம் ஏற்படுத்திவிட்டதாக' நுகர் வோர் நீதிமன்றத்துக்குப் போய் நிவாரணம் பெற்ற சம்பவங்களும் நிறைய உண்டு.



**ப**ஸ் பயணத்தின்போது முன் பதிவு செய்யப்பட்டிருந்தும், நடத்துநர் அந்தப் பயணிக்கு சீட் ஒதுக்காமல் போனதால், தான் போக வேண்டிய ஊருக்குப் போக முடியாமல் திண்டாடிய பயணி, பாக்கி சில்லறை தராத நடத்துநர்




**கொ**ளுத்தும் கோடையில் ரயிலில் நீண்ட தூர பயணமாக குடும்பத்துடன் பயணித்தார் ஓர் அதிகாரி. அவர் பயணம் செய்த ரயில் பெட்டியில் வாஷ்பேசின், டாய்லெட் இரண்டிலும் தண்ணீர் வராமல் போகவே, ரயில்வே ஊழியர்களிடம் புகார் செய்தபோது, தண்ணீர்




குழாய் வெகு நாட்களாகவே உடைந்துவிட்டதாகத் தெரிவித்தார்கள். கோடை காலத்தில் ரயில் பயணத்தின்போது தண்ணீரில்லாமல் தாங்கள் பட்ட கஷ்டங்களைக் குறிப்பிட்டு, அதற்கு ரயில்வே துறையின் சேவை குறைபாடுதான் காரணம் என்று சொல்லி, நஷ்டஈடு கேட்டு நுகர்வோர் நீதிமன்றப் படி ஏறினார்.

மனுதாரரது புகார் ஆதாரமில்லாதது என்று ரயில்வே நிர்வாகம் மறுத்தது. குழாய் பழுதுபட்டிருந்தது, அதை ரயில்வே நிர்வாகம் சரி செய்யாதது, தண்ணீருக்காக அவர்கள் பட்ட அவதி ஆகிய எல்லாவற்றையும் மனுதாரர் ஆதாரங்களுடன் கோர்ட்டில் நிரூபித்தார். ரயில்வே நிர்வாகம் பாதிக்கப்பட்ட நுகர்வோருக்கு நஷ்டஈடு வழங்க வேண்டும் என்ற தீர்ப்பு வந்தது. அப்பீலில் மாநில ஆணையம் ரயில்வே நிர்வாகத்தின் பக்கம்தான் தவறு என்ற சொன்னாலும், நஷ்ட ஈடு தொகையைக் குறைத்துத் தீர்ப்பளித்தது. தேசிய ஆணையத்தில் மேல் முறையீட்டுக்குச் சென்றது ரயில்வே. ஆனால், அங்கேயும் அதன் வாதம் எடுபடவில்லை.

**ர**யில்வே சம்மந்தப்பட்ட இன்னொரு வழக்கைப் பற்றி சொல்கிறேன். தொகை சின்னதுதான் என்றாலும் கொள்கை அடிப்படையில் இது ஒரு முக்கியமான தீர்ப்பு. ஒருவர், ரயில்வேயின் வாகனங்கள் நிறுத்தும் இடத்தில், இரண்டு சக்கர வாகனங்களை நிறுத்துவதற்கு ரயில்வே நிர்வாகம் நிர்ணயித்திருந்த ஐம்பது காசு கட்டணத்துக்குப் பதிலாக, மூன்று ரூபாய் கொடுக்க நிர்பந்திக்கப்பட்டார். ஒப்பந்தக்காரரின் ஊழியரிடம் இதை அவர் தட்டிக் கேட்டபோது, கேவலமாகத் திட்டிவிட்டார். பாதிக்கப்பட்டவர், ரயில் நிலைய

ஆகியோர் மீது பாதிக்கப்பட்ட பயணிகள் நுகர்வோர் நீதிமன்றத்தில் வழக்குப் போட்டு நிவாரணம் பெற்ற சம்பவங்களும் அதிகம் உண்டு.

இதுபோல வீடு கட்டித் தரும் நிறுவனங்கள், இன்ஷ்யூரன்ஸ் கம்பெனிகள், வீட்டு சாதன உற்பத்தி நிறுவனங்கள், விற்பனையாளர்கள், டாக்டர்கள், மருந்துவ



அதிகாரியிடம் புகார் செய்தபோது, ''நான் ஒன்றும் செய்வதற்கில்லை; புகார் பெட்டியில் புகார் எழுதிப் போடுங்கள்'' என்று சொல்லிவிட்டார். உடனே புகார் எழுதிப் போட்டும், அதைத் தொடர்ந்து ''என் புகாரின் பேரில் என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டது'' என்று விசாரித்த போதும் அவருக்கு சரியான பதில் கிடைக்கவில்லை. அவர், மாவட்ட நுகர்வோர் நீதிமன்றத்துக்குப் போனார்.

''தினமும் நூற்றுக்கணக்கானவர்கள், ரயில் நிலையத்தில் தங்கள் வாகனங்களை நிறுத்துகிறார்கள். ஒருவரிடம் கூடுதலாக இரண்டரை ரூபாய் என்றால் ஒரு நாளைக்கு, ஒரு மாதத்துக்கு, ஒரு வருடத்தில் அவர் சட்டத்துக்குப் புறம்பாக எவ்வளவு சம்பாதிப்பார். உடனடியாக அவரது ஒப்பந்தத்தை ரத்து செய்து, அவர் அநியாயமாக வசூலித்த பணத்தைத் திரும்பப் பெற்று, நுகர்வோர் நலனுக்கான நிதி யில் சேர்க்க வேண்டும்'' என்று பாதிக் கப்பட்டவர் பொதுஜனம் கோரினார். ஆனால், மாவட்ட நுகர்வோர் நீதிமன்றம், ''இரண்டரை ரூபாய் என்பது மிகக் குறை வான தொகை'' என்று சொல்லி வழக்கை தள்ளுபடி செய்து விட் டது.

ஆனால், அவர் விடவில்லை. மாநில ஆணையத்தில் ''பணத்தின் அளவு முக்கியமில்லை; சட்டம் நிலைநாட்டப் பட வேண்டும்; சட்டத்துக்குப் புறம்பாக நடந்த ஒப்பந்தக்காரர் மீது சட்டப்படி நடவடிக்கை எடுக்க வேண்டும்'' என்று மேல்முறையீடு செய்தார். மாநில ஆணையம் முறையீட்டாளரின் தார்மிகக் கோபத்தைப் பாராட்டியதுடன், அவருக்கு நஷ்டஈடு கொடுக்கவும் தீர்ப்பளித்தது. ஆனால், ரயில்வே நிர்வாகம் தேசிய ஆணையத்தில் அப்பீல் செய்தபோது, ''பழைய ஒப்பந்தக்காரரை நீக்கிவிட்டோம்.'' என்று தெரிவித்தது. ஆனால், அது உண்மையல்ல; பழைய ஒப்பந்தக்காரரது ஒப்பந்தக் காலம் முடிந்துவிட்டதால், புதிய ஒப்பந்தக்காரர் நியமிக்கப்படிருக்கிறார் என்பது கோர்ட்டுக்குத் தெரிய வந்தது.

**சுத்தாமலேயே சத்தம் வருதே?!**

மனைகள், தொலைபேசி நிறுவனங்கள் என்று பொருள்களை வாங்கி, அவை ஒழுங்காக வேலை செய்யாமல் தொல்லைக்குள்ளான, சேவையில் குறைபாடு காரணமாக பாதிக்கப்பட்ட நுகர்வோர்கள் உரிய நுகர்வோர் நீதிமன்றங்களை நாடி, நிவாரணம் பெற்ற வழக்குகள் நிறைய உண்டு. அது சமயம் வாங்கிய பொருள் அல்லது சேவைக்கான ஆதாரம், அது குறித்து செய்யப்பட்ட புகார்கள், அப் புகார்களின் பேரில் சம்பந்தப்பட்ட நிறுவனங்கள், உரிய நிவாரணம் வழங்காதது போன்ற ஆதாரங்களை, கோர்ட்டில் சமர்ப்பிக்க வேண்டியது அவசியம்.

**எழுத்து வடிவம்:**
**எஸ்.சந்திரமௌலி**

**அடுத்த இதழில் வாசகர் கேள்விகளுக்கு பதிலளிக்கிறார் வழக்கறிஞர் பாலா நடராஜன்**



# ஜெயஸ்ரீ ராஜ் நினைவுச் சிறுகதைப் போட்டி-2010



**வாசகியரே... உங்கள் படைப்புத் திறனை நிரூபிக்க மீண்டும் ஒரு வாய்ப்பு!**

**முதல் பரிசு**
**ரூ.10,000**

**இரண்டாம் பரிசு**
**ரூ.7,500**

**மூன்றாம் பரிசு**
**ரூ.5,000**

விதிமுறைகள்

* பெண்கள் மட்டுமே கலந்து கொள்ள வேண்டும். முழு முகவரி, புகைப்படம் தேவை.
* மங்கையர் மலரில் நான்கு பக்கங்களுக்கு மிகாமல் இருப்பது நல்லது.
* சொந்தக் கற்பனைதான் என்பதற்கு உறுதி மொழிக் கடிதம் வேண்டும். அது இல்லாத கதைகள் பரிசீலிக்கப்பட மாட்டா.
* கையால் எழுதப்பட்ட அல்லது தட்டச்சு செய்யப்பட்ட கதைகள் மட்டுமே ஏற்றுக் கொள்ளப்படும். ஜெராக்ஸ் பிரதிகள் ஏற்றுக் கொள்ளப்பட மாட்டா.
* முழு வெள்ளைத்தாளில் ஒரு பக்கத்தில் மட்டுமே எழுத வேண்டும்.
* ஒருவரே எத்தனை கதைகள் வேண்டுமானாலும் அனுப்பலாம்.
* போட்டிக்கு அனுப்பும் கதையை, முடிவுகள் வெளியாகும்வரை வேறு இதழுக்கோ, இணையதளத்துக்கோ, போட்டிக்கோ அனுப்பக்கூடாது.
* பரிசுக்குரிய கதைகளை நடுவர் குழு பரிசீலித்துத் தேர்ந்தெடுக்கும். சந்தேகம் எழும் விஷயங்களில் ஆசிரியரின் தீர்ப்பே இறுதி.
* முடிவு வெளியாகும்வரை, எவ்வித கடிதப் போக்குவரத்தோ, தொலைபேசி விசாரிப்புகளோ கூடாது.
* தேர்வாகாத கதைகள் திருப்பி அனுப்பப்படமாட்டாது.
* முதல் பரிசுக் கதை ஆகஸ்ட் இதழில் வெளியாகும்.

ஜெயஸ்ரீ ராஜ் நினைவுச் சிறுகதைப் போட்டி - 2010
என்று உறையின் மேல் தவறாமல் குறிப்பிட்டு அனுப்ப வேண்டிய முகவரி:
ஆசிரியர், மங்கையர் மலர், கல்கி பில்டிங்ஸ், 47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 032

**கதைகள் வந்து சேர வேண்டிய கடைசித் தேதி: ஜூலை 6**




இரவு படுக்கை அறைக்கு செல்லுமுன், சைக்கிள், இரு சக்கர வாகனம், சாவிகள், வாட்ச், மணி பர்ஸ், செல்ஃபோன் போன்ற அனைத்தும் அதனதன் இடத்தில் இருக்கின்றனவா என்று சரி பார்க்க வேண்டும்.

- ஜெ. விஜயலக்ஷ்மி, சென்னை - 73

உப்பைக் குறைத்துச் சாப்பிட வேண்டியவர்கள் சிறிது எலுமிச்சை சாறு அல்லது ஆர்கானிக் வினிகரைச் சேர்த்துச் சமைத்தால் உப்பு குறைவாக இருப்பது தெரியாது.

- நா. ராஜேஸ்வரி, பெங்களூரு

வாஷிங்மெஷினில் துவைக்கும்போது ஜாக்கெட் போன்ற ஹுக் வைத்த துணிகளில் எல்லா கொக்கிகளையும் போட்டபிறகே துவைக்கவும். ஜாக்கெட் ஹுக் மற்ற துணிகளில் மாட்டி அந்த துணிகளைக் கிழிக்கக்கூடும்.

- எம். ரேகா முருகானந்தம், திருச்சி - 8

வீட்டில் பெற்றோர்கள், உறவினர்களுக்கோ, அதிகாரிகளுக்கோ குழந்தைகளின் முன்பாக பட்டப்பெயர் வைத்துக் கூப்பிடுதல், அங்கக் குறைபாடுகளைக் கூறி அழைத்தல் தவிர்க்கப்பட வேண்டியவை. பிள்ளைகள் பள்ளிகளில் ஆசிரியர்களுக்கும், சக மாணவர்களுக்கும் பட்டப்பெயர் வைப்பதற்கு நாமே வழி காட்டிவிடுகிறோம். நம் பிள்ளைகளின் விமர்சனம் அவர்களின் எதிர் காலத்தையே பாதித்துவிடக் கூடும். பெற்றோர்களே, கவனமாய் இருங்கள்.

- கே. மகாலெட்சுமி, திண்டுக்கல்-1




குழந்தைகளை வீட்டில் விட்டு வேலைக்குச் செல்லும் பெண்கள் அடிக்கடி ஃபோன் செய்து விசாரிப்பதுபோல, வயதான நோயாளிப் பெரியவர்களை வீட்டில் தனியாக விடும்போதும் அடிக்கடி ஃபோன் செய்து தேவைகளை விசாரிக்கலாமே!

- கி. மஞ்சுளா, திருவாரூர் - 2

**இவை எல்லாமே ஆஹா 50 தான்!**

என்றும் உங்களுடன்

# மங்கையர் மலர்

வழங்கும்

## சுற்றுலா புதிர் - 6

## ரூ. 5,000 பரிசு

காஷ்மீர் முதல் கன்னியாகுமரி வரை இயற்கை அழகும் பாரம்பரியப் பெருமையும் கொண்டு பார்ப்போரை வியக்கவைக்கிறது நமது இந்தியா! இந்தியா மட்டுமல்லாது சர்வதேச சுற்றுலா சம்பந்தப்பட்ட குறிப்புகளையும் தந்திருக்கிறோம். அடுத்த பக்கத்தில் இந்தியாவின் வரைபடத்தை கொடுத் திருக்கிறோம். அதன் பக்கத்தில் உள்ள சுற்றுலாத் தலங்களின் பெயர்களை அந்தந்த மாநில எல்லைக்குள் உள்ள இடத்தில் எழுதி அனுப்புங்கள்.





- அஜந்தா
- சிவசமுத்ரம் நீர்வீழ்ச்சி
- சபர்மதி ஆசிரமம்
- சாலார்ஜங் மியூசியம்
- கொனார்க்
- அமிர்தசரஸ்
- கஜுராஹோ
- சாந்திநிகேதன்
- குஃப்ரி
- வால்பாறை

தொகுப்பு: ஜி.எஸ்.எஸ்

போட்டி விதிகள் :
சுற்றுலா சம்பந்தப்பட்ட விடைகளை நிரப்பி இந்தப் பக்கத்தைக் கத்தரித்து அனுப்புங்க. ஒருவரே எத்தனை கூப்பன்களை வேண்டுமானாலும் அனுப்பலாம். ஜெராக்ஸ் கூடாது.

அனுப்ப வேண்டிய முகவரி :
சுற்றுலா போட்டி - 6 மங்கையர் மலர்,
47, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 600 032.
கடைசித் தேதி : 15.7.2010

பெயர்: .............................................. விலாசம்: ..............................................

..............................................................................................................

..............................................................................................................

தொலைபேசி எண் : .............................. ஈ-மெயில்:..............................

# ஜூலை மாதம் எப்படி?

துல்லியமான கணிப்புகளும்,
எளிய பரிகாரங்களும்!

| | | | |
|---|---|---|---|
| குரு | | | சூரியன் புதன், கேது |
| சந்திரன் | 1.7.2010 அன்று ராசி கிரகநிலை | | சுக்ரன் |
| | | | செவ் |
| ராகு | | | சனி |

கிரக நிலை



கணித்து வழங்குபவர்: சுவாமி கண்ணன் பட்டாச்சார்யா




(அஸ்வினி, பரணி, கார்த்திகை 1ஆம் பாதம்)

இந்த மாதம் ராசிநாதன் பூர்வ புண்ய ஸ்தானமாகிய ஐந்தாம் இடத்தில் சஞ்சாரம் செய்வதால் எதிர்பார்த்த விஷயங்கள் சாதகமாக முடியும். உத்தியோகஸ்தர்கள் விருப்பங்களை நிறைவேற்றிக் கொள்ள அதிகாரிகள் உறுதுணையாக இருப்பார்கள். வியாபாரம் சிறப்பாக நடைபெறும்.

தொழிற்பிரிவினர் சில சங்கடங்களைச் சந்திக்க நேரும் என்றாலும் மாத பிற்பகுதியில் நிலைமை சரியாகி விடும். கலைஞர்கள் தொடர்ந்து முயலுவதன் மூலம் புதிய வாய்ப்புகளைப் பெற முடியும். குடும்பத்தில் எல்லா நிகழ்ச்சிகளும் இனியமுறையில் நடந்து வரும். தொலை தூரச் செய்தி மகிழ்ச்சியை உண்டு செய்யும். மாணவமணிகள் விளையாட்டுப் பிரியர்களாக இருப்பினும் படிப்பிலும் தீவிர அக்கறை செலுத்தி வருவீர்கள். குடும்பத்தில் கணவன் மனைவி இடையே அன்பும் நிம்மதியான போக்கும் காணப்படும். கடன் கொடுத்திருக்கும் பணம் திரும்பி வருவதில் இழுபறிநிலை காணப்படும். அரசியல்வாதிகளின் உதவியை எதிர்பார்த்து புதிய முயற்சிகளில் ஈடுபட்டால் தோல்வியடைய நேரும். பழைய நண்பர்கள் தேடி வருவதுடன் உதவியும் செய்வார்கள். வழக்குகளில் முடிவை இப்போது எதிர்பார்க்காதீர்கள். தள்ளிப்போவதே நல்லது.

**பரிகாரம்: தினமும் குரு பகவான் காயத்ரியை 16 முறை சொல்லி தட்சிணாமூர்த்தியை வழிபட சுபிட்சம் உண்டாகும்.**

(கார்த்திகை, 2,3,4 ம் பாதங்கள், ரோகிணி மிருகசீரிஷம் 1,2ம் பாதங்கள்)

இந்த மாதம் சூரியனும், கேதுவும் சேர்ந்து தனஸ்தானத்தில் சஞ்சாரம் செய்வது சற்று மனவருத்தத்தையும், பின்னடைவையும் உண்டு செய்யும்.

உத்தியோகஸ்தர்களுக்கு உயர் அதிகாரிகளிடம் விரோதப் போக்கு ஏற்பட்டு அதன் விளைவாகவே சில சிக்கல்களைச் சந்திக்க நேரும். எதிலும் பணிவும், நிதானமும் தேவை. தொழிற்பிரிவினரின் சோதனைகள் படிப்படியாக குறையும். வியாபாரம் நஷ்டமில்லாத அளவில் நடைபெறும்.

கலைஞர்களுக்கு ஓரிரு சாதாரண வாய்ப்புகளே அமையும். மாணவமணிகள் படிப்பார்வம் மகிழ வைக்கும். பெண்களுக்கு பிரச்னைகள் எதுவும் நேராத வகையில் குடும்ப நிகழ்ச்சிகள் யாவும் சுமுகமாகவே நடைபெற்று வரும்.

கணவன்-மனைவியிடையே இணக்கமான போக்கே இருந்து வரக்கூடும். பிற இனத்தவர் ஒருவரின் உதவி கிடைக்க வாய்ப்புண்டு. பயணம், விருந்து, போன்றவற்றில் கலந்து கொண்டு மகிழ்வீர்கள். குழந்தைகளுக்காக மருத்துவர் சேவை செய்ய நேரும். வழக்குகளில் எச்சரிக்கை தேவை.




**பரிகாரம்: தினமும் விநாயகப்பெருமானை அருகம்புல் மாலை அணிவித்து வர, களிப்பு கூடும்.**




(மிருகசீர்ஷம் 3,4ம் பாதங்கள், திருவாதிரை, புனர்பூசம் 1,2,3ம் பாதங்கள்)

இந்த மாதம் ராசிநாதன் புதன், சூரியன், கேது சேர்ந்து ஜன்மராசியில் சஞ்சாரம் செய்வதால் சிறு இடையூறுக்குப் பின் நன்மைகள் உண்டாகும். உத்தியோகஸ்தர்கள் இடமாற்றம், பதவி உயர்வு போன்றவற்றைப் பெறுவதில் தாமதம் ஏற்படும். ஆயினும் உயர் அதிகாரிகளின் ஆதரவு பலமாக இருப்பதால் கவலைப்பட தேவையில்லை. கலைஞர்கள் புதிய வாய்ப்புகளைப் பற்றி முயற்சி எடுக்காமல் கைவசம் உள்ள வாய்ப்புகளில் கவனம் செலுத்துவதே போதுமானது. தொழிற்பிரிவினர் ஓரளவு வளர்ச்சி நிலையைக் காணலாம். என்றாலும் வருவாய் திருப்திகரமாக இராது. வியாபாரம் நல்ல முறையிலேயே நடந்து வரும் என்றாலும், வேலையாள்களின் பேரில் கண்காணிப்பு தேவை. மாணவ மணிகள் படிப்பில் தீவிர கவனம் செலுத்துவார்கள். பெண்கள் குடும்ப நிர்வாகத்தில் சாமர்த்தியமாகச் செயல்பட்டு நற்பெயர் பெறுவீர்கள்.

குடும்பத்தில் கணவன்-மனைவியிடையே சிறு மனக்கசப்பு ஏற்பட்டு சரியாகும். குடும்பத்தில் சுப நிகழ்ச்சி தொடர்பான முயற்சி வெற்றி பெறும். அதிர்ஷ்ட வாய்ப்புகளில் சிறு ஆதாயங்கள் எதிர்பார்க்க இடமுண்டு.

**பரிகாரம்: பிரதோஷ தினத்தில், சிவாலயத்துக்குச் சென்று சிவனுக்குரிய அபிஷேகப் பொருள்களை வாங்கித்தந்து வணங்கி வர, செழிப்பு ஏற்படும்.**

(புனர்பூசம் 4ம் பாதம், பூசம், ஆயில்யம்.)

இந்த மாதம் விரய ஸ்தானத்தில் சஞ்சரிக்கும் சூரிய பகவான், தகப்பனார் வழிச் சொந்தங்களால் சில விரயங்களை ஏற்படுத்துவார். உத்தியோகஸ்தர்களுக்கு அலுவலகம் தொடர்பான விஷயங்களில் முழு அளவில் மனத்திருப்தி ஏற்பட வழியில்லை. ஓரளவு நன்மைகளை எதிர்பார்க்கலாம். நல்ல நண்பர்கள் அமைவார்கள். தொழில் பிரிவினர் முன்னேற்றமான நிலையைக் காண்பீர்கள். கூட்டாளிகளிடம் முழுமையாக எதையும் ஒப்படைத்து விடாதீர்கள்.

வியாபாரம் ஏற்ற இறக்கமாக இருக்கும். சிலருக்கு பழைய பாக்கிகள் வசூலாகும். கலைஞர்களுக்குப் புதிய வாய்ப்புகள் அமைவது கடினம் தான் என்றாலும் அதனால் உங்கள் வழக்கமான வசதிகள் எதுவும் குறைந்துவிடாது. மாணவ மணிகள் படிப்பில் தீவிர கவனம் செலுத்தி வருவீர்கள்.

கணவன் -மனைவியிடையே சுமுகமான நிலை காணப்படும். நண்பர்களால் உதவி உண்டு. பழைய நண்பர்களின் சந்திப்பு மகிழ்ச்சி தரும். எதிர்பாராத கடிதத் தொடர்பால் சில இழப்புகள் சரியாகும். வழக்குகள் இருப்போருக்கு முடிவு தள்ளிப் போவதே நல்லது. வலக்காலில் காயம் பட இடமுண்டு. எனவே வாகனங்களில் செல்லும்போது எச்சரிக்கை அவசியம். அரசு வழி கடிதங்கள் நன்மை தரும்.

**பரிகாரம்: தினமும் நவக் கிரகங்களை வணங்கி வருவதும், 'கோளறு பதிகம்' படித்து வருவதும் உங்கள் கஷ்டங்களைப் போக்கி களிப்பைத் தரும்.**



கடகம்

## சிம்மம்

(மகம், பூரம், உத்திரம் 1ஆம் பாதம்)



இந்த மாதம் ராசிநாதன் சூரியபகவான் ஆட்சி பெற்ற புதனுடன் சேர்ந்து சஞ்சரிப்பது முக்கிய திருப்பங்களைத் தரக் கூடும்.

உத்தியோகஸ்தர்கள் உங்கள் விருப்பங்களை நிறைவேற்றிக் கொள்ள சந்தர்ப்பங்கள் சாதகமாக உள்ளன. உயர் அதிகாரிகளின் ஆதரவும் உண்டு என்பதால் நல்ல முன்னேற்றமான சூழ்நிலை தான். வியாபாரத்தைப் பொறுத்தவரை கமிஷன் மற்றும் மொத்த வியாபாரம் நன்றாக நடைபெறும். அதிக ஆதாயம் தரவும் கூடும்.

பெண்கள் எல்லாவகையிலும் நற்பெயரும், புகழும் பெறுவீர்கள். வழக்கமான உங்களது நிதானப்போக்கும், சேமிப்பும் கடன் பிரச்னையைச் சமாளிக்க உதவும்.

கலைஞர்கள் தொடர்ந்து முயற்சி செய்வதன் மூலம் ஓரிரு சிறு வாய்ப்புகளை மட்டுமே பெறக்கூடும். மாணவமணிகளுக்கு படிப்பார்வம் குறைந்து விளையாட்டுப் போக்கு அதிகமாகும். தொழிற்பிரிவினர் சோதனைகள் விலகி, சாதனை புரியும் நிலையினராகக் காணப்படுவீர்கள்.

கணவன்-மனைவியிடையே கலகலப்பான சூழ்நிலை நிலவி வரும். குழந்தைகளுக்கு மருத்துவ செலவு செய்ய வேண்டி வரலாம். கவனம் தேவை.

**பரிகாரம்: வியாழக்கிழமைகளில் குரு பகவானுக்கு கொண்டைக்கடலை சுண்டலை நைவேத்தியம் செய்து வணங்கி வர, சுபிட்சம் உண்டாகும்.**

## கன்னி

(உத்திரம் 2,3,4 ஆம் பாதங்கள் அஸ்தம், சித்திரை 1,2ம் பாதங்கள்)

இந்த மாதம் சூரிய-புத-குரு கிரக சஞ்சாரங்கள் அனுகூலமாக இருந்தாலும் மற்ற கிரகங்களின் சஞ்சாரம் அனுகூலம் இல்லாததால் புதிய முயற்சிகளில் தடைகள் உண்டாகும்.

உத்தியோகஸ்தர்களுக்கு இடமாற்றங்கள், பதவி உயர்வு போன்றவை அமைய ஏற்ற தருணமில்லை. உயர் அதிகாரிகளின் நன்மதிப்பைப் பெற பொறுமையாய் முயற்சி செய்யவும். தொழிற்பிரிவினர் கணிசமான முன்னேற்றத்தைப் பெறுவர். திருப்திகரமான வருவாயும் கிடைக்கக்கூடும். கலைஞர்களுக்கு சாதாரணமான சில வாய்ப்புகள் கிடைக்கலாம்.

மாணவமணிகள் படிப்பில் ஆழ்ந்த ஈடுபாடு காட்டி வருவீர்கள். சிலர் போட்டி, பந்தயங்களிலும் வெற்றி காண்பீர்கள். கணவன் மனைவியிடையே சுமுகமான நிலை இருந்து வரும். உங்கள் குடும்ப விஷயங்களில் மூன்றாம் மனிதரை தலையிட வைத்தால் குழப்பம் ஏற்படும் என்பதால் அதைத் தவிர்க்க முயலுங்கள். யாருக்கும் பணம் கடன் தருவதோ, ஜாமீன் கையெழுத்து போடுவதோ வேண்டாம்.

பெண்களில் சிலருக்கு சிறு அதிர்ஷ்ட வாய்ப்புகள் வரும். மருத்துவச் செலவு தவிர்க்க முடியாதது. என்றாலும் சிறு சிகிச்சைக்குப் பின் பூரண குணமாகி விடும்.



**பரிகாரம்: செவ்வாய், வெள்ளிக்கிழமைகளில் துர்க்கைக்கு விளக்குஏற்றி வழிபட்டு வாருங்கள். உங்கள் இன்னல்கள் யாவும் நீங்கி, இனிய வாழ்வு மலரும்.**



## துலாம்

**(சித்திரை 3,4 ஆம் பாதங்கள், சுவாதி, விசாகம் 1,2,3 ஆம் பாதங்கள்)**

இந்த மாதம் பாக்கியாதிபதி புதன் ஆட்சி பெற்று சஞ்சரிப்பதால் எடுத்த முயற்சிகளில் முன்னேற்றம் தென்படும். உத்தியோகஸ்தர்கள் அலுவலகம் தொடர்பான விஷயங்களில் பெரும்பாலான நன்மைகளைப் பெற்று மகிழ்வீர்கள். சக பணியாளர்கள் நன்கு ஒத்துழைப்பார்கள். கலைஞர்களுக்கு ஏற்றம் கிட்டும். தொழிற் பிரிவினர் முன்னேற்றம் காண்பது கடினம். வார பிற்பகுதியில் வருவாய் கணிசமாக உயர்ந்து மகிழ்ச்சிதரும்.

மாணவ மணிகள் கவனக்குறை வாகவே காணப்படுவீர்கள். மாத இறுதியில் நல்ல மாற்றம் காணப்படும்.

பெண்களுக்கு குடும்பத்திலும், அக்கம்பக்கத்தினரிடமும் நற்பெயரும், பாராட்டும் பெருகும். குடும்ப நிர்வாகம் சிறப்பாக அமையும். வியாபாரம் நல்ல முறையிலேயே நடைபெற்று வரும். அதிக அளவில் கடன் கொடுப்பதைத் தவிர்க்கவும். குடும்ப நிலையில் கணவன் மனைவியிடையே இனிமையான போக்கு நிலவும். என்றாலும் மகன் அல்லது மகளால் சிறு கலக்கம் ஏற்பட்டுத் தெளிவாகும். நண்பர்களின் உதவி, தக்க சமயத்தில் கிடைக்கக்கூடும். சிலருக்கு வயிற்றுவலி, வயிற்றுப்புண் தொல்லைதரும். கர்ப்பிணிப் பெண்கள் கூடுதலான எச்சரிக்கையுடன் இருப்பது நல்லது.

**பரிகாரம்: வியாழக்கிழமைகளில் விரதம் மேற்கொள்வதும், ஆலயத்திற்குச் சென்று தட்சிணாமூர்த்தியை வழிபட்டு வருவதும், கவலைகளைப் போக்கும்.**



## விருச்சிகம்

**(விசாகம் 4ம் பாதம், அனுஷம், கேட்டை)**

இந்த மாதம் அஷ்டம ஸ்தானத்தில் சூரியன்-புதன் சேர்ந்து சஞ்சாரம் செய்வதால் சிறு அதிருப்திகள் நேரிடும்.

உத்தியோகஸ்தர்களுக்கு அலுவலகம் தொடர்பான விஷயங்கள் எதுவுமே திருப்திகரமாக அமைவதற்கில்லை. வேலைப்பளு கூடும். இளம் பெண்களின் விருப்பம் நிறைவேறும். குடும்பத்தில் ஏற்படும் ஓரிரு குழப்பங்களைச் சாமர்த்தியமாகச் சமாளித்து, இல்லத்தரசிகள் குடும்பத்தின் கௌரவத்தைக் காப்பாற்றுவார்கள். யாரும் குறை சொல்ல இயலாத அளவில் மாணவமணிகள் படிப்பில் அக்கறை செலுத்துவார்கள்.

வியாபாரம் முதலில் தேக்க நிலையில் இருந்தாலும் முயற்சிக்குப் பின் முன்னேற்றம் தென்படும். கலைஞர்கள் கைவசம் உள்ள வாய்ப்புகளில் கவனம் செலுத்தினாலே போதும் என்ற நிலையுள்ளதால் புதிய வாய்ப்புகளைப் பற்றிக் கவலைப் படத் தேவையில்லை. தொழிற் பிரிவினருக்கு தடங்கல்கள் நீங்கும். முன்னேற்ற அறிகுறிகள் காணப்படும்.

பெண்கள் ஆபரணம் வாங்கி அணியும் வாய்ப்பு நேரும். பெரிய மனிதர்களின் சந்திப்பும், ஆசியும் உண்டு.

**பரிகாரம்: சனிக்கிழமைகளில் சனி பகவானுக்கு எள்ளன்னம் நைவேத்தியம் செய்து, அதை உடல் ஊனமுற்றவர்களுக்கு விநியோகம் செய்து வாருங்கள். முடிந்தவரை ஏழை, எளியோருக்கு உதவுங்கள். உங்கள் சிரமங்கள் யாவும் விலகி, எதிர்பாராத நன்மைகள் உண்டாகும்.**

(மூலம், பூராடம், உத்திராடம், 1ஆம் பாதம்)



## தனுசு

இந்த மாதம் தர்மகர்மாதிபதி குருவும் புதனும் சேர்ந்து சஞ்சாரம் செய்வதால் நினைத்த காரியங்கள் இனிமையாக நிறைவேறும்.

உத்தியோகஸ்தர்களின் விருப்பங்கள் யாவும் முழுமையாக நிறைவேறி மகிழ்ச்சியூட்டும். உயர் அதிகாரிகளின் ஆதரவு பலத்தால் மறைமுக வருமானங்களுக்கும் குறைவிருக்காது. கலைஞர்களுக்கு புதிய வாய்ப்புகள் கிடைக்காவிட்டாலும், பழைய பாக்கிகள் திடீரென்று வசூலாகி நிலைமையைச் சமாளிக்கப் பெரிதும் உதவக்கூடும்.

மாணவமணிகளின் முன்னேற்றம் பெற்றோரைப் பரவசத்தில் ஆழ்த்தும்.

வியாபாரம் சிறப்பான முறையில் நடைபெறும். வாடிக்கையாளர்களிடையே நற்பெயர் கூடும். தொழிற்பிரிவினர் வேகமான முன்னேற்றத்தைக் காண்பீர்கள். குடும்பத்திலும் வெளி வட்டாரத்திலும் பெண்களுக்கு நற்பெயர் உண்டாகும். குடும்ப நிர்வாகத்தில் சிக்கல் எதுவும் இல்லாமல் சமாளிப்பீர்கள்.

கணவன்-மனைவியிடையே குதூகலமான நிலை காணப்படும். உறவினர், சகோதரர் வழியில் ஒத்துழைப்பை எதிர்பார்க்க முடியாது. இயந்திரங்களில் பணிபுரிவோர் மிகுந்த எச்சரிக்கையுடன் செயல்படுவது அவசியம். அரசியல் தொடர்பு பயன் அளிக்கக்கூடியதாக இல்லை.

பரிகாரம்: **வியாழக்கிழமைகளில் குரு பகவானையும், தட்சிணாமூர்த்தியையும் வணங்கி வாருங்கள். உங்கள் கவலைகள் நீங்கும். சந்தோஷம் மலரும்.**

(உத்திராடம் 2,3,4 ஆம் பாதங்கள் திருவோணம், அவிட்டம், 1,2ம் பாதங்கள்)



## மகரம்

சூரிய புத சஞ்சாரம் மாத ஆரம்பத்தில் தொல்லை தந்தாலும் மாத மத்தியில் சூரிய-புத மாற்றம் சில நல்ல திருப்பங்களை உண்டு செய்யும். உத்தியோகஸ்தர்களின் கோரிக்கைகளில் பெரும்பாலனவை நிறைவேறுவதால் உற்சாகம் பிறக்கும். உயரதிகாரிகளின் ஆதரவு பலத்தால் தனிப்பட்ட சில சலுகைகளையும் பெற்று மகிழ்வீர்கள்.

தொழிற்பிரிவினர் தடங்கல்களைக் கடந்து படிப்படியான வளர்ச்சி நிலையை எட்டுவீர்கள்.

கலைஞர்கள், சக கலைஞர்களுடன் சுமுகமாகப் பழகி வருவதன் காரணமாக சில புதிய வாய்ப்புகளைப் பெறமுடியும்.

வியாபாரம் ஏற்ற இறக்கமாக இருந்து வரும். பாக்கித் தொகை வசூலாகும். பெண்களுக்கு குடும்பச் சூழ்நிலை மகிழ்ச்சி தரும். மாணவமணிகள் படிப்பில் முன்னணி நிலையில் இருப்பீர்கள்.

பொன்நகை சேரும் யோகம் சிலருக்கு உண்டு. மறைமுகச் சேமிப்பும் கூடும். குடும்பநிலையில் கணவன்-மனைவியிடையே பரிவும் பாசமும் மிகுந்து காணப்படும். திட்டமிட்ட பயணம் ஒன்று தள்ளிப் போக நேரும். பணப்புழக்கம் திருப்திகரமாகக் காணப்படும். உடல் நலத்தில் மட்டும் அக்கறை செலுத்தவும்.

பரிகாரம்: **சனிக்கிழமைகளில் ஆஞ்சநேயருக்கு வெண்ணெயும், துளசி மாலையும் சாத்தி வழிபட்டு வருவதன் மூலம் உங்கள் கஷ்டங்கள் யாவும் விலகும். செழிப்பு ஏற்படும்.**




(அவிட்டம் 3,4ம் பாதங்கள் சதயம்)

இந்த மாதம் பாக்கியாதிபதி சுக்ர பகவான் மாத ஆரம்பத்தில் 6ம் இடத்தில் சஞ்சரிப்பதால் சிறு சிறு போட்டிகளைச் சந்திக்க நேரும்.

உத்தியோகஸ்தர்களுக்கு இட மாற்றம், பதவி உயர்வு போன்ற பிரச்சனைகளில் உடனடியாக வெற்றி கிடைக்க வழியில்லை. சில தடங்கல்களுக்குப் பின் தாமதமாகவே கிடைக்கும். தொழிற்பிரிவினர் படிப்படியான வளர்ச்சியைக் காண முடியும். வியாபாரம் சிறப்பாகவே நடக்கும்.

கலைஞர்களுக்குப் புதிய வாய்ப்புகள் அமைவது சிரமம். கைவசம் உள்ள வாய்ப்புகளின் மூலம் உங்கள் வழக்கமான வசதிகளை நிறைவேற்றிக் கொள்வீர்கள். குடும்ப நிர்வாகத்தில் பெண்கள் சிறப்பாகச் செயல்பட்டு நற்பெயர் பெறுவீர்கள். மாணவமணிகள் படிப்பில் தீவிர அக்கறை காட்டுவார்கள். கணவன் மனைவி இடையே இணக்கமான போக்கு இருந்து வரும். நண்பர்களின் உதவி தக்க சமயத்தில் கிடைத்து மகிழ்ச்சி பெருகும். கூட்டு குடும்பத்தில் உள்ளவர்கள் எங்கும் எப்போதும் பொறுமையாக நடந்து கொள்வது அவசியம். சுபநிகழ்ச்சி தள்ளிப்போக நேரும். அதிர்ஷ்ட வாய்ப்புகளை முழுமையாக தற்சமயம் எதிர்பார்க்க வேண்டாம்..

**பரிகாரம்: வியாழக்கிழமைகளில் குரு பகவானையும், சனிக்கிழமைகளில் சனி பகவானையும் தவறாமல் வணங்கி வாருங்கள். பொருள் விரயங்கள் குறையும். பொன் பொருள் சேரும்.**

(பூரட்டாதி 4ஆம் பாதம், உத்திரட்டாதி, ரேவதி)

இந்த மாதம் செவ்வாய் மற்றும் சுக்ரன் சஞ்சாரத்தால் ஏற்ற இறக்கங்கள் தொடர்ந்து காணப்படும்.

உத்தியோகஸ்தர்கள் அலுவலகம் தொடர்பான நற்பலன்கள் எதையும் எதிர்பார்ப்பதற்கில்லை. தடங்கல்களும் தாமதமுமே ஏற்படும். கலைஞர்களுக்கு எதிர்பாராத வகையில் சில புதிய வாய்ப்புகள் அமைந்து பெருமையும், புகழும் அமையக்கூடும். வியாபாரத்தில் சிவப்பு நிறப் பொருள்கள் சிறப்பு ஆதாயத்தைத் தரும். தொழிற்பிரிவினர் முன்னேற்றத்துக்கான அறிகுறிகளைக் கண்டு மகிழ்வீர்கள். மாணவமணிகள் மிகுந்த ஆர்வத்துடன் பாடங்களில் கவனம் செலுத்தி வருவீர்கள்.

கணவன்-மனைவியிடையே கனிவான போக்கு இருந்து வரும். பணப்புழக்கம் ஓரளவு சரளமாகவே இருந்து வரும். நல்லவர்கள், மகான்களின் தொடர்பும் ஆசியும் இருக்கும். குடும்ப விஷயங்களில் நிதானத்தைக் கடைப்பிடிக்கவும். தந்தை தாய் வழியில் பொன் பொருள் வந்து சேரும். திடீர்ப் பயணம் ஒன்றை மேற்கொள்ள நேரும். அரசியல்வாதிகளின் நட்பு பலன் தரும். வீண் அலைச்சலைத் தவிர்ப்பது அவசியம்.

**பரிகாரம்: ஆலயங்களில் உள்ள நவக்கிரக சந்நிதியில் சூரிய பகவானுக்கு ஞாயிற்றுக்கிழமை தோறும் அர்ச்சனை செய் வதும், 'அபிராமி அந்தாதி' படித்து வருவதும் உங்கள் துயரங்களைப் போக்கும். இனிய சூழ்நிலையை உண்டாக்கும்.**



# சாரதா கேட்கிறாள்!

வாழ்வியல் வல்லுநர் மற்றும் ஆன்மிக குரு, ஸ்வாமி சுகபோதானந்தாவிடம் தொலைபேசி மூலம் கேள்விகள் கேட்கும் வாய்ப்பு, சாரதாவுறக்கு ஏற்படுத்திக் கொடுக்கப்பட்டது. அதன் தொகுப்பு:



**சாரதா: என்னுடைய அருகாமையில் என்றும் துணை நிற்பவர்கள் என் நெருங்கிய சொந்தம்தான். அவர்கள் மீது அளவில்லாத அன்பு வைத்திருக்கும் அதே நேரத்தில், என் கோபதாபங்களையும் எரிச்சலையும் அவர்களிடம்தான் காட்டுகிறேன். என் அவஸ்தையைக் கோபமாக அவர்கள் மீது திணித்து விடுகிறேன். இதை நான் தவிர்ப்பது எப்படி? என் உடல்நிலையை சாக்காக வைத்து, கோபப்படுவது நியாயமில்லையில்லையா?**



சுவாமிஜி: கோபமே வராமல் இருக்க நீங்கள் புத்தர் இல்லை. உங்கள் கோபம் நியாயமானது என்று தோன்றினால் கோபப்படுவதில் தப்பில்லை. உங்கள் கோபம் அந்தச் சூழ்நிலைக்கு ஏற்றதா என்று மட்டும் பார்க்க வேண்டும். உதாரணத்துக்கு, மகன் ஒரு கண்ணாடிக் குவளையை உடைத்து விட்டால், கத்தி அமர்க்களப்படுத்துவது தேவையற்றது. சூழ்நிலைக்குப் பொருந்தாத கோபம் என்றால், அந்தக் கோபமானது பழைய கோபங்களை மனதில் போட்டு வதைத்துக் கொண்டிருந்ததன் வெளிப்பாடாக இருக்கலாம். எனவே, சூழ்நிலைக்குப் பொருந்தாத தேவையற்ற கோபமாக அது இருப்பின், கோபத்துக்கு பாசிடிவ் வடிகாலாக உங்கள் மனதோடு நீங்கள் பேசுவது முக்கியம்.

ஒரு நாயை, நீங்கள் பழக்குவீர்களா, இல்லை நாயை விட்டு உங்களைப் பழக்க அனுமதிப்பீர்களா? அது போல், உங்கள் மனம் உங்கள் அனுமதி இல்லாமல் செயல்படுவதைக் கட்டுப்படுத்தி, நீங்கள் உங்கள் மனதைக் கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வர முயல வேண்டும். வேண்டிய வகையில் சிந்திக்க உங்கள் எண்ணங்களையும் உணர்ச்சிகளையும் பழக்க வேண்டும். அதற்கு உங்கள் மனதை அன்பாகத் தாஜா செய்ய வேண்டும்; மெல்லிய குரலில் பொறுமையாக உங்கள் மனதிடம், ''வேண்டாம், கோபம் கொள்ளாதே. அன்பின் உறைவிடமாக இரு'' என்று கொஞ்சிப் பேசி புரிய வைக்க வேண்டும். அப்படிச் செய்யும் போது, நாளடைவில் இது போன்ற தருணங்களில் உங்கள் கோபம் குறைவதை நீங்கள் உணர முடியும். உங்களுக்கு ஒரு தலைவலி என்றாலும், தலைவலியிடம் போய் விடும்படி அன்போடு முணுமுணுத்தீர்களானால், வலி குறைவதை உணரலாம்.

கஷ்டங்களை இறைவன் தரும் பிரசாதமாக ஏற்க பக்குவப்படுத்திக் கொள்வது அவசியம் என்கிறது பகவத் கீதை. ஏனெனில், பிரச்னைகளைக் கொடுப்பதே நம்மை அறியாமை என்னும் உறக்கத்திலிருந்து எழுப்பத்தான்.

உடல் ஊனமுற்றோர் சாதித்த வரலாறைப் படியுங்கள், உங்கள் வாழ்க்கையில் இன்னும் செய்ய வேண்டியது நிறைய இருக்கிறது என்ற உந்துதலை ஏற்படுத்தும். தன் குறைகளைத் தாண்டி நிறைவைப் பெற முயன்றதால்தான் மில்டனால் பார்வையற்றபோதும் இயற்கையை ரசிக்க முடிந்தது; காது கேளாத போதும் பீதோவனால் தேவகானம் படைக்க முடிந்தது; இரண்டு கைகளையும் இழந்த ஜெஸ்ஸிகா என்ற இளம் அமெரிக்கப் பெண்ணால் நீச்சல், மல்யுத்தம், விமானம் ஓட்டுதல் என்றெல்லாம்

**உஷா ராமகிருஷ்ணன்**

சாதிக்க முடிந்தது. விபத்தில் உடல் இரண்டாகப் பிளந்த பிறகு அறுவை சிகிச்சை மூலம் சேர்க்கப்பட்டு, அவர் ஒரு வெற்றி கரமான தொழிலதிபராகப் புன்னகைக்கிறார். பலவீனம் தன்னை வீழ்த்தக் கூடாது என்ற உறுதிதான் இதைச் சாதிக்க வைக்கும். ஆக உடல் ஊனம் என்றுமே நம்மை வீழ்த்துவ தில்லை, மனத்தின் பலவீனம் தான் அதைச் செய்யும். அதை நாம் அனு மதிக்கக் கூடாது.

**சாரதா: என் வாழ்க்கை எப்போது வேண்டுமானாலும் முடியலாம் என்ற ஸ்திரமின்மை இருப் பதால், எல்லாவற்றை யும் இன்றே முடித்து விட வேண்டும் என்ற அவசரம் இருக்கிறது. இன்று கடைசி நாளாக இருக்கும் பட்சத்தில் இன்றைய பொழுதை சரியாக வாழ்ந்திருக்கி றேனா என்ற கேள்வி வருகிறது. எப்படி என்னை நிதானப் படுத்திக் கொள்வது?**



சுவாமிஜி : உங் களுக்கு இருக்கும் நோயின் தன்மை யால் நீங்கள் வாழ்க்கை நிலையா னது இல்லை என்று உணருகிறீர்கள். உண்மையில், நம் அத்தனை பேருக்குமே இதுதான் நிலை. நோய் இருந்தும் பல வருடங்கள் வாழ்பவரும் உண்டு; நன்றாக இருப்பவர் திடீரென்று இறப்பதும் உண்டு. நம்முடைய கடமை, ஒவ்வொரு வருடத்தையும், நாளுக்கு நாள், மணிக்கு மணி, நிமிடத்துக்கு நிமிடம், நொடிக்கு நொடி, முழுமையாக வாழ முயல்வது தான். மனக்குறை, வெறுப்பு, அவநம்பிக்கை இவற்றைத் தவிர்த்து, கற்பது, அனுபவிப்பது, திட்ட மிடுவது என்ற மூன்றையும் கைவிடாமல் வாழ்வதுதான் சரி.

இறப்பைக் கண்டு பயப்படத் தேவை யில்லை. ரவீந்திரநாத் தாகூர் சொல்கிறார், ''தாயின் கருவறைபோல பாதுகாப்பான இடம் இருக்க முடியாது. இருப்பினும், தாயின் கருவறை என்ற உலகிலிருந்து இந்த பூமிக்குள் ஜனித்தபோது, அதை இறப்பென்று நினைத்தோமா? எவ்வளவு அற்புதமான இந்த மானிட வாழ்க் கையை கடவுள் நமக் குப் பரிசாகத் தந்தார். அதுபோல, இறப்பின் மூலம் நம் அறிவுக்கு எட்டாத இதை விட சிறந்த வாழ்க்கை ஒன்று நமக்குக் காத்திருக்கலாம் இல்லையா? அப்படி நினைத்தால் இந்த நம் வாழ்க்கையை முழுமை யாக அனுபவிக்க முயல் வோம், மரணத்தைக் கண்டு மிரள மாட் டோம்.

**சாரதா : என் நோயி னால் திடீரென்று எதிர் பாராத பிரச்னை தோன்றும் போது, அதை என் குடும்பத்திடம் சொல்கிறேன். அப் படிச் சொல்லும் போது, நான் கலவரம் அடைவதை விட அவர்கள் அதிகக் கல வரம் அடைந்து விடுகிறார்கள். அவர்க ளைக் கலவரப்படுத்தாமல் என் நிலையை எப்படி அவர்களுக்குப் புரிய வைப்பது?**

சுவாமிஜி: அவர்கள் கலவரமடைகிறார் கள் என்றால் அது அவர்கள் அன்பைத் தான் காட்டுகிறது. உங்களுக்குப் பிரச்னை வரும்போது, அவர்கள் பயம் உங்

களைக் கவலைக்குள்ளாக்குகிறது என்பதால் நிதானமாக இருக்கச் சொல்லலாம்; பயப்பட ஒன்றும் இல்லை என்று சொல்லலாம். உங்கள் வலியைக் கண்டு கலவரப் படுபவர்கள் இருக்கிறார்கள் என்றால் நீங்கள் அதிர்ஷ்டசாலி. ஆனால் ஒன்று. உங்களைச் சுற்றி ஒரு 'ஐடியல்' சூழ் நிலையை ஏன் உருவாக்க நினைக்கிறீர்கள்? எல்லாருடைய அன்பும் உங்களுக்கு உண்டு. நல்லதே நடக்கும் என்ற நம்பிக் கையுடன் வாழுங்கள்.

சாரதா : **பண்டிகைகள் முறைப்படி கொண்டாடவும், குனிந்து விளக்கேற்றவும் கூட என்னால் முடிவதில்லை. இது தவறா? இதற்கு பதிலாக என்ன செய்யலாம்?**



சுவாமிஜி : இறைவனுக்கு என்ன தருகிறீர்கள் என்பது முக்கியமில்லை, எவ்வளவு பக்தியுடன் கொடுக்கிறீர்கள் என்பதுதான் முக்கியம். ஆரோக்கியமாக இருந்தால் சரி, அது இல்லையெனும் போது குற்ற உணர்ச்சி தேவையற்றது. இறைவன் நிச்சயம் இதற்குக் கோபிக்க மாட்டார். முடியாத நிலையில் மானசிக பக்தி போதுமானது.

சாரதா : **உடல் தீராத நோய்வாய்ப்படும் போது, என்னைப் போன்ற சாதாரண ஜீவனுக்கு வலி உடலையும் மனதையும் வீழ்த்துகிறது. ஆனால் யோகிகளும் சாதுக்களும் இது போன்ற நிலையை எப்படி எதிர் கொள்கிறார்கள்?**

சுவாமிஜி : உடலின் வலியையும் துன்பத்தையும் எல்லோரும் அனுபவித்துத் தான் ஆக வேண்டும். வித்தியாசம் எங்கென்றால் உணர்ச்சி மற்றும் மன ரீதியான தவிப்பு இருக்காது. மனமுதிர்ச்சி கொண்டவர், அதை கர்ம பலனாக ஏற்கின்றனர்; இறைவன் பிரசாதமாக ஆர்பர் ''என் கர்ம பலன் இந்தத் துன்பத்தினால் தொலைகிறது. அதனால் நான் இந்த வலியைப் பொறுத்துக் கொள்கிறேன்'' என்று நினைத்துக் கொள்ளுங்கள். அதோடு இந்த வலி என் உடலை விட்டு மெள்ள நீங்க வேண்டும் என்று உங்களோடு அன்போடு பேசிக் கொள்ளும் பக்குவம் இருந்தால், வலி தெரியாது.

பாலில் நீரை சேர்த்துக் கொண்டே வந்தால், மெள்ள மெள்ள பாலின் தன்மை குறைந்து அது வெறும் நீராக மட்டுமே தோன்றும். அதுபோல் ததும்பிக் கிடக்கும் துக்கத்தில் அன்பு, நன்றியுணர்ச்சி, தெளிவு, அமைதி, மகிழ்ச்சி என்று நல்லவற்றை மேலும் மேலும் சேர்த்துக்கொண்டே இருந்தால், வலியின் தன்மை மெள்ள மறைந்து, மகிழ்ச்சி மட்டுமே எஞ்சியிருக்கும்.

உங்கள் வாழ்வு வளமடைய இறைவனைப் பிரார்த்தித்து வாழ்த்துகிறேன் அம்மா. மிருத்யுஞ்சய மந்திரத்தை உச்சரியுங்கள், அது உங்களுக்கு நன்மை தரும்.

**(நம்பிக்கையுடன் நன்றி சொல்லி விடை பெறுகிறாள் உங்கள் சாரதா.)**

தொழில் முன்னேற்றம்

கடந்த பத்து ஆண்டுகளாக இந்தியாவில் நெட்வொர்க் மார்க்கெட்டிங் தொழில் மிகப் பெரிய வளர்ச்சியைக் கண்டு வருகிறது. பல்வேறு பன்னாட்டு, உள்நாட்டு நிறுவனங்கள் இந்தத் துறையில் அடியெடுத்து வைத்து வெற்றி பெற்றுள்ளன.

குறைந்த முதலீடு, வீட்டிலிருந்தபடியே ஓய்வு நேரங்களில் பணியாற்றும் வாய்ப்பு, கை நிறைய வருமானம் போன்ற காரணங்களால் இந்தத் தொழில் பெண்களிடையே பலத்த வரவேற்பைப் பெற்றுள்ளது.

இந்தத் தொழிலில் ஈடுபட்டு வெற்றி பெற வேண்டுமானால் நீங்கள் கீழ்க்கண்ட ஐந்து காரணிகளை கவனத்தில் கொள்ள வேண்டும்.

### நிறுவனப் பின்னணி

நீங்கள் தேர்ந்தெடுக்கக்கூடிய நிறுவனம் நீண்ட காலம் செயல்பட்டு வரக்கூடிய பிரபலமான நிறுவனமாக இருக்க வேண்டும். பன்னாட்டு நிறுவனமாக இருந்தால் நல்லது. நீங்கள் இந்நிறுவனத்தில் பொருள்களைச் சந்தைப்படுத்துகிறபோது, நிறுவனத்தின்





பெயர் நன்கு பிரபலமாக இருந்தால் அவற்றின் பொருள்களை விற்பது எளிது. நிறுவனத்தின் தொடங்குநர்கள் முதல் அவர்களின் கிளைகள்வரை அனைத்து விவரங்களையும் நீங்கள் முதலில் தெரிந்து கொள்ள வேண்டும்.

### பொருள்கள் விவரம்

நெட்வொர்க் மார்க்கெட்டிங் நிறுவனங்கள் நாம் அன்றாடம் பயன்படுத்தும் பற்பசை முதல் நம் வாழ்க்கைக்குத் தேவைப்படும் காப்பீட்டுத் திட்டங்கள் வரை அனைத்தையும் விற்பனை செய்து வருகின்றன. இந்தப் பொருள்களில் உங்கள் மனதுக்குப் பிடித்த பொருள்கள் என்னென்ன, எவற்றுக்கு சந்தை வாய்ப்பு இருக்கும், விற்கப்படும் பொருள்களின் தரம் என்ன, அவற்றின் பயன்பாடு எத்தகையது, இலாப விகிதம் என்ன என்ற தகவல்களை யெல்லாம் தெளிவாக அறிந்துகொள்ள வேண்டும்.

### ஆரம்ப முதலீடு

பெரும்பாலும் நெட்வொர்க் மார்க்கெட்டிங் நிறுவனங்களின் ஆரம்ப முதலீடு ஐந்தாயிரத்திலிருந்து பத்தாயிரம்வரை தான் இருக்கும். முதலீடு குறையக் குறைய

# வாங்க தொழிலதிபர் ஆகலாம்!

இராம்குமார் சிங்காரம்

அதில் உறுப்பினர்களைச் சேர்ப்பது சாத்தியமாகும். மேலும் இந்த முதலீட்டுத் தொகையில்எவ்வளவுபணம்பதிவுக்கட்டணமாகப் பெறப்படுகிறது. மீதி எவ்வளவு பணத்துக்கு நமக்கு பொருள்கள் தரப்படுகின்றன என்பதையும் தெரிந்து கொள்ள வேண்டும்.

**நெட்வொர்க் முறை**

நெட்வொர் மார்க்கெட்டிங் நிறுவனங்கள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு விதமான நெட்வொர்க் முறையைப் பின்பற்றுகின்றன. உங்களுக்குக் கீழ் இரண்டு அல்லது மூன்று அல்லது நான்கு பேர் என எத்தனை பேரைச் சேர்க்க வேண்டும்? அவர் கள் ஒவ்வொருவரும் எத்தனை பேரைத் தங்களுக்குக் கீழ் சேர்க்க வேண்டும்? முதல் லெவலுக்கு எவ்வளவு கமிஷன் கிடைக்கும்? இரண்டாவது லெவலுக்கு எவ்வளவு கமிஷன் என்பன போன்ற பல் வேறு தகவல்களையும் ஆழமாக அறிந்து கொள்ள வேண்டும்.




**விற்பனக்குப் பின்னால் சேவை**

ஒரு நிறுவனம் பொருளை விற்ற பிறகு அந்தப் பொருளில் ஏதேனும் குறைகள் ஏற்பட்டால் அவற்றை சரி செய்வதற்கு எப்படிப்பட்ட சேவையை வழங்கும் என்பது பற்றி அறிந்து கொள்ள வேண்டியது மிக முக்கியம். சாதாரண முக அழகுப் பொருள்களுக்கு இந்த விற்பனைக்குப் பின்னான சேவை அவ்வளாகப் பொருந்து என்றாலும் கூட, மின்னணு சாதனப் பொருள்கள், வாகனங்கள் போன்றவற்றுக்கு இது மிகவும் அவசியம்.

நெட்வொர்க் தொழிலில் சம்பாதித்து வருவோரின் எண்ணிக்கை அதிகம் என்றாலும்கூட, இத்தொழிலில் முதலீடு செய்துவிட்டு தோல்வியைத் தழுவியோரும் இருக்கத்தான் செய்கிறார்கள்.

இந்தத் தொழிலுக்கு சில அடிப்படைத் தகுதிகள் தேவை. முதல் தகுதி, உங்களுக்கு நன்றாகப் பேசத் தெரிந்திருக்க வேண்டும்.

இரண்டாவதாக அவமானங்களையும் சிரித்த முகத்தோடு எதிர்கொள்ளும் பக்குவம் வேண்டும். உங்கள் உற்றார், உறவினர், நண்பர்கள் போன்றோர்தான் இந்தத் தொழிலுக்கான முதல் நிலைவாடிக்கையாளர்கள், இவர்களிடம் நீங்கள் நெட்வொர்க் மார்க்கெட்டிங் பற்றி பேசுகிறபோது, அவர்கள் பல நேரங்களில் இத்தொழில் வாய்ப்பை மறுக்கக்கூடும். உங்களோடு பேசுவதையேகூட அவர்கள் தவிர்க்கக்கூடும். அத்தகைய தருணங்களில் அதை நீங்கள் உங்களுக்கு ஏற்பட்ட அவமானமாகக் கருதக் கூடாது. தொழில் வேறு, உறவு முறை வேறு என்று பிரித்துப் →



பார்க்கிற தெளிவு வேண்டும்.

அடுத்ததாக, மற்றத் தொழிலை போல இவற்றிலும் நஷ்டம் உண்டு என்பதைப் புரிந்து கொள்ள வேண்டும். மீட்டிங் நடத்துவது, பயணம் செய்வது, பொருள்களை முன் கூட்டியே வாங்கி ஸ்டாக் செய்வது போன்ற முதலீடுகள் அல்லது செலவுகள் இருக்கத்தான் செய்யும். சில நேரங்களில் அவை எதிர்பார்த்த இலாபத்தைத் தராமல் போகலாம். ஏன்... நஷ்டத்தைக்கூடத் தரலாம்.



## கேள்வி - பதில்

**நான் பொருட்காட்சியில் கடை போட விரும்புகிறேன். என்ன கடையை நடத்தினால் இலாபகரமாக இருக்கும் என்று ஐடியா சொல்லுங்களேன்.**

**- ஆர். ஜோதிலட்சுமி, நந்தம்பாக்கம், சென்னை**

இது நல்ல சிந்தனைதான். என்ன கடை நடத்தலாம் என்பதற்கு முன், எப்படி கடையைப் பெற வேண்டும் என்பதையும் நீங்கள் தெரிந்து கொள்ள வேண்டியது அவசியம்.

அரசு நடத்தும் பொருட்காட்சிகள் பெரும்பாலும் நீண்ட நாட்களுக்கு நடைபெறக் கூடியவை. பொருட்காட்சி தொடங்குவதற்கு ஓரிரண்டு மாதங்கள் முன்னதாக அரசு, கடைகளை ஏலத்தில் விடும். ஏலம் நடக்கும் தேதியை அறிந்து ஏலத்தில் பங்கேற்று கடையை எடுக்க வேண்டும்.

தனியார் நடத்தும் கண்காட்சிகள் குறுகிய காலமே நடைபெறக்கூடியவை. கண்காட்சி நடத்துவோரைக் கண்டறிந்து உங்களுக்கான ஸ்டால்களை முன்பணம் கொடுத்துப் பெற வேண்டும்.




தனியார் பொருட்காட்சிகளில்கடை போடும் போது, பொருட்காட்சி நடத்துபவது யார் கூட்டம் வருவதற்கு என்னென்ன முயற்சிகளை அவர் மேற்கொள்கிறார், அந்தப் பொருட்காட்சி பொது மக்களுக்கானதா? வர்த்தகர்களுக்கானதா என்பதையெல்லாம் கண்டறிந்து அதற்கேற்றாற் போல் உணவு, நொறுக்குத் தீனி, ஜூஸ், புத்தகக் கடை போன்றவற்றை அமைக்கலாம்.

அரசு பொருட்காட்சி, சித்திரை பொருட்காட்சியாக இருந்தாலும் சுற்றுலாப் பொருட்காட்சியாக இருந்தாலும், கோடை விடுமுறைப் பொருட்காட்சியாக இருந்தாலும் முழு



★ தங்க நகை, வெள்ளி அணிகலன்கள், விலை உயர்ந்த ஆயத்த ஆடைகள், ஃபர்னிச்சர் பொருள்கள், ஃபிரிஜ், வாஷிங் மெஷின் போன்ற வீட்டு உபயோகப் பொருள்கள், கம்ப்யூட்டர் என்பன போன்ற விலை உயர்வான தொழில் நுட்பம் மிகுந்த பொருள்கள விற்பனை செய்யாதீர்கள். பொழுது போக்கு நோக்கிலேயே மக்கள் வருவதால் இதுபோன்ற பொருள்களில் ஆர்வம் காட்ட மாட்டார்கள்.

★ கடைக்கு முன் என்ன பொருள்களை விற்கிறீர்கள் என்பதை மிகப் பெரிதாக எழுதி விளம்பரப் பலகையை வையுங்கள்.

★ கடை முழுக்க விளக்குகளை எரிய விடுங்கள். எங்கிருந்து பார்த்தாலும் பளிரென்று உங்களுடைய கடை தெரிய வேண்டும்.

★ ஒலிபெருக்கி அமைத்து, உங்கள் கடையைப் பற்றி தொடர்ந்து விளம்பரம் செய்து கொண்டே இருங்கள்.

★ மக்களைக் கவர்ந்திழுப்பதற்காக தள்ளுபடிச் சலுகையையும் அறிவியுங்கள்.

★ இனிக்க, இனிக்கப் பேசி, வார்த்தைகளால் கவர்ந்து இழுக்கும் சேலர்ஸ் ஆட்களை யூனிஃபார்ம் கொடுத்து கடையில் அமர்த்துங்கள்.

★ சந்தையில் கிடைக்காத விலை குறைவான வீட்டுக்குப் பயன்படக் கூடிய அரிய சில பொருள்களை விற்பனைக்கு வைத்துக்கொள்ளுங்கள். அந்தப் பொருட்காட்சியில் வேறு யாரிடமும் அந்தப் பொருள் இல்லையென்றால் உங்களுக்கு வெற்றிதான். உதாரணத்துக்கு கடந்த ஜனவரி - பிப்ரவரி மாதங்களில் சென்னையில் நடைபெற்ற சுற்றுலாப் பொருட்காட்சியில் இருபது ரூபாய்க்கு குழாயில் மாட்டக்கூடிய பூக்குழல் (shower Tap) என்ற பொருள் அனைவரையும் கவர்ந்திழுத்தது.

நம்பிக்கையுடன் ஸ்டால்களை எடுக்கலாம். நல்ல விளம்பரமும் இருக்கும். பொது மக்களும் அதிக எண்ணிக்கையில் வருவார்கள்.

பொதுவாக அரசு பொருட்காட்சிக்கு வரக்கூடிய பொதுமக்கள் பொழுது போக்கை முதன்மை நோக்கமாகக் கொண்டுதான் வருகிறார்கள். எனவே, அவர்கள் உணவுப் பொருள்கள், நொறுக்குத் தீனி, பத்து ரூபாய் முதல் நூறு ரூபாய் வரையிலான வீட்டு உபயோகப் பொருள்கள், கைவினைப் பொருள்கள், ஃபேன்சி அணிகலன்கள், வாஸ்து பொருள்கள், கம்யூட்டர் ஜோசியம், குழந்தைகளுக்கான விளையாட்டுப் பொருள்கள் மற்றும் கம்ப்யூட்டர்விளையாட்டுகள், இராட்டினம் உள்ளிட்ட விளையாட்டுக் கருவிகள், உடனடி ஃபோட்டோ ஸ்டுடியோ போன்றவற்றை விரும்புவர்.

**கவனத்தில் கொள்க:**

★ பொருட்காட்சியின் நுழைவு வாயிலிருந்து முதல் 100 கடைகளுக்குள் ஒன்றை நீங்கள் தேர்ந்தெடுக்க வேண்டும். தள்ளிப் போனால் பொதுமக்களுக்கு ஷாப்பிங் செய்ய பணமிருக்காது.



தாத்தா: கே.எஸ்.லோகநாதன்
பாட்டி: எல்.விட்டோபாய்
பேத்தி:கே.நித்திலகாவ்யா



தாத்தா: எஸ். ஸ்ரீதர்
பாட்டி: எஸ். ரேவதி
பேரன்: ப்ரணவ் ஜெய்தர்

ஆல்பம்



தாத்தா: டி.எஸ்.சுவாமிநாதன்
பாட்டி: எஸ்.ரமாமணி
பேரன்: எஸ்.விக்னேஷ்



தாத்தா: எம்.எஸ்.சேஷாத்திரி
பாட்டி: பானுமதி
பேத்தி: சஹானா



தாத்தா: எம்.முருகன்
பாட்டி: எம். பானுமதி
பேத்தி: எம்.நந்தனா கோமதி



தாத்தா: ஆர். பாலாஜி
பாட்டி: அனுராதா பாலாஜி
பேத்தி: திவ்யாராஜன்

# என் செல்லமே!



# நீ..நீ..நீள முடி ரகசியம்!

இந்தக் காலத்தில் பெண்கள் தலைமுடியை, குட்டையாக வெட்டிக்கொண்டும், க்ராப் செய்து கொண்டும் வளைய வருகிறார்கள். நீளமான கூந்தலையுடைய பெண்களைக் காண்பது அரிது.

கூந்தல் பராமரிப்புக்கு ஏகப்பட்ட விளம்பரங்கள் வருகின்றன. ஆனால் இதோ இந்தப் படத்தில் இருக்கும் பெண், மிக எளிமையான முறையில் மிகவும் பொறுமையாக, அவரது கூந்தலைப் பராமரிக்கிறார். தலைக்கு உபயோகிப்பது சுத்தமான தேங்காய் எண்ணெய் மட்டுமே.

''ப்ரஷ்ஷோ, சீப்போ வைத்து, முடியை சிக்கெடுப்பதில்லை. விரல்களினாலேயே மிகவும் பொறுமையாகச் சிக்கெடுத்துக் கொள்கிறேன். வாரத்தில் மூன்று நாட்கள் எண்ணெய் தேய்த்து ஷாம்பூ உபயோகித்து முடியை அலசுகிறேன்!'' என்று சொல்லும் இந்தப் பெண் யார் தெரியுமா?


ஓவியர் கலா

உங்களுக்கு நன்கு அறிமுகமான ஓவியர் கலாவின் புதல்வி ரமா!

- லோகா சுப்ரமண்யன், திருநெல்வேலி



குக்கரி க்வீன் போட்டிக்கு வந்து குவிந்த சமையல் குறிப்புகளைப் பொறுமை யாக அலசி. சிறந்த வற்றைத் தேர்ந்தெடுத்துத் தந்த ராஜேஸ்வரி வெங்கட்டுக்கு நன்றி!

# குக்கரி

## பத்தியச் சமையல்



### நார்த்தம் பழ சாதம்!

**தேவையான பொருள்கள்:**

நார்த்தங்காய் - 1, பச்சரிசி - 1 கப், தனியா - 1 டேபிள் ஸ்பூன், வர மிளகாய் - 4, கடுகு - ½ டீஸ்பூன், எண்ணெய் - தேவைக்கேற்ப வெந்தயம் - 1 டீஸ்பூன், வேர்க்கடலை - 2 டேபிள் ஸ்பூன், இஞ்சி - சிறிய துண்டு, பெருங்காயம் - சிறிது, மஞ்சள் பொடி, கறிவேப்பிலை - சிறிதளவு

**செய்முறை**

அரிசியைக் களைந்து, தண்ணீர் வற்றியபின் எண்ணெயில் வறுத்து, குழையாமல் வேக வைக்கவும். மிளகாய், தனியா, வெந்தயம், வேர்க்கடலை, பெருங்காயம் ஆகியவற்றை தனித்தனியே வறுத்துப் பொடித்து வைக்கவும்.

உதிர் உதிரான சாதத்தின் மேலே பொடித் தவற்றைப் போட்டுக் கலக்கவும்.

உப்பு மஞ்சள் பொடி சேர்க்கவும். கடுகு தாளித்து நார்த்தம் பழ சாற்றை சேர்த்து கறிவேப்பிலை போட்டு எண்ணெய் (சிறிது) சேர்த்து கலக்கி வேர்க்கடலை அலங்கரித்து பரிமாறவும்.

வயிற்று வலி, அஜீரணம், பித்தம் போன்றவற்றுக்கு மிகவும் நல்லது.

-பிரியா
ஒஷோர்,
சென்னை



# க்வீன்

**ரூ.300/- பரிசு பெறும் ரெஸிபிகள்!**

## கான்செப்ட் சமையல் போட்டி

## ரைஸ் உப்புமா!

**தேவையான பொருள்கள்:**

புழுங்கலரிசி - 1 தம்ளர், வெந்தயம் - 1 டீஸ்பூன், சின்ன வெங்காயம் - 10, கடுகு - 1 டீஸ்பூன், வர மிளகாய் - 1, சர்க்கரை - 1 டீஸ்பூன், எண்ணெய், உப்பு, கறிவேப்பிலை - தேவையான அளவு

**செய்முறை:**

ஒரு தம்ளர் புழுங்கல் அரிசியையும் ஒரு டீஸ்பூன் வெந்தயத்தையும் எடுத்து சுமார் ஒரு மணி நேரம் ஊற வைத்துக் கொள்ளவும். நன்கு ஊறிய பிறகு மிக்ஸியிலிட்டு இட்லி மாவு பதத்தில் அரைத்துக் கொள்ளவும். அடுப்பில் வாணலியை வைத்து நாலு டீஸ்பூன் எண்ணெய் விட்டு, காய்ந்ததும் கடுகு, நறுக்கிய வெங்காயம், கறிவேப்பிலை, மிளகாய் போட்டு வறுக்கவும். வெங்காயம் சிவக்க வறுத்து, அரிசி மாவை வாணலியில் ஊற்றவும். தேவையான அளவு பொடி உப்புப் போட்டு, கூடவே ஒரு டீஸ்பூன் சர்க்கரையும் சேர்த்து நன்கு கிளறி விடவும். இது எல்லாவிதமான உப்புமாக்களை விட மிகவும் ருசியாக இருக்கும். இதை நாங்கள் எஸ்.ஆர்.யூ (Simple Rice Uppu-ma) என்று செல்லமாக அழைப்போம். இது ஒரு டயாபடிக் ரெஸிபி. யார் வேண்டுமானாலும் எப்போது வேண்டுமானாலும் செய்து சாப்பிடலாம்.



- ஆர். காயத்ரி,
வரதம்பாளையம்

**தேவையான பொருள்கள்:**

புளி கரைத்தது - 300 மில்லி, கண்டந்திப்பிலி - 10 கிராம், சாதா திப்பிலி - 1, கண்டைக்காய் வற்றல் - 10, மணத்தக்காளி வற்றல் - 1 தேக்கரண்டி, வேப்பம் பூ, ஓமம், மிளகு - தலா ½ தேக்கரண்டி, சுக்குத் துண்டு - 1 அங்குல அளவு.

இவற்றை வெறும் வாணலியில் வறுத்துப் பொடி செய்யவும்.



தனியா, துவரம் பருப்பு, கடலைப் பருப்பு, உளுத்தம் பருப்பு - தலா 1 தேக்கரண்டி

இவற்றையும் வெறும் வாணலியில் சிவக்க வறுத்துப் பொடி செய்யவும்.

# செரிமானக் குழம்பு!

தாளிக்க:

சீரகம், கடுகு, பெருங்காயத் தூள் - தலா ¼ தேக்கரண்டி, நல்லெண்ணெய் - 25 மில்லி, உப்பு, மஞ்சள் தூள்- தேவையான அளவு

***செய்முறை:***

புளி கரைசலை உப்பு, மஞ்சள் சேர்த்து கொதிக்க விடவும். பின்பு பொடி செய்தவற்றை போட்டு நன்கு கொதித்துக் கெட்டியாக வரும்பொழுது, நல்லெண்ணெயில் சீரகம், கடுகு, பெருங்காயத்தூள் தாளித்து ஒரு நிமிடம் கழித்து இறக்கிவிடவும். சாதத்தில் நல்லெண்ணெய் விட்டு, இந்தக் குழம்பை ஊற்றிச் சாப்பிடவும். மாதம் ஒருமுறையேனும் சாப்பிட அஜீரணம், பசியின்மை, வாயு பொருமல், வயிறு உப்புசம் போன்றவை குணமாகும்.

**- ஏ.எஸ்.அம்புஜம், ஸ்ரீரங்கம்**



### தேவையான பொருள்கள்:

மிளகு, கடுகு - தலா ½ தேக்கரண்டி, வெந்தயம், சீரகம் - தலா ½ தேக்கரண்டி, தனியா- ஒரு தேக்கரண்டி, கா.மிளாய் - 50 கிராம், கறுப்பு எள் - ஒரு கரண்டி, கொப்பரைத் தேங்காய் - ½ மூடி, ரீ-பைண்ட் எண்ணெய் - 200 கிராம், கடலைக்காய் - 50 கிராம், கடுகு, பெருங்காயம் கறிவேப்பிலை - தேவையான அளவு




### கொஜ்ஜு செய்முறை:

மிளகு, கடுகு, வெந்தயம், சீரகம், தனியா, காய்ந்த மிளகாய் இவற்றை வாணலியில் எண்ணெய் போடாமல் தனித்தனியாக சிவக்க வறுத்து மிக்ஸியில் பொடிக்கவும்.

கறுப்பு எள்ளை சுத்தமாக வறுத்துப் பொடிக்கவும். கொப்பரையைத் துருவி வறுத்துப் பொடிக்கவும்.

பிறகு வாணலியில் எண்ணெய் விட்டு, காய்ந்ததும், கடுகு, பெருங்காயப் பொடி, கறிவேப்பிலை போட்டு தாளித்து கடலைக் காயை போட்டு சிவந்ததும் இறக்கவும். இதனுடன் பொடித்து வைத்துள்ள பொடி, எள்ளு, கொப்பரையை போட்டு கலக்கவும். இதுதான் 'கொஜ்ஜு'

## அவலக்கி செய்முறை:

### தேவையான பொருள்கள்:

கெட்டி அவல் - 1 கிலோ, புளி - 100 கிராம், வெல்லப் பொடி - 1 கப் எண்ணெய், மஞ்சள் பொடி, உப்பு - தேவையான அளவு

### செய்முறை:

அவலை சுத்தமாக்கி மிக்ஸியில் ரவை போல் பொடித்து, பெரிய பாத்திரத்தில் போட்டு அதில் புளியைக் கெட்டியாக கரைத்துக் கொட்டி வெல்லப்பொடி, மஞ்சள், உப்பு சேர்த்து சப்பாத்தி மாவு பிசைவதைப்போல் சிறிது தளர்வாகக் கலந்து மூடி வைக்கவும். சுமார் இரண்டு மணி நேரம் ஊற வேண்டும். பிறகு வாணலியில் எண்ணை விட்டு காய்ந்ததும், அதில் ஊற வைத்துள்ள அவல், கொஜ்ஜு கலவையைச் சேர்த்து நன்றாகக் கலக்கவும். இதுதான் 'கொஜ்ஜு அவலக்கி'. அருமையான இந்த பெங்களூர் ஸ்பெஷல் டிபன் சுமார் நான்கு நாட்கள்வரை கெடாது. 'கொஜ்ஜை' செய்து வைத்துக் கொண்டு தேவைப்படும்பொழுது உபயோகிக்கலாம்.



**- ராதா நரசிம்மன், பெங்களூர் - 94**

**தேவையான பொருள்கள்:**

ஓமம் - ½ ஆழாக்கு (தண்ணீர் விட்டு சுத்தப்படுத்தி மண்ணை எடுத்துவிட்டு நன்கு காய வைக்கவும்.) மிளகு - 25 கிராம், சீரகம் - 10 கிராம், சுக்கு - 2 விரல் அளவு (நசுக்கிக் கொள்ளவும்.) கண்டந்திப்பிலி - 15, அரிசித் திப்பிலி - 15, வசம்பு - 1 துண்டு, தனியா - 3 டீஸ்பூன், வரளி மஞ்சள் - 1 துண்டு, பட்டை - 1 துண்டு, பெருஞ்சீரகம் - 1 டீஸ்பூன், (தேன், வெல்லம், நெய், நல்லெண்ணெய்) தேவைக்கு




**செய்முறை:** வெறும் வாணலியில் சுத்தப்படுத்திய பொருள்களை ஒவ்வொன்றாகத் தனித்தனியே கருகாமல் வறுத்துக் கொள்ளவும். இவற்றை மிக்ஸியில் நைசாகப் பொடித்து, சலித்து, கப்பியை மறுபடி சூடுபடுத்தி பொடித்துச் சலிக்கவும். அனைத்தையும் நன்றாகக் கலந்து ஒரு காய்ந்த சுத்தமான பாட்டிலில், இறுக்கமாக மூடி பத்திரப்படுத்தி வைக்கவும்.

அவ்வப்போது கொஞ்சம் பொடியைப் போட்டு, தேவையான அளவு தேன், வெல்லப் பொடி சேர்த்து நெய்யை உருக்கி, நல்லெண்ணெயை சுட வைத்து பொடியோடு கலந்து லேகியமாக செய்து உபயோகிக்கலாம். ஒரு வருடம் ஆனாலும் கெடாது. லேகியப் பொடியில் பயன்படுத்திய அனைத்துமே மருந்துகள். ஆதலால் ஜீரணத்துக்கும் ரத்த விருத்திக்கும் நல்லது. நல்ல பசி எடுக்கும். பிள்ளைப் பெற்றவர்களுக்கு இரண்டு வேளையும் இந்த லேகியம் கொடுக்கலாம்.

**குறிப்பு:** பிள்ளை பெற்றவர்களுக்கு 11ம் நாளிலிருந்து 1½ மாதங்கள்வரை, தினமும் இரவில் பூண்டு மருந்து கொடுத்தல் நலம். முழு பூண்டு 5 (அ) 6 உரித்துப் போட்டு பாலில் வேக வைத்து மசிக்கவும். இந்த லேகிய மருந்துப் பொடியை அதில் போட்டு, பனங்கற்கண்டு, இரண்டு டீஸ்பூன் நெய், ஒரு டீஸ்பூன் நல்லெண்ணெய் சேர்த்து லேகியமாகக் கிளறிக் கொடுத்தால் தாய்ப்பால் பெருகும். குழந்தைகளுக்கு மப்பு, வாயு சேராது. பிரசவித்தவர்களுக்கும் இடுப்பு பலம் பெறும்.



**- சரோஜினி பாலன், சென்னை - 61**

# எல்லாம் வயதுக் கோளாறு!

**'செய்யும் வேலையில் முழு ஈடுபாட்டுடன் கவனம் பிசகாமல் செய்வது என்பது, வயதாக வயதாகக் குறைந்துகொண்டே வருகிறதே, ஏன்?' என்ற கேள்வி நீண்ட நாட்களாக என் மனத்துள் இருந்தது. அண்மையில் படித்த ஓர் அமெரிக்க மூதாட்டியின் ஒருநாள் அனுபவம் - அதற்கு விடை தந்துவிட்டது.**

என் தோட்டத்துச் செடிகளுக்கு நீர் பாய்ச்சலாம் என்று தீர்மானித்தேன். கார்ஷெட் அருகிலிருந்த குழாயிலிருந்து ஹோஸ் பைப்பை மாட்டலாம் என்று சென்றவுடன், என் காரைக் கவனித்தேன். - 'அட, இந்தக் கார்கூட மேற்புறம் கழுவ வேண்டுமே!

கார் கராஜை நோக்கி நடக்க ஆரம்பித்' தேன். அப்போதுதான் அங்கிருந்த சிறிய மேசையின் மேல் அன்றைய தபால் கடிதங்கள் கண்ணில் பட்டன. 'ஓ! முதலில் தபாலைப் பார்த்துவிட்டு காரைக் கழுவிக் கொள்ளலாம்.'

கார் சாவிகளை அந்தச் சிறிய மேசையின் மேல் வைத்துவிட்டு கடிதங்களைக் கையிலெடுத்தேன். பெரும்பான்மையானவை 'அதை வாங்கு, இதை வாங்கு' என்னும் விளம்பர நோட்டீஸ்கள்தான். 'சரி, இவற்றைக் குப்பைக் கூடையில் போட்டுவிட்டு பிறகு கடிதங்களைப் படிக்கலாம்' என்று குப்பைக் கூடையிடம் போனேன். குப்பைக் கூடை நிறைந்திருந்தது. 'சரி, முதலில் குப்பையைக் கொட்டிவிட்டு, பிறகு கடிதங்களைப் படிக்கலாம்' என்று குப்பைக் கூடையைக் கையில் எடுத்தேன். 'அடச்சே! இதைக் கொட்ட தெருவுக்குத்தானே போகணும்? கடிதங்களுக்குப் பதில் எழுதிவிட்டு, பில் கட்ட வேண்டியவற்றுக்கு செக் அனுப்ப வேண்டும் இல்லையா. அதை போஸ்ட் செய்ய வேண்டிய தபால் பெட்டி அங்குதானே இருக்கிறது? அப்போது குப்பையைக் கொட்டிக் கொள்ளலாம்?'

'சரி, முதலில் செக் அனுப்ப வேண்டியவற்றைப் பார்க்கலாம். வீட்டினுள் போனேன். ஒரே ஒரு தாள்தான் செக் புத்தகத்தில் இருந்தது. வேறு செக் புக் உள்ளே இருக்கிறதா பார்க்கலாம் என்று என் அறையில் நுழைந்தேன். 'அடடா! பாதி குடித்து முடித்த நிலையில் பெப்ஸி பாட்டில் இருக்கிறதே. இதை ஏன் இங்கே வைத்தேன்? குளிர்பானம்



சூடு பானமாகிவிட்டதே. சரி, இதைக் கொண்டுபோய் ஃப்ரிஜ்ஜில் வைத்துவிட்டு வரலாம்!' என்று சமையலறையை நோக்கி நடந்தேன்.

'ஃப்ரிஜ்ஜிக்கு சமீபத்திலிருந்த பூ ஜாடியிலிருக்கும் பூக்கள் ஏன் வாடினாற் போலிருக்கின்றன? பாவம். முதலில் இதற்கு சிறிது நீர் ஊற்றலாம் என்று பெப்ஸி பாட்டிலை அங்கேயே வைத்துவிட்டு சமையலறை குழாயை நோக்கி நடந்தேன். அங்கே சமையல் மேடை மேல் இருந்த என் மூக்குக் கண்ணாடி என் கண்ணில் பட்டது. ஹை! காலையிலிருந்து இந்த மூக்குக்கண்ணாடியைத்தானே தேடிக் கொண்டிருக்கிறேன். சரி. இது படிக்கும் போதுதானே தேவைப்படும். இப்போது பூ ஜாடிக்கு நீர் ஊற்றலாம் என்று குழாயிடம் போனேன். அதனருகில் டீ.வியின் ரிமோட் இருந்தது. இதை யார் இங்கே வைத்தது? இரவு டீ.வி போடும் போது ரிமோட் தேடும் வேலை மும்முரமாகிவிடுமே - இந்த ரிமோட்டைப் பிறகு அதனிடத்தில் வைக்கலாம்.

இப்போதைக்கு பூஜாடிக்கு நீர் ஊற்றலாம் என்று தண்ணீர்க் குவளையை பூஜாடியின் மேல் கவிழ்த்தேன். நிறைய நீர் தரையெல்லாம் சிந்திவிட்டது. இதை முதலில் துடைத்துவிடலாம் என்ற துடைக்கும் துணியைக் கையிலெடுத்தபடி சாய்வு நாற்காலியில் அமர்ந்தேன்.

இந்த ஒரு நாளின் முடிவில் இதுதான் நடந்தது.

★ தோட்டத்துக்கு நீர் ஊற்றவில்லை.

★ கார் கழுவப்படவில்லை.

★ கார் சாவிகளை எங்கே வைத்தேன் நினைவில்லை.

★ குப்பைக்கூடை காலியாகவில்லை.

★ செக் அனுப்பவேயில்லை. கடிதங்களைப் படிக்கவுமில்லை.

★ சூடேறிய பெப்ஸி ஃப்ரிஜ்ஜுக்குள் போகவில்லை.

★ செக்புக் புதியது எடுக்கவில்லை.

★ ரிமோட் அதன் இடத்துக்குப் போகவில்லை.

★ பூ ஜாடிக்கும் நீர் ஊற்றப்படவில்லை.

★ தரையில் நீர் துடைக்கப்படவில்லை.

நான் இன்று முழுவதுமே சுறுசுறுப்பாக இயங்கிக் கொண்டிருந்தேனே தவிர எதுவுமே செய்யவில்லை. குழப்பமடைந்து சோர்வாகவும் இருக்கிறேன். இப்போது புரிகிறது. இது தீவிரமான கவனக்குறைவு. இது பற்றி யாரிடமாவது ஆலோசிக்கலாமா? சரி, சரி அதற்கு முன் இன்று எனக்கு என்ன ஈமெயில் வந்திருக்கிறது என்று பார்க்கட்டுமா...

இப்படிப் போகிறது இந்தக் கட்டுரை. இதைப் படித்தவுடன் இதேபோல் நமக்கும் நடக்கிறதே என உங்களில் சிலர் நினைக்கிறீர்கள்தானே!

நன்றி: 'எல்டர்ஸ்'

மொழி பெயர்ப்பு: **சுந்தராம்பாள் சுந்தரம், சென்னை**



ஐந்து கப் பச்சரிசியுடன் ஒரு கப் பாசிப் பருப்பு, கால் கப் ஜவ்வரிசி (பாசிப் பருப்பு, ஜவ்வரிசி வறுத்து) எனச் சேர்த்து மிஷினில் மாவாக அரைக்கவும். இந்த மாவில் உப்பு, பெருங்காயத்தூள் சேர்த்து தண்ணீர் விட்டுப் பிசைந்து, முள்ளு தேன்குழல் அச்சில் பிழிந்தெடுக்கவும். முள்ளு முறுக்கு சுவையுடன், 'கர கர' என இருக்கும்.

**- காமேஸ்வரி கண்ணன், உத்தங்குடி**

ஃபாலோ அப்

பெங்களூரு சகோதரி ஆர்.கிரிஜா ஏப்ரல் 2010 இதழில் எழுதிய ரவை உப்புமா செய்யும் முறையைப் பார்த்து, செய்து, ரசித்து உண்ட பிறகு, உதிர்த்த கற்பனை இது. கிரிஜாவுக்கு மனமார்ந்த நன்றியோடு ஒரு ஃப்ளையிங் கிஸ்!





# ராசியான (அதே) ரவை உப்புமா!

அம்மா சர்க்கரையோடு தரும் ரவை உப்புமாவைச் சாப்பிட அடம் பிடிக்கிறான் ஐந்து வயது பாலகன்.

''வெறும் உப்புமாவை எப்படிச் சாப்பிடறது? சட்னி, சாம்பார் எதுவுமே இல்லையாம்மா?'' எரிச்சலுடன் சாப்பிடுகிறான் பதினைந்துகளில் பையன்.

புது மனைவி ஆசையாகச் செய்து தரும் பேஸ்ட் போன்ற உப்புமாவை மோகத்தில் மௌனமாகக் காலி செய்யும் இளைஞன் இருபத்தைந்து வருடங்களைக் கடந்தவன்.

''இன்னும் கொஞ்சம் வெஜிடபிள்ஸ், ஆயில், தேங்காய்ப்பால் எல்லாம் சேர்த்து, டேஸ்டியாக பண்ணக் கத்துக்கோ; ட்ரை பண்ணு'' - சொல்பவன் முப்பத்து ஐந்துகளில் இருக்கும் குடும்பத் தலைவன்.

''ஒரே எண்ணெய்! காயெல்லாம் வேகலை! இனிமேல் நல்ல, ருசியான உப்புமா சாப்பிட ஓட்டலுக்குத்தான் போகணும்; வேறு வழியே இல்லை! உனக்கும் வேலை மிச்சம்'' - இப்படி பலவிதமாகப் பேசும்போது மனிதனுக்கு வயசு நாற்பத்தைந்து ப்ளஸ் ஆகி விடுகிறது.

வாழ்வில் ஐம்பத்தைந்து வருடங்களுக்கு மேல் பார்த்துவிட்ட அப்பாவுக்கு எவ்வளவோ கடமைகள். தட்டில் இருக்கும் உப்புமாவையும் ஒரு வேலையாக நினைத்துக்கொண்டு, விழுங்கிவிட்டு ஓடுகிறார்.

''லக்ஷ்மி, உப்புமாவைக் கொஞ்சமாக நெய் விட்டு, இஞ்சி, பச்சை மிளகாய் மட்டும் போட்டு குழைவாகப் பண்ணி விடு. இந்தப் பட்டாணி, உருளைக்கிழங்கு எதுவும் போடாதே. தொட்டு கொள்ள சர்க்கரையே போதும்.'' ஓய்வு பெற்ற மனிதர் இப்படிச் சொல்லும்போது வயசு அறுபத்தைந்துக்கு மேலேயே ஓடி விடுகிறது.

- நல்ல, டேஸ்ட்டியான, பதமான, ராசியான (அதே) ரவை உப்புமாவை எப்பதான் சாப்பிடப் போறோமோ?

- பவானி ராமஸ்வாமி, நவி மும்பை



எம். ராதா,
செகந்திராபாத்

# வண்ணக்



எஸ். ஷண்பகவள்ளி,
வேப்பம்பட்டு



22 புள்ளி - 4 வரிசை
4ல் நிறுத்தவும் (நேர்புள்ளி)

லெஷ்மி ஸந்தானம்,
ஸ்ரீரங்கம்

# கோலங்கள்!

பவானி கிருஷ்ணா,
பெங்களூரு



10 புள்ளி 4 வரிசை 4 வரை நேர்புள்ளி. எட்டு பக்க முனைகளிலும் 1 புள்ளி வைக்கவும், நேர்புள்ளி

ராஜேஸ்வரி சிவமுருகன்,
அருப்புக்கோட்டை



15 புள்ளி 5 வரிசை 5 வரை நேர்புள்ளி

விஜயா ரமேஷ்,
ஹைதராபாத்



"ராத்திரி ஒரு மணிக்குக் கல்யாணம். கிளம்புங்க... கிளம்புங்க"

"ராத்திரி ஒரு மணிக்கா? அந்த ராத்திரியில எங்கேயாவது கல்யாணம் நடக்குமா?"

"அட! ஆமாக்கா! ராத்திரி ஒரு மணிக்குக் கல்யாணம்."

"எங்க?"

"ஆண்டார்குப்பத்துலதாங்க. வள்ளி நாயகிக்கும் முருகப் பெருமானுக்கும் நடக்கற கல்யாணத்துக்குக் கிளம்பறோம். நாம மட்டுமா போறோம்? சென்னை, செங்கல்பட்டு, ஆந்திரா, வேலூர், கோலார் என்று பல ஊரு பக்த கோடிகள் லாம் இந்தக் கல்யாணத்தைக் காணத் திரண்டு வர்றாங்களே!"



## எங்கிருக்கிறது?

சென்னை - கொல்கத்தா தேசிய நெடுஞ்சாலையில் தச்சூர் கூட்டு ரோடு உள்ளது. இதற்கு வடக்கு திசையில் ஒரு கிலோமீட்டர் பயணித்தால், ஆண்டார் குப்பம் ஸ்ரீசுப்ரமண்யபுரம் ஆலயத்தை அடையலாம்.

முற்காலத்தில் ஆண்டவர் குப்பமாக இருந்தது ஆண்டார் குப்பமாக மருவி இருக்க வேண்டும். தற்போது தென்னை மரங்கள் சூழ நடுவில் இருக்கிறது இத்திருக்கோயில்.

## கோயில் அழகு!

அழகான கோயில் கோபுரம் எதிரே கம்பீரமாகக் காட்சி தருகின்றது. ஏழு கலசங்களைக் கொண்ட ஐந்து நிலை ராஜகோபுரம். ''முருகா...முருகா'' என்றபடி கோபுர வாயிலில் நுழைந்தோம்.

இந்த ஐந்து நிலை கோபுரம் மிகவும் விசேஷமானது. தாட்சாயணி பிறந்த வரலாறு, கந்தபுராணக் காட்சிகள், சூரனாதியர்கள் செய்த வேள்வி, வீரபாகு தூது, சஷ்டி போர் நிகழ்ச்சி, முருகன் மாமர நிழலில் மயிலுடன் தோன்றும் காட்சி போன்றவை எழிலுறச் சித்திரிக்கப் பட்டுள்ளன.

உள்ளே சென்றால் த்வஜஸ்தம்பம் எனப்படும் கொடி மரம் வானளாவ உயர்ந்து காட்சி தருகிறது. கொடி மரத்தைத் தரிசித்தால் தொல்லைகள் போகும். ஆனந்தம் தேடி வரும் என்பதால், கீழே விழுந்து பக்தியுடன் வணங்கினோம்.

## எழுந்தருளியது ஏன்?

திருக்கயிலாயத்தில் பரமசிவன் பார்வதியுடன் எழுந்தருளியபொழுது முனிவர்கள்தொழுது கொண்டிருந்தார்கள்.

# முருகனிடம்...

முருகப்பெருமான் அங்கு தோன்றினார். அவரைக் கண்டதும் முனிவர்கள் ஆனந்தம் மேலிட 'சரவண பவ' என்று அவரது சடாக்ஷர மந்திரத்தை உச்சரித்தார்கள்.



■ கொடி மர அழகு

ஆனால், முருகப்பெருமான் சட்டென்று மறைந்துவிட்டார்.

பிறகு முருகன் திருகாளஹஸ்திக்கு அருகில் உள்ள திருவேங்கட மலைக்கு வந்தார். அங்கு தவத்தில் ஈடுபட்டிருந்த ஸ்ரீகபில முனிவருக்குக் காட்சி தந்தார். மனம் மகிழ்ந்தார் கபிலர்.

தம்மை வணங்கிய கபிலரிடம் முருக பெருமான் ''யாம் இம்மலையில் இருக்க, திருவுளம் கொண்டுள்ளோம். இம் மலையை அடையும் பக்தர்கள் யாவரும் புண்ணியம் பெற்றவர்கள் ஆகிவிடுவார்கள். இம் மலைக்கு வேங்கடம் என்ற பெயர் உண்டாகும். (வேங்கடம் என்றால் துன்பம். கடம் என்றால் எரித்தல்.) - எம்மைத் திருவேங்கட ஸுப்ரமண்யம் என்றும், வேங்கட சுப்பைய்யா என்றும் மக்கள் போற்றுவர்'' என்று அருள்பாலித்தார்.

## கோயில் உண்டான கதை!

ஸ்ரீ வேங்கட சுப்ரமண்ய சுவாமிக்கு வழிபாடு நடத்தும் அர்ச்சகர்கள் நான்கு பேர். கடைசி அர்ச்சகர் பெயர் குருபர சிவாச்சாரியார். அவர் மனைவி சுசீலை. அவர்களது ஒரே மகன் சம்வர்த்தனன். இவன் வேத, ஆகம, புராண, சாஸ்திரங்களைக் கற்றுத் தேர்ந்தான்.

அவன் தந்தை இறந்ததும் மற்ற அர்ச்சக சிவாச்சாரியார்கள் பூஜை செய்யும் உரிமையையும், ஊதியத்தையும் தர மறுத்தார்கள். தாயார் சுசீலை மனம் நொந்து அழுதாள். அவள் கனவில் வேங்கட ஸுப்ரமண்யம் வந்தார்.

''நாளைக்கு உன் கவலை தீரும்'' என்று நல்வாக்கு அருளினார்.

மறுநாள் காலையில் வீட்டு வாசலில் பரபரப்பு தெரிய, சுசீலை வெளியே வந்து பார்த்தாள். மன்னரே அங்கு வந்திருந்தார்.

''அம்மா, உன் மகனுக்குப் பூஜைகள் செய்ய அனுமதிக்க வேண்டும் என்று கனவில் வேங்கட ஸுப்ரமண்யரே வந்து சொன்னார்'' என்று கூறினார்.

அன்றைய தினத்திலிருந்தே சம்வர்த்தனர் ஆலய பூஜையில் தம்மை ஈடுபடுத்திக் கொண்டார்.

சில ஆண்டுகள் சென்றன.

திருவேங்கட மலையின் கிழக்குப் பகுதியில் சிந்தாமணி என்ற கிராமத்தில் சம்வர்த்தனரின் மாமா, வசித்து வந்தார். பூஜை முறை இல்லாத நாளில் சம்வர்த்தனர் தம் மாமாவைப் பார்க்கப் புறப்பட்டார். கிராமத்தின் வழியைத் தவற விட்டு விட்டுச் சென்றுகொண்டே இருந்தார். இருட்டும் நேரம் வந்தது. சந்தியா வந்தனம் செய்ய வேண்டுமே. தண்ணீரும் அருகில் எங்கும் இருப்பதாகத் தெரியவில்லை. தவித்தார் சம்வர்த்தனர்.

வேங்கடகிரி நாதனைத் துதித்து, தவித்தபடி நின்றவரை நோக்கி ஒரு சிறுவன் ஓடி வந்து, ''என்ன வேண்டும்?'' என்று கேட்டான்.

''சிறுவனான உன்னால் எனக்கு எப்படி உதவ முடியும்?'' என்று கேட்டார் சம்வர்த்தனர்.

சிறுவன் நகைத்தான்.

சம்வர்த்தனர் சந்தியாவந்தனம் செய்ய தண்ணீர் இல்லாத குறையைச் சொன்னார். பாலன், அவரை சற்றுத் தொலைவில் அழைத்துச் சென்றான். சலசலவென்று வெள்ளிச் சரிகையாய் ஓடியது நீரோடை. சற்றுமுன் தான் தேடிய பொழுது இந்த ஓடை இல்லையே என்று எண்ணியபடி இறங்கி நீராடி மாலைக் கடமைகளை முடித்தார் சம்வர்த்தனர்.

பிறகு அந்தப் பாலகனைத் தேடிய பொழுது அவனைக் காணவில்லை. 'ஐயோ, பெயரைக்கூடக் கேட்டுக் கொள்ளவில்லையே' என்று தவிப்புடன் நடந்தவரை மயக்கும் சிரிப்பொலி ஒன்று தடுத்து நிறுத்தியது. திடுக்கிட்டுப் பார்த்தார் சம்வர்த்தனர்.

அழகான கொன்றை மரத்தடியின் கீழ் திருவேங்கடஸுப்ரமண்யர் காட்சியளித்தார். சம்வர்த்தனர் கண்ணீர் மல்கி விம்மினார்.

''உமக்காக பாலனாக வடிவு கொண்டு வந்தோம். எம் வேலின் நுனியால் ஒரு கோடு போட்டு நீரோடையை உண்டாக்கினோம். இவ்விடத்திலேயே இருக்க எண்ணியுள்ளோம். இனி இந்த நதி 'பால நதி'யாகவும் இந்த ஊர் ஆண்டவர் குப்பமாகவும் புகழ் பெறும்'' என்று கூறியபடி ஒளிப் பிழம்பாகி சரக் கொன்றை மரத்தடியில் ஸ்ரீ பால ஸுப்ரமண்ய விக்ரகமாக மாறினார்.

அதனால் இந்த ஆலயத்தின் ஸ்தல மரம் சரக்கொன்றையாகும்.

## ஸ்ரீ பாலசுப்ரமணியர் தரிசனம்!

ஆண்டார்குப்பத்து பாலஸுப்ரமண்யர் இங்கு மூன்று வேளைகளிலும் விசேஷ அலங்காரத்தில் காட்சி தருகிறார்.

காலையில் பாலகனாக, மதியம் வாலிபனாக, மாலையில் வயோதிகராக அலங்காரம் செய்விக்கப்பட்டு, தரிசனம் தருகிறார்.

பால முருகனாக ஞானப்பழத்திற்காக உலகை வலம் வந்த சம்பவத்தையும், வாலிபனாக சூரனை சம்ஹாரம் செய்த கதையையும், வள்ளி நாயகிக்காக வயோதிக வேடமிட்டு நடித்த திருவிளையாடலையும் மேற்கண்ட அலங்காரங்கள் விளக்குகின்றன.

மனிதனுடைய மூன்று பருவங்களையும் இந்த அலங்காரங்கள் எடுத்துக் காட்டுகின்றன.

மூலவர் சன்னிதியைத் தவிர காசி விஸ்வநாதர் விசாலாட்சி சன்னிதி. ஆறுமுகன் சன்னிதி, நடராஜர், சிவகாமி அம்மையார், மாணிக்க வாசகர், அருணகிரி நாதர், வீரபாகு தேவர், சண்டிகேஸ்வரர் சன்னிதிகளும் இருக்கின்றன.

## வினோத யானை வாகனம்!

சித்திரை மாதம் பிரமாதமாக

● பிரம்மனுடன் பாலமுருகன்





# ருத்ர வாகீஸ்வரி சுப்ரமண்ய யந்திரம்

ஓம்.சூம்.பவா.
வா.சயிலொழிபவா.
வா.சிவா.நமஹா.
ஓம்.வாம்.ஶ்ரீம்.ஸ்ப்யோம்.
ஹ்ரீம்.நம.

**பூஜையறை மனைப்பலகையில்இந்தக் கோலத்தை வரைந்து, இந்த மந்திரத்தை ஜபித்து வந்தால், மாணவர்களின் மந்த புத்தி அகன்று, நல்ல படிப்பாற்றல் கிடைக்கும். தேர்வில் அமோக மதிப்பெண் பெறலாம்.**

**-கோமளா நாராயணன், சென்னை**

பிரம்மோற்சவம் நடைபெறுகிறது. பரணி நட்சத்திரத்தன்று நாக வாகனம், கிருத்திகை நட்சத்திரத்தன்று தங்க மயில் வாகனம் போன்றவை இரவு மூன்று மணிக்கு நடைபெறும்.

வள்ளி - முருகர் திருக்கல்யாணம், தங்க மயில் வாகனத்துக்கு முன்பாக ராத்திரி ஒரு மணிக்கு நடைபெறும்.

ஏன் நள்ளிரவு ஒரு மணிக்கு என்று கேட்டோம். சுற்று வட்டாரத்து மக்களில் பெரும்பாலானோர் விவசாயிகள், தொழிலாளர்கள். அவர்களது வசதியை முன்னிட்டே ராத்திரி ஒரு மணிக்குத் திருமணம். அதனால் நிறைய மக்கள் முருகன் - வள்ளி திருகல்யாண வைபவத்தைக் காண வருகிறார்கள். முருகனின் அருளைப் பெறுகிறார்கள்.

மறுநாள் விசித்திர யானை வாகனம். யானை வாகனத்தின் தொப்புளில் ஒரு கம்பியை இணைத்திருப்பார்கள். வழிபாடு நடக்கும்பொழுது அந்தக் கம்பியை மெள்ள அசைத்தால் யானையின் இரு காதுகளும், தும்பிக்கையும், வாலும் அசைந்து உயிருள்ள கஜேந்திரனாகக் காட்சி தரும்.

பால ஸுப்ரமண்யருக்குப் பின்னால் வட்டமான ஓ'ம்'கார திருவாசி பளபளப்பாகக் காட்சியளிக்கிறது.

அன்பர் ஒருவர் ஒரு கிலோ வெள்ளியால் ஆன சேவல் கொடியையும், ஒரு கிலோ வெள்ளியால் ஆன வேலையும் காணிக்கையாக்கி இருக்கிறார். இவை மூலவரின் அலங்காரத்தில் அழகனுக்கு அழகு சேர்க்கின்றன.

***(வலம் வருவோம்...)***

என்றும் உங்களுடன்

# மங்கையர் மலர்

## திருமண மலர்





பனீர் பட்டர் மசாலா தயாரிக்கும்பொழுது இஞ்சி, வெங்காய விழுது நன்கு வதக்கி, பிறகு கிளறி, ஒரு ஸ்பூன் தேங்காய் விழுதை அரைத்து விட்டால் சுவையும், மணமும் ஹோட்டலைத் தோற்கடிக்கும்.

- பா.பனிமலர், மதுரை - 14

பூண்டை வேக வைத்துத் தோலுரித்து மசித்து வடகமாவில் கலந்து வடகம் செய்யலாம். வறுத்துப் பொடித்த முந்திரி அல்லது நிலக்கடலை, கொப்பரைத் துருவலையும் வடக மாவில் கலக்கலாம். குழந்தைகள் மிகவும் விரும்பிச் சாப்பிடுவார்கள். சில மாதங்களே பயன்படுத்தும் அளவு தயாரித்தால் போதும்.

- என். ரம்யா, பெங்களூரு

வசதியுள்ள பெண்கள் கம்யூட்டர், இன்டர்நெட் போன்றவற்றிலிருந்து பல விஷயங்களைக் கற்றுக் கொள்ள வேண்டும். குறிப்பாக www.ehow.com, www.floralcrafts.com இப்படி உள்ள வலைத் தளங்களில் பல செய்முறை விளக்கங்களுடன் பூ செய்தல், எம்பிராய்டரி, தையல், பொம்மைகள் செய்தல் இவற்றைக் கற்கலாம். பிறகு பிறருக்குச் சொல்லித் தந்து பணம் சம்பாதிக்கலாம்.

- ஓ. மஞ்சுளா, திருவாரூர்

வீட்டில் 'லவ் பேர்ட்ஸ்' வளர்ப்பவர்கள், அதில் ஒன்றை ஏதாவது காரணங்களினால் இழக்க நேரிட்டால் மற்றதை தனியே விடாதீர்கள். இது இரவு முழுவதும் தலைகீழாகக் குதித்து குதித்து இறப்பதற்கு முயற்சிக்கும். உடனே அருகிலுள்ள கடையில் வேறு ஒரு பறவை வாங்கி அதனுடன் சேர்த்து வையுங்கள்.

- அனுராதா ரமேஷ், பாண்டிச்சேரி - 4



மற்றவர்களைக் குறை சொல்வதை முற்றிலும் தவிர்த்துப் பாருங்கள். உங்கள் மனம் அமைதியடையும்.

- அ. ஆனந்தி, போடிநாயக்கனூர்

உப்பு ஒரு கிருமி நாசினி. பச்சைக் காய்கறிகளை நறுக்கி சமைப்பதற்கு முன் வெதுவெதுப்பான நீரில் சிறிதளவு உப்பைப் போட்டு அதில் கழுவினால் கிருமிகள் கொல்லப்படும்.

- கே.விஜயலட்சுமி, வேளாந்தாங்கல்

தெரு விளக்குகள் அனைத்தும் சூரிய சக்தியினால் எரியக் கூடிய சோலார் விளக்குகளாக இருந்தால் மின்சாரத்தை மிச்சப்படுத்தலாம். வீடுகளுக்கும் இதனைப் பயன்படுத்தலாம். அரசு கவனிக்குமா?

- வி. பிரேமா, மயிலாடுதுறை

# இவை எல்லாமே ஆஹா 50 தான்!

# மணமகள் தேவை



**K.NATARAJAN**

◆ Well settled, widower, Own House, with 10 years old daughter, Dubai Returned, presently Chennai, MNC, 30,000/-p.m. Mechanical Engineer, DME, PDS, PDMS, Iyer, Telugu Brahmin, Logidasa Gothram, Magam, Aug 1968, 5.5', Handsome, very young looking, healthy person seeks Graduate employed/unemployed bride middle/Poor class any Brahmin Telugu/Tamil/Madwa sub sections no bar. Simple early marriage, No expectation. Send your Bio-data, horoscope, Photo Mrs.M.Vijayalakshmi, 59-60, Suba-srinagar Extn-I, Gokulam Flats, Kamarajar Street, Mugalivakkam, Porur, Chennai - 116. Ph:044-22522365, 09841903110 k_natarajan1@yahoo.com

---

**S.PREM ANAND**



◆ Iyer, Vadamal, Thanjavur, Bharathwajam, Uthirattadhi (3), 32, 5'8", M.Sc (Chemistry), employed in leading sugar factory at Kakinada, Andhra, monthly salary Rs.30,000/- seeks graduate or post graduate bride employed or unemployed, sub-sect no bar. Telugu brahmins knowing Tamil acceptable. Contact 044-26580463 or 9884916128 web: ssmatri.com ID.91527. Box No. 16929

---



**R.SANKAR**

◆ Iyer, Vadamal, Bharathwajam, Rohini, 24.08.1970, 166 cms, B.Tech, ICWA (Inter), CAIIB, Manager in IOB, Rs.40,000/-p.m., clean habits owns house and a flat, seeks suitable bride, Sub-sect and Iyengar also welcome. Employment not necessary. Cell: 9841022817. Box No. 16931

**மங்கையர் மலரின் திருமண மலர் பகுதியில் ஜாதி, மத, இனப் பாகுபாடு இன்றி, சமுதாயத்தின் அனைத்துத் தரப்பினரின் விளம்பரங்களும் ஏற்றுக் கொள்ளப்படுகின்றன. அவைகள் யாவும் மங்கையர் மலரின் கோட்பாடுகளுக்கு உட்பட்டு இப் பகுதியில் வெளியிடப்படும்.**

◆ Iyer, Vadama, Srivatsa, Revathi, 4.4.1973, B.Com/172 cms/18 lakhs P.A, well settled propertied Businessman seeks girl from a good family background. Refer ssmatri 90703. Ct 9884256058/ brgpal@gmail.com Box No. 16875

◆ **Vadamal Iyer, Naithrupa Kashyapa, Kaarthigai, 28, B.Com, ICWAI, Cost Accountant, Rs.5 lakhs p.a, employed at Madurai, seeks graduate/Post graduate, employed/unemployed bride. Sub sects no bar. Ph: 9500078156, 9500088156 Box No. 16877**

◆ ஐயர், வடமா, ஆத்ரேயம், ஸ்வாதி, 1984, பி.காம், ITC மார்க்கெட்டிங் மாதம் 20,000 வருமானம். தாய் மட்டும் உண்டு. (தந்தை இருக்கும் இடம் தெரியாது). தகுந்த மணப்பெண் தேவை. பிராமண கலப்பு உள்ள சைவ மணப்பெண்ணும் சம்மதம். போன்: 9840236131 லலிதா சந்திரசேகர். பெட்டி எண். 16878

◆ Iyengar, Vadakalai, Bharadwajam, Avittam, B.Com, 34/Pvt/Chennai/ 15,000/- seeks Iyer/Iyengar Bride. Simple, IInd marriage also welcome. No parents. Ph: 9444451185. Box No. 16879

◆◆ Iyer, Vadamal, Srivatsam, March 1979, Fair, 168, Chithirai, Kanni, B.Com, B.Ed, DCA, Adjustable, clerk, City Union Bank, Transferable, 18,000, Own house, seeks +2/Diploma/Degree/Employed/ Unemployed girl. Simple marriage. No demand. Box No. 16880

◆ Iyer, Brahacharanam, Garga, Anusham 2, Sep 83, 180 cm, BCS, MPM, MBA, DCL, Asst.Manager (HR), MNC Pune, 55,000/-p.m, seeks graduate/PG Brahmin girl pref employed. Subsect no bar. Contact 020-25284179, 090110 60226. Box No. 16881

◆ Wanted Brahmin Iyer girl, well qualified or post graduate or BE working in Mumbai, Bangalore, Pune & Chennai with age difference of two to five years for Iyer, Vadamal, Kaushikam, Moolam 3rd padam 8th Jan 1978, 177 cm, BE (Electronics & Telecommunications) studied JAWA & HRD from Symbosis, working as Project Manager in MNC Bangalore. Box No. 16882

◆ Iyer, Brahacharanam, Athreya, Rohini, v.fair, Oct. 1980/165cm, B.E.M.BA seeks suitable bride contact vnbsarma@yahoo.com (09443082079, 09790596201) Box No. 16883

◆ Iyer, Vadamal, Bharatwajam, Uthiram, v.fair, Sept 1969/6.2 ft, B.E, Sr.Position in MNC, seeks suitable bride. Contact svram53@gmail.com (23661960) Box No. 16884

◆◆ **Iyer, Vadamal, Kanva Gothram, Rohini, July 1974, 175 cms, MCA, fair, Project Manager, Chennai, Rs.11 lakhs per annum, Legal Divorcee, Unconsummated, seperated within 2 months, Own house, seeks family oriented unmarried Brahmin Iyer girl. No expectations. Simple marriage. Email:shirdisaibless@gmail.com Box No. 16885**

◆ Kerala Iyer, Brahmin, Legal Divorcee, Srivatsa Gothram, Chithirai, Kanni Rasi, 1966, B.Com. Computer, Professional Singer, Chennai seeks girl, poor family, working, Teacher, Lecturer etc. Contact 9941304137. Simple marriage. Box No. 16886

◆ ஐயர், வடமாள், ஆத்ரேயம், 33, 165 செ.மீ, fair, ரோகிணி - 1, B.Com. store Incharge, Karafi International in Kuwaith, 8 lacs. வருட வருமானம் உள்ள வரனுக்கு ஐயர் உட்பிரிவில் டிகிரி படித்த பெண் தேவை. எதிர்பார்ப்புகள் இல்லை. போன்: 9790856651, 9003241608. பெட்டி எண். 16887

◆ வடமாள், ஹரிதம், மகம் - 4, 37, 6', (ICWA), MBA, Vijaya Health Center, Five Lakhs p.a. seeks qualified, employed, good looking girl. Sub-sect no bar. Contact 22741-879, 9840980724. Box No. 16888

◆◆ Iyer, Brahacharanam, Koundinyam, Anusham, 34/178, B.Tech, M.B.A, Senior SAP consultant, Infosys, Chennai, Rs 14 lakhs per year, v.fair, clean habits, own houses, excellent family background, well settled seeks Iyer or Iyengar bride. Employed or unemployed. Mobile: 9444788222. e.mail: blessedgroom@gmail.com Box No.16889

◆◆ Iyer, Brahacharanam, Kausikam, Ashwini, 1979, 5'5", B.Com, M.P.M, Sr.Executive, (HR),

## திருமண மலர் - விளம்பரக் கட்டண அறிவிப்பு

திருமண மலர் விளம்பரக் கட்டணம் முதல் 30 வார்த்தைகளுக்கு ரூ.500/-
அதிகப்படியான வார்த்தை ஒவ்வொன்றுக்கும் ரூ.15/-
வண்ணத்தில் 'ஹைலைட்' செய்ய ரூ.100/- கூடுதலாக அனுப்பவும்.
வண்ணப் புகைப்படத்துடன் (1" x 1") வெளியிட ரூ.800/-
இத்துடன், www.mangayarmalaronline.com என்கிற மங்கையர் மலரின் இணையதளத்திலும் சேர்த்து விளம்பரம் வெளியிட, கூடுதல் கட்டணம் ரூ. 100/-

Mumbai, Rs.45,000/- p.m, Own Flat, seeks qualified, Brahacharanam, Vadamal girl. Contact: 09767-401597. Box No. 16890.

◆ Palakkad Iyer, Vadamal, Athreya, Revathi, Oct 1975, 171 cms, MBA, Sr.Test Engineer, Rs.40,000/-pm seeks bride Iyer/Iyengar. Contact: Adikesavan, 044-64576049. Box No. 16891

◆ Iyer, Vadamal, Athreya - Chithirai,30 yrs, 5.7', B.Sc (Maths), Mind Teck, Bangalore, Rs. 60,000/- p.m. and above seeks suitable bride. Contact Mob: 9940584765. Box No. 16892

◆◆ Iyer, Ashta Sahasram Kasyapa, Kettai, 32, 5.10', B.Com, CA(Inter), ICWA (Inter), Accounts Officer, L&T Group Chennai, 5.5 lakhs p.a, Graduate employed/unemployed girl, sub-sect no bar. R.Neelakantan 22631147. Box No. 16893

◆ Madhwa Kannada, Balaganadu, Moudgalya, Poosam III, 14.03.1984, 5'10", Senior Soft-ware Engineer, SAP, Bangalore. Rs 7 lakhs seeks bride above 5'4", good complexion Engineer or professional. Contact: 09443828033. Box No. 16894

◆ Smartha, Baradwajam, Brahacharnam, Ayilyam, 30/160/50, MBA, Working as Manager (HR) Boy currently fit-free but on Anti-Epileptic Drugs seeks below 26 years employed Graduate, good looking, straight forward girl from decent family. Sub-sect no bar. Send Horoscope Box No. 16895

◆ Iyer, Brahacharanam, Sankrithi, Thiruvadirai, 20.4.80, M.Sc (Physics), 5'7", Oracle India, Hyderabad, Rs. 50,000/- p.m, seeks fair, Graduate, employed, domestically trained bride, height upto 5'5", - ssmatri 90937- Ph (0761)2901177 Mobile: 09893095057. Box No. 16896

◆ அய்யர், அஷ்டசகஸ்ரம், கும்ப ராசி, அவிட்டம், 34 வயதான, M.Sc (Chemistry) படித்த, மாதம் ரூ.60,000/- வருமானமுள்ள, சொந்த மாக தொழில் செய்யும். சொத்துள்ள சட்டப்படி விவாகரத்தானவருக்கு சுமாராக படித்த, வேலைக்குச் செல்லாத, குடும்பப்பாங்கான ஏழைப் பெண் தேவை. குழந்தையற்ற விவாக ரத்தானவர்களும் சம்மதம். தொடர்புக்கு: 9382922718, 9380472332. பெட்டி எண். 16897

◆ Iyer, Bharadwajam, Uthiradam Ist Padam, April 1976, 178 cms, Graduate Delhi University,

Bank Mgr, Gurgaon, 5.25 lacs, P.A, Decent Family seeks Graduate bride, simple marriage, Phone No. 011-25897780, 09310267574 Box No. 16898

◆ Iyer, Ashtasahasram, Athreya, 1977, Utthiradam, 178 cms, MBA, Asst. Senior Manager (Operations), MNC Chennai, 6 lacs/ annum, Legal divorcee, No encumbrance. Subsects acceptable seeks suitable bride. 080-2347 9528, 09902272330 (Vasantha Maheswaran). Box No. 16899

◆ Iyer, Vadamal, Bharathwajam, Anusham IV, 32, 5'10", B.Com, Computer knowledge, Private, 10,000/-, Own House, seeks Graduate girl, preferably employed, Contact: 044-22431531, Box No. 16900

◆◆ Iyer, Brahacharanam, Koundanya, Dec '77, Poorattadi 2, 183 cms, B.E, MNC, Bangalore seeks suitable bride 09620245084. Box No. 16901

◆ Iyer, Brahacharanam, Koundinyam, Poosam (4), Aug '78, 181 cm, 65,000/-p.m, B.Com, GNIIT, Sr.Analyst, Bangalore seeks Graduate bride, Sub-sect no bar. M.RajaGopalan, 080-23655953, (O) 8904031575. Box No. 16902

◆ ஐயர், வடமாள், கௌண்டன்யம், அஸ்தம், 5.11.1980, +2 படித்து, கேட்டரிங் சர்வீஸ், சொந்த பிஸினஸ், மாத வருமானம் 25,000/-க்கு மேல்,

இந்த இதழில் பிரசுரமாகும் பெட்டி எண் விளம்பரதாரருக்கு பதில்கள் அனுப்ப கடைசி தேதி : 10.8.2010.. பதில்கள் அனுப்ப வேண்டிய முகவரி : பெட்டி எண் : ............ C/o மங்கையர் மலர், 47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 032

சென்னை. தகுந்த மணப்பெண் தேவை. தொடர்புக்கு 9843036822, 9790999399. பெட்டி எண். 16903

◆ Iyer, Haritham, Thiruvonam 31/176. B.Tech (IIT), MS (USA) employed Boston seeks Qlfd girl, Tamil matrimony ID:M642651. Contact 09831396247, 03326-887890, anandiyer_79@yahoo.com Box No. 16904

◆ தஞ்சாவூர் சைவப்பிள்ளை, வயது 27, அவிட்டம், மகரராசி, BE(ECE), MNC வேலை, பெங்களூர், நன்கு படித்த நல்ல வேலையில் உள்ள நல்ல குடும்பப்பாங்கான மணமகள் (சைவம்) தேவை. செல்: 96009 72433, போன்: 0427-2387127 பெட்டி எண். 16905

◆ ஆத்ரேயம், அஷ்டசகஸ்ரம், மிருகசீரிடம் I. ஆகஸ்ட் 1983, B.E, Engineeer Bosch, Bangalore, 5.11' Rs.50,000+/per month, seeks well qualified, employed bride at Bangalore (or) transferable to Bangalore. Subsect no bar. Contact: Mob: 9443434122. Box No. 16906

◆ Tamil Iyer, Vadamal, Koundinyam, Maham, 34, B.Com. DCA (MBA), Dy.Manager, HDFC Bank, Chennai, Salary +Rs 40,000/- p.m. Seeks suitable, educated, employed bride. Contact Ph:044-65446849. Box No. 16907

◆ Iyer, Vadamal, Gargya, Rohini, 35y, B.Com, MSW, Propertied own business, Rs.15,000/- p.m, seeks employed/unemployed, good natured girl. Subsect no bar. No demands. Contact: 9442272171 Box No. 16908

◆ Iyer, Vadama, Bharadwajam, Revathi, fair, 28, 5.9, B.Com, DCA, Executive Finance, (V.F.Aravind Brands Ltd) MNC, 25,000/- No expectation, seeks Degree from any Brahmin girl. 9941132278. Box No. 16909

◆◆ Vadama, Viswamitra, Visagam - 4, Kethu in 7th house, B.Com., ACA, AICWA, ACS, General Manager in leading Private sector limited company in Chennai, Regional office (Transferable Job), Born April 1974/183 cm/1,20,000/ per month, fair, own flat, seeks Iyer bride, subsect no bar. Contact 044-24842691, Mobile: 09444-575466. Box No. 16910

◆ Iyer, Vadamal, Vadhula, Pooratathi 1973, 170, M.Com, MBA, M.Phil Bank 3 lacs p.a, legal divorcee marriage not consummated seeks unemployed Brahmin bride. Subsects no bar. Ph: 9894024406. Box No. 16911

◆ பாலக்காடு ஐயர், வடமாள், ஆத்ரேயம், பூசம், டிசம்பர் 1977, 5.8',

பி.ஏ. வேத கனபாடிகள், புரோகிதம், சொந்த வீடு உள்ளவருக்கு குடும்பப் பாங்கான மணப்பெண் தேவை. 9003567669. பெட்டி எண். 16912

◆ ஐயர், அஷ்டசகஸ்ரம், காசிப கோத்ரம், பூரட்டாதி, 36 வயது, M.A, Public Admn., தனியார் நிறுவனம், வருடத்திற்கு 7 லட்சம் சம்பாதிக்கும் பிள்ளைக்கு மணப்பெண் தேவை. ஐயரில் எந்த பிரிவும் சம்மதம். தொடர்பு: 9840224115, 9840611159. பெட்டி எண். 16913

◆ Iyer, Vadamal, 27, 5'8", Vadula gothram, M.Sc, Magam, Purchase Executive, Good salary, Madura Coats Pvt Ltd, Papanasam, Tirunelveli seeks graduate girl from good family background, Contact 9952692657, Box No. 16914

◆ Iyer, Vadamal, Kaundinya Visakam, Sept 1980, 180 cms, Handsome, Masters in Engineering worked Four years MNC now Entrepreneur well to do Chennai own house seeks Graduate, slim goodlooking employed/unemployed any Brahmin girl any sect. Contact: 044-24894760, ID.M-1605727 Box No. 16915

◆ Iyer, Vadamal, 32, 5'9", Gauthamam, Avittam, B.E, S.W.Eng, HP (USA), seeks Graduate bride T.M.964332, contact 22333571, 9840663872 Box No. 16916

◆ Vadamal, Srivatsam, Kettai, Sep.80, 6.2', B.Com, NIIT(G), MBA System Analysis Manager System,

திருமண மலர் பகுதியில் இடம் பெறும் விளம்பரங்கள் அனைத்தும் விளம்பரம் செய்பவர்களின் கையொப்பத்துடன் ஏற்றுக் கொள்ளப்படுகின்றன. மணமகள் அல்லது மணமகன் பற்றிய வயது, வருமானம், அந்தஸ்து உள்ளிட்ட இதர விவரங்கள் விளம்பரதாரர் தரும் குறிப்புகளின் அடிப்படையில் பிரசுரிக்கப்படுகின்றன. இந்த விவரங்களைக் கொண்டு தொடர்பு கொள்ளும் பெற்றோர்கள் அவை சரியான விவரங்களா என்று தனிப்பட்ட முறையில் விசாரித்து உறுதி செய்து கொள்வது நல்லது. மேலும் வாழ்க்கைத் துணையைத் தேர்ந்தெடுக்கும்பொழுதே மருத்துவப் பரிசோதனையும் மேற்கொண்டால் பிறவிக் குறைபாடுகளுடன் குழந்தைகள் பிறப்பதைத் தடுக்கலாமே! - பதிப்பாளர், மங்கையர் மலர், சென்னை 600 032

Bombay, Star T.V network 8 lacs per annum looking for Vadamal, well educated, employed girl. 020-25422511, 044-24890414 Box No. 16917

◆ Issueless Brahmin divorcee, 34 yrs, 5'7", MCA, Srivastham, Mirugashrisham - III, MNC, Blore seeks any Brahmin/Brahmin Inter caste, educated, employed girl. Issueless divorcee acceptable. Call: 9840918266, 044-28141505 Box No. 16918

**◆◆ Vadamal, Naithrupakasyapa, Barani (4), Dec 1981, 183, B.E, Infosys, Chennai, 42k p.m., ss.matri ID 92850/81 seeks suitable Iyer bride, Horoscope matching essential, email: sriram.matri@gmail.com Box No. 16919**

◆ Iyer, Brahacharanam, Kousigam, Punarpoosam - 4th padam, 175 cm, 11/11/68, B.A (Corp), Dip in computers, Own Business, Rs. 35,000 pm, seeks good looking affectionate, employed/employable girl. Contact: 044-22271763, 9840292440 Box No. 16920

◆ ஐயர், பிரஹசரணம், கௌண்டன்ய கோத்ரம், உத்திரம், 40, 5.6', B.A, Sales Exective Qatar 2 Lac p.m, பிராமின் மணமகள் தேவை. உட்பிரிவுகள் சம்மதம். போன்: 044-26203778. பெட்டி எண். 16921

**◆ Iyer, Vadamal, Srivatsam, Magam, 30 years, B.E, MBA, IIM, Own educational services firm 40,000/p.m clean habits, wants traditional Brahmin girl below 26 years, willing to settle In a Joint family at Chennai and preferably Interested in social service. Reply with BHP.to Box No. 16922**

◆ Karuneegar Pillai, Ayilyam, 32 yrs 5.6', B.B.A D.E.C.E, Business (Layout Promotors), income Rs.25,000/- p.m, Vegetarian, seeks good looking graduate girl, pref. Saiva Pillai, Karuneegar, strictly vegetarian, age between 24 to 27. Contact: 22234849, 9840152242 email:narean@rediffmail.com Box No. 16923

◆ Iyer, Shadamarshanam, Hastam, 51 yrs, MTech, Senior Software Executive widower no issues living with father seeks horoscope from graduate, home loving girls, Widows without issue. Box No. 16924

◆ Iyer, Athreya, Visakam, Thula, 38, 180 cm, CA/ICWA/ACS/CISA/ Wholetime Director IT Systems

Audit & Consultancy Co, seeks suitable accomplished, employed/ unemployed girl. brv32@ hotmail. com Box No. 16925

◆ ஆத்ரேயம், வடமாள், திருவோ-ணம், 38/M.A., PGDCA/ 5'7"/ 30,000 மத்திய அரசுப் பணி, சொந்த வீடு சென்னையில். வரனுக்கு படித்த/ படிக்காத வேலைக்குப் போகும்/ போகாத குடும்பப்பாங்கான பிராமணப் பெண் தேவை. எதிர்பார்ப்புகள் இல்லை. விரைவில் திருமணம்.போன்: 044-65641552. பெட்டி எண். 16926

◆ ஸ்மார்த்த கன்னட பிராமின், காசிப, சுவாதி, 34/183/சிகப்பு, B.Com/ PGDCA/TVS Group, Accounts Executive, 13,000 seeks Graduate employed girl from good family. டிமாண்ட் ஒன்றும் இல்லை. Contact: 9283207127, 9444489333. Box No. 16927

◆ மணமாகாத ஐயர், ரோஹிணி - I, அஷ்டசாஸ்திரம், வாதூலம், 1974, 168 செ.மீ, DEE, B.S.Electrical, வெளிநாட்டில் Qatar-Doha - வில் அரசுப் பணி, வருட வருமானம் ரூ 10 லட்சம், வரனுக்கு, + 2 or one degree படித்த மணப்பெண் தேவை. பிராமணரில் எந்த பிரிவும் சம்மதம். சைவப் பெண்களும் சம்மதம். குழந்தை இல்லாத சட்டப்படி விவாகரத்தானவர்களும் சம்மதம். எதிர் பார்ப்புகள் இல்லை. போன்: 94448-90157, 8056232043. பெட்டி எண். 16928

◆ Vadakalai Ayengar, Athreya, 34/ 5'8", Anusham, DECE, Rs.30,000/-, Private Company Nagpur seeks

suitable bride. Contact V.P.Sridhar, Chennai Mobile 919444907411. Box No. 16930

◆ Iyer, Vadamal, Haritham, Pooratadhi, B.Com, MBA, 5'7", Accts Officer, also Mridangist, Rs.20,000 p.m., Own house, Chennai seeks Brahmin girl from respectable family 044-22412369, 9282241131. Box No. 16932

**◆ Iyer, Vadamal, Kowsikam, Pooram, 24, Handsome BE, Chennai employed of affluent business family seeks same sect fair, Graduate, unemployed/ employed bride with good family background. Box No. 16933**

◆ Iyer, Vadamal, Koundinyam, Aayilyam, 33/179 Commerce Graduate, (CA), DEEE, Accounts Manager, MNC Chennai, Rs. 6.25 lac p/a. Own house, clean habits seeks Graduate bride respecting family value. email: tsrajaraman@gmail.com (044)-22336435. Box No. 16934

◆ மணமாகாத ஐயர், வடமாள், ரோஹிணி, பரத்வாஜம், 40, 5.9ft, M.Com, Own Business, சென்னை, வருட வருமானம் ரூ.15 லட்சம், வரனுக்கு பொருத்தமான, வயது 32 முதல் 36க்குள், டிப்ளமோ/ பட்டதாரி, மணமகள் தேவை. தொடர்புக்கு: 9952077704. பெட்டி எண். 16935

◆ Iyer, Vadamal, Srivatsam, Swati, 34/5.8', M.A.,M.Phil, MBA, clean habits, Asst.Manager, MNC, Pune seeks employed/unemployed girl. Contact: 022-25891635, 09892384472,09833029332. Box No. 16936

◆ Brahacharanam, Haritha Kettai 3, B.Sc PGDIT, Asst. Project Manager, MNC, Chennai, 36/5.5', One Lakh per month seeks employed girl. Contact 044-22434026. Box No. 16937

◆◆ Iyer, Vadama, Uthithya, Aswini, 1975, 167, B.E, M.Tech, Principal Engineer, MNC Chennai. Rs. 11 Lacks p.a owns flat, Chennai, Delhi seeks suitable girl. 044-22277307, (O)9444441940. Box No. 16938

◆ Mumbai, Iyer, Bharatwajam, Brahacharanam, Uthram IV, 49/160/M.A, Business, kind person Rs.60,000/-p.m, own flat, good family seeks Bride. Subsect no bar. Handicapped, divorcee ok. Simple early marriage. mailrajagopal46@rediffmail.com Box No. 16939

◆ Tamil Brahmin, Iyer, Vadamal, Aathreya, 181 cm, 31 yrs, Central Govt, HVF, Avadi, 18,000/-p.m, Ph: 9962118554. Box No. 16940

◆ Iyer, Vathimal, Bharatwajam, Poorattathi, 30/170 B.Com, ACA, MBA and ICWAI (Final), Wellplaced Decent salary seeks educated, good looking girl. Subsect no bar. Balasubramanian, Mobile:9677293901, www.ssmatri.com ID93358/80 Box No. 16941

◆ Iyengar, Koushigam, Avittam, Kumbam 37, 60 kg, fair, slim, BBA working in Railways, 16,000/-, expecting +2, graduate girl from any Brahmin community (Inter- Caste Accepted), Contact: Vasantha Ranganathan, Ph:8015767997, 044-26170837. Box No. 16942

◆◆ குறிப்பிட்ட திருமண விளம்பரங்களை மங்கையர் மலரின் இணையதளத்திலும் காணலாம். இதனுடன் சேர்த்து இணையதளத்திலும் வெளியிட கூடுதல் கட்டணம் ரூ. 100/- மட்டுமே.

**Our website: www.mangayarmalaronline.com**

◆ ஐய்யர், வடமாள், லோகித கோத்திரம், பூசம், 20.10.1981, 5'11", M.S. M.B.A Finance, MNC, கம்ப்யூட்டர் கம்பெனி, நல்ல குடும்பப் பாங்கான படித்த பெண் தேவை. உட்பிரிவு சம்மதம். போன்:23764411 - 9940355386. பெட்டி எண். 16943

◆ **Vadamal, Vadoolam, Thiruva thirai-4, June 83, BE (EEE), Test Analyst, Infosys, Chennai, Own house, only son, seeks bride. Sub-sect no bar. Ramakrishnan: 9677221389, 044-43054493, 00968-92845400, email:ramki546@hotmail.com, rvijiram2003@yahoo.com Box No. 16944**

◆◆ **Iyer, Vadama, Naidrupa-kashyapa, Punarvasu-II, 40/180/25,000, very fair, very handsome, B.com, employed in Indian overseas Bank, seeks employed/unemployed bride. Sub-sect no bar. Cell: 94424-24512. Box No. 16945**

◆ **Iyer, Brahacharanam, Shadamarshanam, Kettai (1), Apl 75/165 cm, B.Tech (I.I.T) MBA (I.I.M), v.fair, MNC, Chennai, 1 lac p.m, divorcee (Male child with mother), seeks um/div/widow (any Brahmin). Ramani - 044-22354891, 64558347 (or Panchapakesan 9840330531) ssmatri.com.ID1181. Box No. 16946**

◆ **Vadamal, Srivatsam, P.Poosam - 2, Sep '78/170/30,000 p.m, B.Com + Compr. Sakthi Sugars Erode (own house at Chennai, Erode) native Tirunelveli J.S.Sivasubramanian, 044-24896237 or Panchapakesan 9840330531. www.ssmatri.com ID91848. Box No. 16947**

◆ **Brahacharanam, Gouthama, Visagam (4), Sep '81/162 cm/70,000 p.m, B.E (MBA), Team Head EDS (Unit of H.P) own house seeks Iyer Bride, Job optional, Ganapathi - 044.26574128 or 9940241967 (or Panchapakesan 9840330531. www.ssmatri.com ID 92859. Box No. 16948**

◆ **Vadamal, Athreya, Uthradam (2), May '81/185/60,000 p.m, B.Sc, Area Manager, New Delhi, Narayana swami, Jamshedpur, 0657-3201737, 09810674957 or Panchapakesan 9840330531 web:ssmatri.com ID 92252 Box No. 16949**

◆ **Brahacharanam, Kausigam, Pooram, Nov '72/175/45,000 p.m, DME, GDMM, (BE Mech), Caterpillar, Chennai, divorcee issueless, briefly married seeks Iyer Bride, unmarried, divorcee or widow. K.Balasubramanian - 9445231267 or Panchapakesan 9840330531 ssmatri.com ID1256. Box No. 16950**

◆ **Vadamal Athreya Maham (3), B.Com, GNIIT, Senior Executive, Standard Chartered Bank, Singapore. July 80/168/3.5 lac p.m, Thyagarajan, 044-23766766, or Panchapakesan 9840330531 ssmatri.com ID91164 Box No. 16951**

◆ Iyer, Brahacharanam, Koundinyam, Thiruvadirai (4), Dec '79/173/2.5 lac p.m, Infosys, MBA (Fin), MBA (Mkg), Dubai Permanent Resident. Balasubramanian, 080-23331744, 09448376028 (or Panchapakesan 9840330531) ssmatri.com ID91264. Box No.16952

◆ Iyer, Ashtasahasram, Vadoolam, 32/5.11', C.A., ICWA, ACS, working MNC, 12 L, p.a, having own house, seeks homely educated, employed/unemployed girl. Subsect no bar. Ph: 9884398109,24511943. Box No. 16953

◆ North Arcot Iyer, Vadama, Kousikam, Moolam -2, November 1978, 170 cm, M.Sc (Computer Technology), MBA, Chennai, MNC at B'lore, 700,000 p.a elder sister married at DOHA Elder Brother married at Dubai, seeks professional graduate bride. Phone No. 24529311. Box No. 16954

◆ Iyer, Brahacharanam, Kasyapa Visakam - 4, 35/173/B.Com/50,000 p.m, Specialist Taxation in MNC, fair, Own house in Bangalore seeks suitable bride. Ph: 09611105445, niranjanb@rediffmail.com N.Balasubramanian, 220 'B', I 'N' Block, Rajaji Nagar, Bangalore - 560010.

◆ Iyer, Brahacharanam, Sankrithi, Moolam I, 24.4.1981, 175 cm, MA, DPMMT, Engineer, MNC, 3.32 lacs/a, own house Enathur, seeks DIP, UG, P.G, employed, unemployed girl, any subsect. Contact. 044-23721923, 9840601287, S.Sivarama Krishnan, C/o. K.Subramanian, 167A, Jain Eiffel Garden, Arcot Road, Vadapalani, Chennai - 26

◆◆ ஐயர், பிரஹசரணம், ஆத்ரேய, மகம், 1978, 5.6', B.Com (M.Com), Rs.65,000/-p.m., Muscatல் பணிபுரியும் வரனுக்கு பெண் தேவை. V.Srinivasan, S4, C Block, Mahaveer Apartments, 4, East Coast Road, Tiruvanmiyur, Chennai - 600041, 044-24426802

◆ Thenkalai, Bharadwajam, Bharani (3), 34/170/27,000, B.Com, PGDCA, Shorthand, Type (E), Higher, Asst.Manager (O) Sundaram Finance, Chennai, Own Flat seeks suitable girl. Sub-sect no bar. Simple marriage. V. Raghavachari, No.7 Shaw wallace Colony, Chitlapakkam, Chennai-64. Ph: 9840608147

◆ Wanted any Brahmin bride upto 40 years for Tamil Iyer, Vadamal, Naidruvakasyapa, Aswini 1967, 170 cms, B.Sc, (Electronics), MBA employed Mumbai Sudha Jadhagam, Rs.50,000/- p.m, delay in marriage horoscope not matching for the bride's party. Contact flat 21, Anuradha Complex, Bhau Patil Road, Kirkee, Pune 411020, Ph: 02025818702, 9823250859, 98900-01857

◆◆ Kannada Brahmin, Bharathwaja, Revathy, 180 cms, 4.7.1983, fair, B.E, working in MNC, 8 lakhs p.a, owns flat seeks good looking, well educated, decent family any Brahmin girl, preferably employed. Contact Mrs. Savithiri, F-2. 'B' Block, KGEYES Apoorva, 123, Panchayat Road, Nolambur, Chennai - 600107, Ph: 044-26530454, 9962818479

◆ பிரஹசரணம், ஆத்ரேயம், சித்திரை-4, ஜனவரி '78, B.Sc (MCA), Rs.60,000/- Verizon, Chennai மணமகனுக்கு பட்டதாரி சென்னையில் வேலையிலுள்ள மணமகள் தேவை. உட்பிரிவுகள் சம்மதம். Raman, RI-14, Bharathi Street, Radha Nagar, Chromepet, Chennai- 44, 9884083232, ssmatri.com. ID91859

◆◆ Vadamal, Kowsigam, Pooram, 37/165/35,000, M.Com, M.B.A, MNC, Chennai seeks educated girl. Demands, commitments nil. Subsect no bar. Contact: Ph:9442391829. Swaminathan, 5. Arul Nagar, Chennai salai, Kumbakonam - 612002

◆ Alliance for Iyer Groom, Srivatsa, Moolam, 37, 180 cm, Software proffessional working in Dubai. Reply to Jyoti, 35, Naicker New Street, Madurai - 625001, Ph: 9487730531

## மணமகன் தேவை

◆ ஐயர், வடமாள், பாரத்வாஜ கோத்ரம், பூராடம், நவம்பர் '81, 5.1', MCA, தனியார் வங்கியில் நிரந்தர பணியில் உள்ள வரனுக்கு, நன்கு படித்த, நிரந்தர பணியில் உள்ள, மணமகன் தேவை. (வயது 33க்குள்) S. நாராயணசாமி, செல்: 94877 58409. பெட்டி எண். 20721

◆ Iyer, Brahacharanam, Kousigam, Revathi, 43, Height 5', B.com, MA, BEd (Hindi) seeks qualified groom upto 46 Govt/Private with clean habits. Contact: 04259-236688. Box No. 20722

◆ Vadama, Poorattadhi, Kumbha Rasi, BE, Software Developer, 25 yrs Girl, seeks Non Kousika Groom 27 to 29 yrs. BE/ME residing at Pune. Subsect no bar. (O)9850490079, (R) 020-27420778. Box No. 20723

◆ Wanted Brahmin Iyer boy well qualified above or equilant to M.Com. working in Mumbai, Bangalore or Pune with age diff of one to three years for Iyer, Vadamal, Kaushikam, Aayilyam-Ist padam, 25th Nov '75, 158 cm, M.Com, NIIT, 2 yrs employed as consultant in MNC Mumbai. Box No. 20724

◆ Tamil Iyer, Vadamal, Srivatsam, Swathi, August 1984, 5.5', B.E (Computer Science), working in IBM, Bangalore seeks professionally qualified well placed Iyer groom with clean habits, age difference 3 to 6 years. R.Sreedharan, 080-23542875, 09449976536 TM ID M1772670. Box No. 20725

◆◆ Legal Divorcee Reddiar, Vegetarian, 33/165/MCA, Slim, fair, SWE, USA, Can relocate. Within a year of marriage divorced in Nov.2008, Innocent, issueless. Parents seek professionally Qualified issueless, Divorcee/unmarried Vegetarian groom. Brahmins may also respond. Age upto 38, send BHP. sriganesha1@yahoo.com. Box No. 20726

◆ ஐயர், வடமாள், பாரத்வாஜம், அஸ்வினி, 1982, 5'4'', B.E, MNC, Rs.60,000/- மாத சம்பளம் பெண்ணுக்கு சென்னையில் வேலையிலுள்ள

**ஆகஸ்ட் 2010 மாத இதழுக்கான திருமண மலர் விளம்பரங்கள் எமது அலுவலகத்திற்கு வந்து சேர வேண்டிய கடைசித் தேதி : 5.7.2010**

29-30 வயதிலுள்ள தகுந்த மணமகன் தேவை. போன்: 044-24723791 செல்: 9789929813. பெட்டி எண். 20727

◆ Iyer, Vathima, Haritham, Sathayam, 26 yrs, 5'2", M.Com, domestically trained good looking employed girl in a private firm at Chennai seeks groom upto 30, graduate employed. Subsect no bar. Contact 9176918065. 044-24740081. Box No. 20728

◆ ஐயர், வடமாள், கௌண்டின்யம், திருவோணம், (2.6.1972), 5'0, M.Sc., M.Phil படித்து, வேலை பார்க்கும் issueless Divorcee பெண்ணுக்கு வரன் தேவை. வயது வரம்பு 41க்குள்ளும் உள்ளூரில் வேலை பார்க்கும் Divorcee பையன்கள் தேவை. (issueless) உட்பிரிவு சம்மதம். பெட்டி எண். 20729

◆ ஐயர், ராதீத்ர கோத்ரம், பூராடம், தனுர் ராசி, 1988, பி.காம் படித்த பெண்ணிற்கு பிராமணர் குடும்பத்தைச் சேர்ந்த பட்டதாரி (அ) இஞ்சினியர் பங்களூர்/ பாம்பேயில் பணிபுரியும் மணமகன் தேவை. பெட்டி எண். 20730

◆ கன்னட மாத்வா, ஆறுவேலு-சௌனக கோத்ரம், திருவோணம், மகரம், 05,10,84/5.4', M.B.A, C.A. Inter-doing articleship பெண்ணுக்கு இதே வகுப்பைச் சேர்ந்த சென்னையில் பணிபுரியும் மணமகன் தேவை. தொலைபேசி எண் 044-25521785, 9176056687. பெட்டி எண். 20731

◆ Tamil Iyer, Vadamal, Koundinyam, Makam 3 - 36/160, BE.MS, HIB, Hardware Enggr, California, high salary, requires professional with Broad Mind, clean habits from Bay Area. Mental compatibility only. email: tsrajaraman@gmail.com (044) 22336435. Box No. 20732

◆ Iyer, Athreya, Brahacharanam, Pooram 2, Nov.81, 171, well built, BE, MNC, 9 lacs seeks bridegroom, 29-32, PG, above 9 lacs. After viewing TM ID M1575493/ssmatri 83797/81 and only If OK contact S.Jeyaraman, 044-23775831, 09940138585, sjr1946@gmail.com. Box No.20733

◆ Vadamal, Bharatwajam, Thiruvonam, Sep '85, B.E, Diploma in Journalism, Times of India, Chennai, own house, girl seeks bridegroom. Sub-sect no bar. Sriram, 98431-20023, 0461-2320023, 0461-2322361. email: sriramauditor@gmail.com Box No. 20734

◆ Iyengar, Vadagalai, Bharadwajam, Ayilyam, 35/165 software professional, innocent issueless legal divorcee seeks well qualified employed groom preferably without issues. Contact 9962091243. Box No. 20735

◆ Vadamal Srivatsam, Revathy (4), Sep '77/160/v.fair, B.E (ECE, MES (Doing Phd), E Learning coordinator Sydney, Australian citizen seeks any Brahmin well - settled profl in Australia/willing to relocate. Nagarajan - 044-24614419. (or Panchapakesan 9840330531) ssmatri.com ID84291 Box No. 20736

◆ Vadamal Vishnu Virthangeerasa, Poosam-4, June 84/160/35,000 p.m, B.E (CS), TCS, Chennai seeks Iyer Professional, Chennai/Bangalore. Subramaniam 044-22313457, 9444003457, (or Panchapakesan 9840330531) ssmatri.com ID 84175. Box No. 20737

◆ Vadamal, Koundinyam, Kruthigai (3), July 84/155/v.fair, simple pleasing B.E (own family business), well-to-do Chennai seeks very well-placed Iyer groom (Vadamal/ Brahacharanam), Chennai only - 9840330531 - web:www. ssmatri. com ID84541. Box No. 20738

◆ Iyer, Astasahasram, Bharat wajam, Thiruvadhirai, Oct 85, 5.1', B.Tech, 30,000 in Hexaware technology, Chennai, girl seeks suitable groom. 1) 9952528522 2)97893-47791 Web:www.ssmatri.com ID84977/85. Box No. 20739

◆ Iyer, Kasyapa, Avittam, 29.08.1985, 165 cms, fair, B.Com, PGDCA seeks well qualified, well placed groom, below 31 yrs, Sampoornavalli, TC 42/137(2), CLRA, 55A, Cheppil Lane, Sreevaraham, Manacaud PO, Trivandrum - 695009, Ph: 09847736223.

◆ ஐயர், வடமாள், ஸ்ரீவத்சம், ஆயில்யம், கடக ராசி, 25/145 செ.மீ, அழகான மணமகளுக்கு நல்ல குணமுள்ள மணமகன் தேவை.P.S. அனந்தராமன், நெ.14, தேவிஜி காலனி, திருப்பூர் 641601, போன்: 2235314, 99445-22267

◆ தெலுங்கு பிராமணர், வெலநாடு, பாரத்வாஜம், பூரம், 21, 158 செ.மீ, அழகான, B.E (Final) எழுதியுள்ள ஒரே பெண்ணுக்கு நல்ல வேலையில் உள்ள மணமகன் தேவை. P.Srinivasan, No.3&4, G Flat, First Floor, Kumarasamy Avenue, Kanchipuram 631501, Cell: 9840851893

◆ Iyer, Vadamal, Haritha Gothram, Uthiradam, B.Com, CA., Inter Passed, 20,000/p.m, 28 years, working in leading MNC, seeks suitable groom. R. Vaidhyanathan, Agraharam, Olugucheri, Lower Anaicut (p.o), Kumbakonam Taluk. Pin: 612502 Ph: 9788524957,0435-2458024

**விளம்பரதாரர்களின் கவனத்திற்கு...**

* தபால் மூலம் விளம்பரம் அனுப்பும் விளம்பரதாரர்கள், தங்கள் பெயர், முகவரி, தொலைபேசி எண் மற்றும் விளம்பர வாசகங்களை தெளிவாகப் புரியும்படி எழுதி, அதன் கீழ் கையொப்பமிட்டு அனுப்பும்படி கேட்டுக் கொள்கிறோம்.

* பெட்டி எண் விளம்பரங்களுக்கு வரும் கடிதங்கள், அந்தந்த பெட்டி எண் விளம்பரதாரர்களின் விலாசங்களுக்கு 15 நாட்களுக்கு ஒருமுறை வீதம், 3 தவணைகளில் அனுப்பப்படுகிறது. அவற்றிற்கு பதில் எழுதுவது/எழுதாமல் இருப்பது, அந்தந்த விளம்பரதாரரின் விருப்பமே. இதில் நாங்கள் தலையிட இயலாது.




# காலத்துக்கேற்ற விளையாட்டு!

எனது தோழி கௌசியின் குடும்பத்தில் நடந்த விழாவுக்குச் சென்றிருந்தேன். விழா முடிந்ததும் எப்பொழுதும் விளையாடும் அந்தாக்ஷரிக்குப் பதிலாக வேறு விதமான விளையாட்டை விளையாடினோம். அவரவர் வேலைக்கு ஏற்றாற்போல பொருத்தமான செல்ஃபோன் ரிங்டோனை நாம் யோசித்துச் சொல்ல வேண்டும் என்பதே தரப்பட்ட சவால்!

என் தோழி ''டாக்டருக்கான ரிங்டோன் என்னவாக இருக்கலாம்?'' என்றதும், உடனே நான் 'நலந்தானா? நலந்தானா? உடலும் உள்ளமும் நலந்தானா? என்றேன். மற்றொரு 'தோழி ஹலோ, ஹலோ, சுகமா?' என்றார். அனைவரும் ரசித்து கைதட்டினர்.

ஆம்ஸ்ட்ராங் என்றதும், ''அந்த நிலாவைத்தான் நான் கையில பிடிச்சேன்', 'சந்திரனைக் காணாமல் அல்லி முகம் மலருமா?', 'நிலவைப் பார்த்து வானம் சொன்னது, தொடாதே' என்று பலரும் பாடி திக்கு முக்கு ஆட வைத்தனர்.

கல்யாண தரகருக்கு, ''கல்யாண மாலை கொண்டாடும் பெண்ணே!', 'யாருக்கு மாப்பிள்ளை யாரோ', 'யாரோ, யாரோடி உன்னோட புருஷன்', 'கல்யாண நாள் பார்க்கச் சொல்லலாமா?' என்று பல வயதினரும் பாடி அசத்திவிட்டனர்.

வானிலை அறிவிப்பாளருக்கு, ''அடடா, அடடா, அட மழைடா', 'துளி, துளி, துளி, துளி, மழைத்துளி' 'மழை வருது, மழை வருது குடை கொண்டு வா', 'என்னைக் கொஞ்சம் கொஞ்ச வா மழையே' என பாடி மகிழ்ந்தனர். காலத்துக்கேற்ப கலகலப்பான விளையாட்டை நீங்களும் விளையாடி மகிழலாமே!

- பானு பெரியதம்பி, சேலம்



இட்லிக்கு மாவு அரைக்கும்போது, உளுத்தம் பருப்பில் இரண்டு ஆமணக்கு விதை (கொட்டமுத்து) சேர்த்து அரைத்தால் இட்லி மல்லிப் பூ போல் இருக்கும்.

- ஆர். சுபா, ஈரோடு

தங்கள் குழந்தைகளின் பிறந்தநாளைக் கொண்டாட விரும்பும் பெற்றோர்கள், வசதியற்ற குழந்தைகளைக் கடைக்கு அழைத்துச் சென்று அவர்கள் விரும்பும் ஒரு பொருளை (அது ஆடையோ, விளையாட்டுப் பொருளோ, புத்தகமோ) வாங்கிக் கொடுங்கள். அந்தப் பிஞ்சு குழந்தையின் முகத்தில் தெரியும் சந்தோஷம், உங்களுக்கு நூறு பிறந்தநாள் விழா கொண்டாடிய சந்தோஷத்தைத் தரும்.

- அனுபமா ராம், மங்களூர்

பென்சில், காகிதம் முதலிய பொருள்களை சரியாக (அளவாகவும்) பயன்படுத்துவோம். இவற்றைச் செய்ய ஏராளமான மரங்கள் வெட்டப்படுவதை எடுத்துச் சொல்லி குழந்தைகளுக்கு நாம்தான் விழிப்புணர்வை ஊட்ட வேண்டும்.

- ஆர். நாகம்மாள், ஈரோடு

தலைக்கு மெஹந்தி, ஹேர் டை போடும்போது காது மேல்புறமும், முன் நெற்றியிலும் வேஸலின் தடவி, பின்பு டை வகையறாக்களைப் போட வேண்டும். அப்போதுதான் கறை, காதிலோ, நெற்றி ஓரத்திலோ படியாமல் இருக்கும்.

- கிரிஜா, சென்னை



உளுத்தம் பருப்பை இலேசாக வறுத்து, மிக்ஸியில் பவுடர் ஆக்கவும். அதில் தயிர் சேர்க்கவும். பச்சை மிளகாய், கொத்து மல்லி தழை, கடுகு தாளித்து டாங்கர் பச்சடியாகத் தயாரித்து, வாரத்தில் இருமுறை உணவில் சேர்த்தால் உடல் ஆரோக்கியம் பெறும்.

- ஆர். மல்லிகா, பல்லடம்

பாசிப் பயறு, கடலைப் பயறு, உளுத்தம் பயறு போன்றவற்றைவிட பொட்டுக் கடலை மாவை பயன்படுத்தினால் முறுக்கு, மொறு மொறுப்பாக இருக்கும்.

- தமிழ்செல்வம், ஆரணி

உரக்கப் பாடுவதினாலும், வாசிப்பதினாலும் நம் உடலில் உள்ள குரல் உறுப்புகள் பலமடையும். இதனால் மார்புப் பகுதி விரிவடைந்து, சுவாசப் பைகள் சுருங்கி விரிந்து நல்ல ஆரோக்கியம் கிடைக்கும்.

- ராதா வெங்கடேசன், சென்னை

இமிட்டேஷன் நகைகளை மர டப்பாவில் போட்டு வைத்தால் என்றும் புதிது போலவே மின்னும்.

- விமலா பத்மநாபன், சென்னை

## இவை எல்லாமே ஆஹா 50 தான்!






''ஏண்டா காரை
வேகமா ஓட்டுறே?''
''கார்ல பிரேக் இல்லப்பா...
ஆக்ஸிடென்ட் ஆகறதுக்குள்ள வீட்டுக்குப்
போயிடலாம்னு''
''அப்ப சரி இன்னும் ஸ்பீடா போ...''

**- ரிஸ்வானா, முதலாமாண்டு, பி.சி.ஏ, இதயா கலை மற்றும் அறிவியல் கல்லூரி, கும்பகோணம்**



# எண்ணிப் பார்!

மனிதா!
மதச் சண்டையிலே
மண்டையை உடைக்கின்றாய்!
தண்ணீர்ச் சண்டையிலே
செந்நீரைச் சிந்துகின்றாய்!
எல்லைச் சண்டையிலே
ஏவுகணையை ஏவுகின்றாய்!
உதிரத்தை உறிஞ்சி
உயிர்களைக் கொல்கின்றாய்! - இதனால்
உனக்கென்ன கிடைத்தது?
எண்ணிப் பார்!
சண்டையை நிறுத்து!
சமாதானத்தை நிலைநாட்டு
உண்மை புரியும்
சந்தோஷம் உன் வசமாகும்!

**- அ. அனிதா, முதலாம் ஆண்டு, எம். எஸ்ஸி, ஐ.டி. - இ.காம், விவேகானந்தா கல்லூரி, அகஸ்தீஸ்வரம்**

நமது உடலில்
அதிகமாக, விரைவாக
வேலை செய்யும்
உறுப்பு, மூளை.
வருடத்துக்கு 365 நாளும்
24 மணி நேரம் என வேலை
செய்கிறது. ஆனால் தேர்வு
அறைக்குள் நுழைந்ததும் வேலை
செய்ய மாட்டேங்கிறது. துரோகி!
*(கொஞ்சம்கூட நல்லால்ல... சொல்லிட்டேன்!)*

**- பிருந்தா, இரண்டாமாண்டு பிகாம்., வைஷ்ணவா கல்லூரி, சென்னை**



உன்னை மகிழ்விக்கும்
வார்த்தைகளைவிட,
உன்னை சிந்திக்க
வைக்கும்
வார்த்தைகளைக் கேள்;
அது, உன் வாழ்க்கையை
உயர்த்தும்!
*(ரொம்ப உயர்த்துட்டீங்க)*

**- ஜி. அபிநயா, பி.காம் இரண்டாமாண்டு, ஸ்ரீமதி இந்திராகாந்தி கல்லூரி, திருச்சி - 2**

# மெய்யாலுமே புல்லரிக்குதுபா...




★ அடிக்கடி பார்க்கின்ற
யாரையும் நேசிக்க முடியாது
நேசிக்கின்ற யாரையும்
அடிக்கடி பார்க்க முடியாது.



★ என் மரணம்
கூட உனக்குத்
தெரியாமல்
பார்த்துக் கொள்வேன்
உன் கண்கள்
கலங்கக் கூடாது
என்பதற்காக...
*(மெய்யாலுமே
புல்லரிக்குதுபா...)*

- கவிதா, பி.எஸ்ஸி, மூன்றாமாண்டு
கம்பன் கலை மற்றும் அறிவியல்
கல்லூரி, திருவண்ணாமலை



தவறு செய்யாமலேயே தண்டனை
அநீதியான உலகம் - இது
அழிக்கப்பட்ட சிசுவின் கதறல்

-டி.பிரவீணா, எம்.ஏ.தமிழ், முதலா
மாண்டு, சென்னை பல்கலைக்கழகம்

''நான் பாடம் நடத்துனதுல இருந்து நீ என்ன தெரிஞ்சுக்கிட்ட?''

''ஒரு நல்ல டியூஷன் மாஸ்டர்கிட்ட டியூஷன் போனாதான்... இந்த வருஷம் பாஸ் பண்ண முடியும்னு தெரிஞ்சுக்கிட்டேன் சார்.''

- என்.கோபிநாத், பி.எட்.,
கொங்குநாடு கல்வியல் கல்லூரி, சேலம்





''உன்னையும் என்னையும்
வேறுபடுத்தட்டா''
''எப்படி?''
''நான் - நெருப்பு
நீ - அடுப்பு
நான் - ஆகாயம்
நீ - வெங்காயம்
நான் - இரும்பு
நீ - துரும்பு''
*(- சரியான குறும்பு!)*

மஹிமா,
முதலாமாண்டு, குருநானக்
கல்லூரி, சென்னை

# நட்பின் வலிமை!

நண்பன், போரில் இறந்த செய்தியைக் கேட்டதும், இதயம் 'படபட' என்று அடித்தது அந்தப் போர்வீரனுக்கு. தன் உயர் அதிகாரியிடம் சென்று போர்க்களம் செல்ல அனுமதி கேட்டான்.

''அவன் இறந்தாகிவிட்டது. நீ போய்ப் பார்ப்பதில் எந்தவித பிரயோஜனமும் இல்லை. அது மட்டுமில்லாமல் உனக்கும் ஆபத்து நேரிடலாம். அதன் பிறகு உன் இஷ்டம்'' என்றார்.

ஆனாலும், அவன் மனம் தளராமல் போர்க்களத்துக்குச் சென்று, தன் நண்பனைக் கண்டுபிடித்து, மருத்துவ முகாமுக்குக் கொண்டு வந்து சேர்த்தான். அப்பொழுது அங்கு வந்த உயர் அதிகாரி, ''நான்தான் சொன்னேனே; உன் நண்பன் இறந்துவிட்டான் என்று! இப்பொழுது பார், உனக்கும் காயம் ஏற்பட்டிருக்கிறது'' என்றார்.

உடனே போர் வீரன், ''சார், அவனை நான் பார்க்கச் சென்றபோது அவன் உயிருடன் இருந்தான். என்னைப் பார்த்து, ''எனக்குத் தெரியும். நீ வருவாய்'' என்று சொல்லி விட்டுத்தான் கண்களை மூடினான். இந்தத் திருப்தி எனக்குப் போதும்!'' என்றான்.

-இன்டர்நெட்டிலிருந்து- பி.கே. அருணா, மூன்றாமாண்டு பி.ஈ., பண்ணாரி அம்மன் இன்ஸ்டிட்டியூட் ஆஃப் டெக்னாலஜி, சத்யமங்கலம்

''கல்யாணத்துக்கு முன்னாடி மாப்பிள்ளைய எதுக்கு கார்லயும், குதிரையிலேயும் ஊர்வலமா ஏத்தி விடுறாங்க தெரியுமா?''

''.....''

''தப்பிச்சு போறதுக்கு கடைசியா ஒரு சான்ஸ் தர்றாங்க!''

- என். காயத்ரி, இரண்டாமாண்டு, பி.சி.ஏ, ஷண்முகா இன்டஸ்ட்ரீஸ் கலை மற்றும் அறிவியல் கல்லூரி, திருவண்ணாமலை



தேவையான பொருள்கள்

காராசேவ் - 200 கிராம், பச்சை மிளகாய் - 5, தேங்காய் - ½ மூடி, வெங்காயம், தக்காளி - தலா 2, இஞ்சி - ஒரு சிறிய துண்டு, பூண்டு - 4 பல், சோம்பு - அரை டீஸ்பூன், மிளகாய்த்தூள் - 5 டீஸ்பூன், கொத்துமல்லி, பட்டை, லவங்கம், பிரிஞ்சி இலை, உப்பு, எண்ணெய், - தேவையான அளவு





# காராசேவ் குருமா!



என். மனோஜ்

செய்முறை

வெங்காயம், தக்காளி, பச்சை மிளகாய், இஞ்சி, பூண்டுடன், சோம்பு சேர்த்து மிக்ஸியில் அரைத்துக் கொள்ளவும். தேவையான அளவு எண்ணெய் ஊற்றி பட்டை, லவங்கம் தாளித்து, அரைத்த விழுதை அதில் போட்டு நன்றாக வதக்கவும். பிறகு மிளகாய்த்தூள், உப்பு, அரைத்த தேங்காய் விழுதைச் சேர்த்து, தண்ணீர் ஊற்றி நன்றாகக் கொதிக்க வைக்கவும். பிறகு காராசேவை போட்டு, ஒரு கொதி வந்தவுடன் இறக்கி, கொத்துமல்லியைத் தூவவும். இந்த காராசேவ் குருமா. தோசை, சப்பாத்திக்கு தொட்டுக் கொள்ள நன்றாக இருக்கும். இதேமுறையில் காரா பூந்தி சேர்த்தும் செய்யலாம்.

-என். மனோஜ், எஸ்.ஆர்.எம் கேட்டரிங் கல்லூரி, காட்டாங்குளத்தூர், சென்னை

---

★ அவள் நேற்று இரவு மட்டும்
நீண்ட நேரம் படித்தாள்.
தேர்வு நேரம் என்பதால் அல்ல...
பௌர்ணமி என்பதால்...

- வி.பத்மப்ரியா, எம்.எஸ்ஸி, (கணிதம்)
திரு.வி.க. அரசு கலைக் கல்லூரி, திருவாரூர்



# போட்டிக்குத் தயாரா? (முடிவுகள்)



## ரூ.100/- பரிசு பெறும் மாணாக்கர்கள்

மங்கையர்மலர் மே இதழில் வெளியான 'போட்டிக்குத் தயாரா?'- கேள்விகளுக்கான சரியான விடைகள்

**நீதிபதி ஏ.ஆர்.லட்சுமணன், மொபைல் ஃபோன், பி.ஜே.பி, கட்லா, ஜெயரத்தினே**

பரிசு பெறுபவர்கள்:

1. ர.சுமித்ரா, கணிதம், பி.எஸ்ஸி முதலாமாண்டு, எத்திராஜ் கல்லூரி, சென்னை
2. ஜி.ஸ்வேதா கணேசன், பி.ஈ. முதலாமாண்டு, பூஜ்யஸ்ரீ மாதவன்ஜி சயின்ஸ் அண்டு டெக்னாலஜி, ஹைதராபாத்
3. ப. இந்திரா, பி.காம் இரண்டாமாண்டு, ஸ்ரீ நல்லமணி யாதவா கலை மற்றும் அறிவியல் கல்லூரி, கொடிக்குறிச்சி.
4. கே.கிருஷ்ணப்ரியா, பி.டெக் மூன்றாமாண்டு, ராஜீவ் காந்தி பொறியியல் கல்லூரி, புதுச்சேரி.
5. என்.ஆர்த்தி, எம்.பி.பி.எஸ் இறுதியாண்டு, ஸ்டான்லி மருத்துவக் கல்லூரி, சென்னை



யூத் எடிஷன் பக்கங்கள்

Gurunadhar Charanam

**PRASHANTI**™

House of Silk Cottons

வழங்கும்
ரூ.500/- மதிப்புள்ள
சல்வார்செட்.
ஜூன் மாத
'ஸ்டூடன்ட்ஸ் ஸ்பெஷல்'
இதழுக்கு மிக மிக
அதிகமாக எஸ்.எம்.எஸ்
அனுப்பிய
ரிஸ்வானா →
← மஹிமாவுக்கு
வழங்கப்படுகிறது.
வாழ்த்துகள்.

(ஆர்)

ஸ்டூடன்ட்ஸ்
தொடர்ந்து எஸ்.எம்.எஸ்.
(97898 72534)
அனுப்பலாம்.

# எஸ்.எம்.எஸ் ராணிகள்!

# நூறு ஆண்டுகள் அனுபவம் வாய்ந்த
# "அஜினோமோட்டோ"
## கம்பெனியின் உத்திரவாதம்

அஜினோமோட்டோ என பொதுவாக கருதப்படும் உணவின் சுவை கூட்டும் பொருளான மோனோசோடியம் குளுட்டமேட்(MSG)யை நூறு ஆண்டுகளாக தயாரித்து வரும் "அஜினோமோட்டோ" என்ற ஜப்பானிய கம்பெனியின் பதிவு பெற்ற பிராண்டு பெயர் தான் "அஜி–னோ–மோட்டோ".

"அஜினோமோட்டோ" என்னும் MSG குறித்து இந்தியாவில் பல வதந்திகள் உலவினாலும், விஞ்ஞான பூர்வமாக இத்தகைய வதந்திகள் இன்று வரை எந்தவித ஆதாரங்களுடனும் நிருபிக்கப்படவில்லை.

1970ல் அமெரிக்காவில் MSG குறித்த சந்தேகங்களை தீர்க்க, நூற்றுக்கும் மேற்பட்ட விஞ்ஞான ஆராய்ச்சிகளை மேற்கொண்ட பிறகு USFDA, MSG யை சர்க்கரை, உப்பு, மிளகு, பேக்கிங் பவுடர் போன்று "பொதுவான பாதுகாப்பான உணவுப் பொருள்" GRAS என்ற அங்கீகாரத்தை வழங்கியுள்ளது. மேலும் WHO, FAO இணைந்து உருவாக்கிய JECFA கழகம் MSG ஒரு "பாதுகாப்பான உணவுப் பொருள்" என அறிவித்துள்ளது.

"அஜினோமோட்டோ" 1ரூ, 2ரூ, 5ரூ, 15ரூ, 500கிராம் என்ற பேக் செய்யப்பட்ட பாக்கெட்டுகளில் மட்டுமே கிடைக்கும். "அஜினோமோட்டோ" என்று கேட்டவுடன் கடைகளில் பொட்டலங்களில் கட்டி தரப்படும் தரமற்ற பொருட்களையோ அல்லது வேறு பிராண்டுகளில் கிடைக்கும் பொருளையோ வாங்கி ஏமாற வேண்டாம். ஏனென்றால் அவை கலப்படம் செய்யப்பட்டிருக்கலாம். உடல் நலனுக்கு தீங்கு விளைவிக்கலாம். "அஜினோமோட்டோ" வாங்கும்போது கீழ்கண்ட **"சிகப்பு கிண்ண"** முத்திரை உள்ளதா என அவசியம் பார்த்து வாங்கவும்.

**"சிகப்பு கிண்ண முத்திரை"** கொண்ட பாக்கெட்டுகளில் மட்டுமே கிடைக்கும் ஒரிஜனல் "அஜினோமோட்டோ"வை வாங்கி நம்பிக்கையுடன் உபயோகித்து உணவின் சுவையை மேலும் அதிகரித்து உண்ணுங்கள்.



Rs.1 Rs.2 Rs.5 Rs.15

**உங்கள் கவனத்திற்கு:** இளம் வயதினருக்கும், சிறுவர்களுக்கும் மிகவும் பிடித்த சிப்ஸ், ஸ்நாக் வகைகள் எண்ணெய்யில் பொரித்து, சிறிது தூக்கலாக உப்பு கலக்கப்பட்டது. இதய நோய்கள், உடல் பருமன் ஏற்படுவதற்கு இவை இரண்டுமே முக்கிய காரணிகள். இதை திசை திருப்ப சில கம்பெனிகள் சிப்ஸ், ஸ்நாக்ஸ், நூடுல்ஸ் போன்ற பாக்கெட்டுகளில் " NO ADDED MSG" என்று தேவையற்ற வாசகங்களை வெளியிடுவது உங்கள் கவனத்தை திசை திருப்பும் முயற்சியே. எண்ணெய் பண்டங்களை தவிர்ப்போம்! உப்பை குறைப்போம்! இதய நோய்களை தவிர்ப்போம்! உடல் பருமனை தவிர்ப்போம்!

நன்றாக சாப்பிட்டு ஆரோக்கியமாக வாழ்வோம்.

மேலும் விபரங்களுக்கு: அஜினோமோட்டோ இந்தியா பி லிட், சென்னை – 600 077. போன் – 044 – 2904 2100

## ஹாய், காலேஜ் பாய்ஸ் அண்ட் கேர்ள்ஸ்!

* சமீபத்தில் இடிந்து தரைமட்டமான ஆந்திர மாநில சிவன் கோயில் எது?

..............................................................

* 2010 - உலகக் கோப்பை கால்பந்து போட்டி எங்கு நடக்கிறது?

..............................................................

* சிங்கப்பூர் ஓபன் சூப்பர் சீரிஸ் பாட்மின்டன் தொடரில், சாம்பியன் பட்டம் பெற்ற வீராங்கனை யார்? ..............................................................

* கமல் - த்ரிஷா இணைந்து நடிக்கும் தமிழ்ப்படத்தின் பெயர் என்ன?

..............................................................

* போபால் விஷ வாயு கசிவு சம்பவத்தில், பலியானவர்கள் குடும்பங்களுக்குத் தலா எவ்வளவு பணம் நஷ்டஈடாகத் தர வேண்டும் என்று மத்திய அமைச்சரவை குழு பரிந்துரைத்துள்ளது?

..............................................................




# போட்டிக்குத் தயாரா?

கடைசித் தேதி: 15.7.2010

உங்களுக்கு நாட்டு நடப்புத் தெரியுமா? இந்தக் கேள்விகளுக்கான விடைகளை எழுதி, இந்தப் பக்கத்தை நிரப்பி அனுப்புங்க. கல்லூரி அத்தாட்சி அவசியம். சரியான விடை எழுதுபவர்களில் குலுக்கல் முறையில் தேர்வு செய்யப்பட்ட ஐந்து பேருக்கு தலா ரூ.100/- பரிசும், சான்றிதழும் உண்டு.

பெயர் :.............................. வகுப்பு : .............................. ஈ மெயில்..............................

கல்லூரி : ..............................................................

வீட்டு முகவரி : ..............................................................



✱ ஜெயம்

# உயிர் காத்த அன்னை!

என் பெயர் மரகதவல்லி. எனக்கு ஐந்து சகோதரர்கள் மற்றும் ஒரு சகோதரி. 11.05.2010 எங்கள் வாழ்க்கையில் மறக்க முடியாத நாள். ஆம் அன்றுதான் எங்கள் அன்புத் தாய் ஜெயலட்சுமி (ஜெயம்) உயிர் நீத்தார். தந்தையைப் போன்றே அவரும் தன்னுடைய, 81வது வயதில் இறைவனடி சேர்ந்தார். அறுபது ஆண்டுகளுக்கு மேல் தன்னுடைய திருமண வாழ்க்கையை, கணவருடன் சிறப்பாக நடத்தி, 'உத்தம தம்பதி'யர் என்று பெயர் பெற்றவர்.

என் சகோதரர்கள் ஐவரும் தாய் இறந்த நாளிலிருந்தே, மிகவும் சிரத்தையாக, தாயின் ஈமக் கடன்களைச் செய்தார்கள். பத்தாம் நாளன்று, எங்கள் குல வழக்கப்படி, மகன், மகள், இருபாலரும் சாதப் பிண்டத்தைக் கடலில் கரைக்க வேண்டும். சரியாக பதினொன்று முப்பது மணிக்கு எங்கள் இல்லத்திலிருந்து கடற்கரை செல்ல வேன் ஏறினோம். என்ன ஆச்சரியம்! வேனின் பெயர் ஜெயம்! எங்களுக்கு துக்கம் பல மடங்கானது.

அன்று முன்தினம்தான் 'லைலா புயல்' சென்னைக் கடலைக் கடந்த நாள். கடற்கரையில் நின்று, ஒவ்வொரு பிண்டமாக கரைத்தபொழுது, எதிர்பாராத விதமாக சுமார் பத்தடி உயர அலை எங்களைத் தாக்கி, எங்கள் ஆறு பேரையும் (ஒருவர் உடல்நிலை சரியில் லாத காரணத்தால், வண்டியிலேயே அமர்ந்திருந்தார்) கவ்வியது. அனைவரும் அந்த நொடியில் இறந்தோம்; அம்மாவிடம் கலந்தோம் என்றே நினைத்தோம். ஆனால், எங்கள் தாய் கருணைக்கடல்; தன் பிள்ளைகள் தத்தளிப்பதைப் பார்த்து, அவள் மனம் தாங்குமா? சுமார் இருபது நிமிடங்கள் கடலில் போராடினோம்.

ஐந்து பேர் கடற்கரையின் ஓரமாகத் தள்ளப்பட்டார்கள். ஒவ்வொருவரும் தனித்தனியாக சுயநினைவுக்கு வந்தார்கள். ஆனால், நான் மட்டும் கடலை நோக்கித் தள்ளப்பட்டேன். அனைவரும் நான் கடலில் மிதந்த அவலத்தைக் கண்டு கதி கலங்கி நின்றார்கள்.

என்னே தாயின் கருணை! எந்த வேகமான அலை என்னை உள்ளே இழுத்ததோ, அதே அலை என்னைக் கரையில் தள்ளத் தயாரானது. இதற்குள் என்னுடைய கடைசி சகோதரர், தன் மனநிலையை ஒருநிலைப் படுத்தி என்னை வெளியே இழுத்துவிட்டார். நாங்கள் அனைவரும் என் தாயின் கருணையை எண்ணி கடற்கரையிலேயே அமர்ந்து அழுதோம்.

'செத்தும் கொடுத்தான் சீதக்காதி'ப் போல, இறந்தும் எங்கள் உயிர் காத்தாள் எங்கள் தாய். வீடு திரும்பி இந்த நிகழ்ச்சியைக் கேட்ட அனைவரும் மெய் சிலிர்த்து அழுதார்கள்.

உண்மைச் சம்பவம்

– மரகதவல்லி, சென்னை

புதிய பகுதி

உதயமாகிறது 'கைமணம் ஃபுட் ப்ராடக்ட்ஸ்.' பாரம்பர்ய முறைப்படி செய்த கைமணம் அங்காயப்பொடி மற்றும் கைமணம் மிளகாய்த் தொக்கை வாங்கி சுவைத்து மகிழ்வீராக. ஒருவர் 10 புதிய நுகர்வோரை அறிமுகம் செய்தால் பரிசு நிச்சயம். கை மணம் 'மல்டி பேக்கைப்' பெற ரூ.100/- மட்டும் மணியார்டர் செய்து பெற்றுக் கொள்ளவும். *R. Gayathri*, 1/47, South Agraharam, Kunnan Post, Puthur Viz, Sirkazhi TK, Nagapatinam Dt, 609108. Contact : 94880 04847

- நீங்க மங்கையர் மலர் வாசகியரா?
- நீங்க வீட்டிலேயே பிஸினஸ் செய்யறீங்களா?
- உங்க பிஸினஸை விரிவுபடுத்தணுமா? அப்ப உங்களுக்குத்தான இந்தப் பகுதி!

# பிஸினஸ் பஜார்!

இது போன்ற வரி விளம்பரம் செய்யுங்க... வியாபாரத்தைப் பெருக்குங்க!

விதிமுறைகள்

● நீங்கள் சொந்தமாக சுய தொழில் செய்ய வேண்டும். (உங்களது சொந்தத் தயாரிப்பாகவும், வீட்டிலேயே விற்பனை செய்வதாகவும் இருக்க வேண்டும்) ● வேலை வாய்ப்புகள் தேவை, பயிற்சி வகுப்புகள் போன்ற விளம்பரங்களுக்கு அனுமதி கிடையாது. ● முதல் 30 வார்த்தைகளுக்குள் இருந்தால் ரூபாய் 300/- அதிகப்படியான ஒவ்வொரு வார்த்தைக்கும் ரூபாய் 10/- செலுத்த வேண்டும். ● உங்களது புகைப்படம் பிரசுரிக்கப்பட மாட்டாது. ● உங்களது விளம்பரம் தமிழில் மட்டுமே இருக்க வேண்டும். ● நீங்கள் அனுப்பும் விளம்பர வரிகளைத் தேர்வு செய்து பிரசுரம் செய்வதற்கும், திருத்தி அமைப்பதற்கும் ஆசிரியருக்கு முழு உரிமை உண்டு. ● கீழே இடம் பெற்றுள்ள கூப்பனை முழுமையாகப் பூர்த்தி செய்து, உங்களது விளம்பர வாசகங்களுடன் சேர்த்து அனுப்ப வேண்டும். ● மணியார்டர், உள்ளூர் காசோலை மற்றும் டி.டி எதுவாகயிருந்தாலும் 'மங்கையர் மலர்' என்ற பெயரில் அனுப்பவும். வெளியூர் காசோலை ஏற்றுக் கொள்ளப் பட மாட்டாது. ● ஆகஸ்ட் இதழில் இடம் பெற விளம்பரம் தர வேண்டிய கடைசி நாள் 15.07.2010

பெயர்:........................................ முகவரி:........................................

..............................................................................................

ஃபோன்:........................................ ஈ.மெயில்:........................................

காசோலை / டி.டி.எண்........................................


மாதம் ஒரு
பட்டுப்புடைவை
உங்களுக்காகக்
காத்திருக்கிறது!
கல்கி (11.7.10
என்ன
பழக்கம் இது...
காலை
எழுந்தவுடன்
நானும்
சிரிச்சுக்கிட்டே
எழுதறேன்...
உங்களை
சிரிக்க
வைக்கத்தான்
எழுதறேன்...
உங்க
திருப்பு...

இதழிலிருந்து

எப்பவும்
உம்முன்னு முகத்தை
வெச்சிக்கிட்டு...

# சிரிப்பு!

மறந்துடாதீங்க!
போட்டியும் இருக்கு...
என்னோட சேர்ந்து
அரட்டையடிக்க
வாய்ப்பும் இருக்கு.

கலகலன்னு
வருது!
சும்மா
கலக்கலா
வருது!



## மங்கையர் மலர்
## அன்பு வட்டத் தோழிகளே...
## நலம்தானே!

மைக்கேல் மதன காமராஜனில் 'திருப்பூ', மகளிர் மட்டும் திரைப் படத்தில் 'ஜானகி' என்று நம் மனத்தைக் கொள்ளைக் கொண்ட நடிகை ஊர்வசியின் அனுபவங்கள் சுவையானவை.

நமது குடும்பப் பத்திரிகையான **'கல்கி'** வார இதழை தாங்கள் தொடர்ந்து படித்து, ரசிக்க வேண்டும். ம.மலர் வாசகிகளான உங்களுக்குப் பிரத்தியேகமாக கல்கி சந்தா சலுகைத் திட்டம் ஒன்று அறிவிக்கிறோம். உங்கள் சந்தா 11.07.2010 இதழிலிருந்தே தொடங்கும்.

கீழே உள்ள கூப்பனைக் கத்தரித்து உரிய டி.டி. அல்லது எம்.ஓ.வைச் சிரித்துக் கொண்டே இணைத்து அனுப்புங்கள். மகிழ்ச்சி பொங்கட்டும். வாழ்த்துகள்.

அனுஷா நடராஜன்

---

### கல்கி சிறப்புச் சந்தா

பெயர்:...............................................

முகவரி:...............................................

...............................................

...............................................

...............................பின்கோடு:...............

☎:.......................இ-மெயில்:...............

**கல்கி வார இதழ்**

ஆறுமாதம் (26 இதழ்கள்) ரூ. ~~270~~/- **ரூ.220/-**

'Kalki'என்ற பெயரில் சென்னையில் செலுத்தத்தக்க டி.டி. அல்லது எம்.ஓ. மட்டுமே ஏற்கப்படும். இச்சலுகை 15.07.2010 வரை மட்டுமே.

அனுப்பவேண்டிய முகவரி:
**சந்தாப் பிரிவு**
கல்கி வார இதழ்
கல்கி பில்டிங்க்ஸ்
47 - NP, ஜவஹர்லால் நேரு சாலை
ஈக்காடுதாங்கல், சென்னை 600032.
தொலைபேசி: 43438833
மின்னஞ்சல்: subscription@kalkiweekly.com



ஆகாய விமானத்தில் பயணம் செய்யும் போது சிலருக்கு காது வலி ஏற்படும். இவர்கள் காது வலி வராமலிருக்க ஏர்போர்ட்டில் உள்ள கடைகளிலேயே ear clip வாங்கி காதில் பொருத்திக்கொண்டால் காது வலியிருந்து தப்பிக்கலாம்.

*- யமுனா ராமசேஷன், சென்னை*

**கா**ய்கறிகளிலேயே சத்து அதிகமில்லாத காய்கறி கத்தரிக்காய்தான். எனவேதான் அதனை ஹிந்தியில் (பேகுன்) என்று சொல்கிறோம். பே என்

பஜ்ஜி செய்வதற்கு வீட்டில் மாவு இல்லையா, கவலை படாதீர்கள். கடலைப் பருப்பு ஒரு கப், உளுத்தம் பருப்பு ஒரு பிடி, அரிசி ½ கப் மூன்றையும் அரை மணி ஊற வைத்து அதில் உப்பு, மிளகாய், பெருங்காயம் சேர்த்து அரைத்து செய்யுங்கள். எண்ணெய் குடிக்காத சூப்பர் பஜ்ஜி தயார்!

- ஆர். ரங்கநாயகி, கொல்கத்தா



# இவை எல்லாமே

நால் இல்லாது; குன் என்றால் குணம் என்று அர்த்தம். எந்தவித நல்ல குணங்களும் இல்லாத காய் என்று பொருள்.

- லலிதா கிருஷ்ணன், ஜாம்ஷெட்பூர்

மாத்திரை போடும்போது 'ஓம் ஸர்வ வ்யாதி ப்ரஸமீந்யை நமஹ' என்ற சுலோகத்தைக் கூறி கடவுளை வணங்கினால், வியாதி விரைவில் குணமாகும். 'ஓம் தன்வந்திரியே நமஹ' என்றும் கூறலாம்.

- லக்ஷ்மி ஜெகதீசன், தஞ்சாவூர்

ஐஸ்க்ரீமை, பிளாஸ்டிக் அல்லது பேப்பர் அட்டைப் பெட்டிகளில் தருகிறார்கள். அதை அப்படியே குளிர்சாதன பெட்டியில் வைத்தால், மின்சாரம் தடைபடும்போது, உருகி, வடிந்து குளிர்சாதன பெட்டிதான் பாழாகும். எவர்சில்வர் டப்பாவில் மாற்றி வைத்தால் ஐஸ்க்ரீம் உருகினாலும் அதிலேயே இருக்கும்

- ர.சாந்தி ரவி, சங்கரன்கோவில்

பூலாங் கிழங்குப் பொடியை (நாட்டு மருந்துக் கடையில் கிடைக்கும்) கஸ்தூரி மஞ்சள் தூளோடு கலந்து, கை கால்களில் அழுந்தத் தேய்த்து வர, நாளடைவில் முடிகள் உதிர்ந்துவிடும். கருமை நிறம் மறைந்து முடி வளர்வதும் குறையும்.

- எஸ். சுபா, சென்னை

இஞ்சியை சிறு துண்டுகளாக நறுக்கி, கடுகு, பெருங்காயம், வெந்தயம் சேர்த்து நல்லெண்ணெயில் நன்றாக வதக்கவும். புளிக் கரைசல் சிறிது ஊற்றி நன்றாகக் கொதித்ததும், இறக்கவும். இந்த இஞ்சி ஊறுகாய் அஜீரணத்தைப் போக்கும்.

- சீதா, கொல்லம்

குக்கர் விசில் வந்து இறக்கியவுடன் அவசரமாக குக்கரை திறக்க வேண்டும் என்றால் விசில் மேல் அரைத் தம்ளர் தண்ணீர் விட்டு திறக்கவும். இதனால் முகத்தில் ஆவி அடிக்கும் விபரீதத்தைத் தவிர்க்கலாம்.

- விமலா பத்மநாபன், சென்னை



ஆஹா 50 தான்!

'வைரத்தை வைரத்தால் அறுக்க வேண்டும்' என்பது முதுமொழி. அதைப் போல, நோய்க் கிருமிகளைக் கொண்டே நோய்க்கான எதிர்ப்பு சக்தியை உடலில் ஏற்படுத்துவது என்பது மருத்துவ உலகின் இன்றைய மாபெரும் கண்டுபிடிப்பு. 225 ஆண்டுகளுக்கு முன் எட்வர்ட் ஜென்னர், லூயி பாஸ்டர் என்ற இரு விஞ்ஞானிகளின் மூளையில் தோன்றிய எண்ணமே இந்த சாதனையின் கரு. அன்றிலிருந்து இன்றுவரை தடுப்பூசிகளின் தாக்கம், வானமே எல்லையாக வளர்ந்து வருகிறது. இந்தத் துறையில் பற்பல ஆராய்ச்சிகள் நடந்துகொண்டே இருக்கின்றன.




தற்போது கண்டுபிடிக்கப்பட்டுள்ள ஒரு தடுப்பூசி, மனித குலத்துக்குக் கிடைத்துள்ள மிகப் பெரும் புதையல். அதுதான் கருப்பை வாய் (Uterine Cervix) புற்றுநோயைத் தடுக்கும் Human Papilloma Virus Vaccine.

கருப்பை வாய்ப் புற்றுநோய் ஓர் உயிர்க்கொல்லி. இந்நோயினால் பாதிக்கப் பட்டோர் எண்ணிக்கை அதிகரித்துக் கொண்டே இருக்கிறது. இந்தியாவில் மட்டும் வருடத்துக்கு 1,32,000 பெண் களுக்கு கருப்பை வாய்ப் புற்றுநோய் கண்டுபிடிக்கப்படுகிறது. ஒவ்வொரு வருடமும் சுமார் 74,000 பெண்கள் இந்த நோய்க்கு பலியாகிறார்கள் என்பது மனத்தை வருத்தும் புள்ளி விவரம்.

மனிதனைத் தாக்கி புற்றுநோயை உண்டாக்கும் பாப்பில்லோமா வைரஸ் (Oncogenic Human Papilloma Virus) என்ற கிருமி, பெண்களின் பிறப்புறுப்பில் தங்கி இந்த நோயை ஏற்படுத்துகிறது. இந்தப் புற்றுநோய் வந்தவர்களில் 99.7% பெண்களின் பிறப்புறுப்பில் இந்தக் கிருமி இருப்பதை மருத்துவ ஆய்வுகள் உறுதி செய்திருக்கின்றன.

இந்த நுண்ணுயிர்கள், கருப்பை வாயின் செல்களில் மாற்றங்களை ஏற்படுத்துகின்றன. சுமார் 10-20 வருடங்களில் இது புற்றுநோயாக உருமாறுகிறது.

கருப்பையின் வெளி வாய்ப் புற்றுநோய், பிறப்புறுப்பின் வெளிப்பகுதிப் புற்றுநோய் (Vulal And Vaginal Cancers), மலத்துவாரப் புற்று நோய், வாய்ப் புற்றுநோய், தொண்டைப் புற்றுநோய் ஆகிய நோய்களையும் இந்தக் கிருமி ஏற்படுத்துகிறது. மேலும் இந்தக் கிருமி, பிறப் புறுப்பில் முளைகளையும் (Genital Warts) ஏற்படுத்து கிறது.

# புற்று நோய்க்குப் புதிய

இந்தக் கிருமி உடலுறவால் பரவுகிறது. ஒருவனுக்கு ஒருத்தி என்ற அடிப்படையில் ஏற்படும் உடலுறவிலும் இது பரவும். ஆணுக்கு இந்தக் கிருமி இருந்தால், முதல் உடலுறவிலேயே இந்தக் கிருமி பரவிவிடும் ஆபத்து இருக்கிறது.

இந்த பாப்பில்லோமா வைரஸ் குடும்பத்தில் பல வகைகள் இருக்கின்றன. அவற்றில் 15 வகைகளே புற்று நோயினை



ஏற்படுத்துகின்றன. அதிலும் குறிப்பாக HPV 16, 18, 31, 38, 45 என்ற ஐந்து வகைக் கிருமிகளே சுமார் 95% கருப்பை வாய்ப் புற்றுநோய்க்குக் காரணம் என்று கூறப்படுகிறது.

Squamous Cell Carcinoma மற்றும் Adeno Carcinoma என்ற இரண்டு வகை புற்றுநோய்களைத் தடுப்பதற்கு தற்போது தடுப்பு ஊசி கண்டுபிடிக்கப் பட்டுள்ளது. இந்தத் தடுப்பு ஊசி மூலம் HPV நுண்ணுயிரிக்கான எதிர்ப்பு சக்தியை உடலில் ஏற்படுத்த முடியும்.

# ...தடுப்பூசி!

## டாக்டர் என். கங்கா

**எப்போது தடுப்பூசி போடலாம்?**

பத்து வயது முதல் நாற்பத்து ஐந்து வயது வரை உள்ள பெண்களுக்கு இந்தத் தடுப்பூசியைப் போடலாம். ஐம்பத்து ஐந்து வயதில் போட்டாலும் நல்ல எதிர்ப்பு சக்தி இருப்பதாக ஆய்வு முடிவுகள் கூறுகின்றன. இருப்பினும் முதல் பாலுறவுக்கு முன் தடுப்பூசி போடுவது நல்லது.

**எவ்வளவு முறை ஊசி போட வேண்டும்?**

மூன்று முறை இந்தத் தடுப்பூசியைப் போட வேண்டும். முதல் தடுப்பூசி போட்டு 1,2 மாதம் கழித்து அடுத்தத் தடுப்பூசியைப் போட வேண்டும். முதல் ஊசி போட்டு ஆறு மாதத்தில் மூன்றாம் தடுப்பூசி (0,1,6 என்ற முறை) போடலாம்.

**தடுப்பூசியின் பக்க விளைவுகள் என்ன?**

இலேசான காய்ச்சல், ஊசி

போட்ட இடத்தில் சிறிது வலி, சிவந் நிறம் ஏற்படலாம்.

### தடுப்பூசியின் விலை?

ஓர் ஊசியின் விலை மூவாயிரம் ரூபா விலை அதிகம்தான். ஆனால், கருப்பை வாய்ப் புற்றுநோய் வந்தால் நிகழு உயிரிழப்பு, சிகிச்சைச்செலவு, ம உளைச்சல், ஆகியவற்றுடன் ஒப்பிட்டு பார்த்தால் இந்தச் செலவு ஒ முதலீடுதான். குடும்பத்தின் கண்களா பெண்களுக்கு இந்த முதலீடு அவசிய தானே!

### இந்தத் தடுப்பூசி முழுமையான பா காப்பு அளிக்குமா?

இந்தத் தடுப்பூசி மூலம் 16, 18, 3



33, 45 என்ற ஐவகை HPV கிருமிகளை எதிர்க்கும் சக்தி கிடைக்கிறது. புள்ளி வி ரப்படி 90% கருப்பைவாய் புற்று நோ கள், இந்தக் கிருமிகளால்தான் ஏற்ப கின்றன. இருப்பினும் பிற்காலத்தி புதிய வகைக் கிருமிகளும் இந்தப் புற் நோயை உருவாக்கலாம் என்பதால் நா பத்து ஐந்து வயதைக் கடந்த பெண்க வருடந்தோறும் புற்றுநோய்க்கான பரிசோ தனைகளை மேற்கொள்வது அவசியம்.

எனவே, உடனடியாக உங்கள் குடும் மருத்துவரை அணுகி, இந்தத் தடுப்பூ யைப் பற்றிய விவரங்களைத் தெளிவா அறிந்து, அவரது ஆலோசனைப்படி நட கவும்.

வெளிநாட்டில் இருக்கும் மகள் வீட்டுக்குப் போகும் எல்லோரும் ஜாலியாக ஊர் சுற்றி விட்டு வருவதாக பலரும் நினைக்கிறார்கள். நான் சொல்வது சற்று வித்யாசமான கதை!



# வெளியே சொன்னால் வெட்கம்!

என் மகளுக்குப் பக்கத்து வீட்டில் தான் லலிதா இருந்தாள். அவளுடைய பிரசவ நேர உதவிக்காக தன் அம்மாவை அழைத்திருந்தாள்.

லலிதாவின் பெற்றோர்களை, இந்தியர்கள் அனைவரும் மாலையில் கூடும் ஒரு பூங்காவில் நாங்கள் சந்திப்போம்.

ஒருநாள் லலிதாவின் அம்மா வரவில்லை. லலிதாவின் அப்பா, தன் மகளுக்குக் குழந்தைப் பிறந்துவிட்டதைச் சொன்னார். குழந்தையைப் பார்க்கப் போனேன்.

லலிதாவின் அம்மா, ''எனக்கு இந்தக் கை உணர்ச்சியற்று மிகவும் கனமாக உள்ளது'' என்றார்.

அப்போது நான் ஒன்றும் சொல்லவில்லை. மறுபடி அவர்களைப் பார்க்கப் போனேன்.

அப்போது அவரது மகள் வீட்டில் இல்லை. ''ஏன் நீங்கள் பார்க்குக்கு வருவதில்லை?'' என்று கேட்டேன்.

''எப்படி முடியும்? பிள்ளையை யார் பார்த்துக் கொள்வார்கள்?'' என்றார்.

''குழந்தையைத் தள்ளு வண்டியில் வைத்துக்கொண்டு வர வேண்டியது தானே?'' என்றேன்.

''அவனை முதல் முதலாகக் கோயிலுக்குக் கொண்டு போய் விட்டுதான் வேறு எங்கும் போகணும்'' என்றார்.

மூன்று மாதங்கள் கழிந்தன. குழந்தையைப் பார்த்துவரப் போனேன்.

''குழந்தை பிறந்து மூன்றுமாதம் ஆகிவிட்டதே. குழந்தையைக் காப்பகத்தில் விடலாமே'' என்றேன்.

''நானும் என் உடல்நிலை சரியில்லை. ஊருக்குப் போகிறேன்' என்று என் மகளிடம் கேட்டேன். உங்களுக்கு என் மேல் பிரியமே இல்லை என அழுகிறாள். எங்களுக்கு இந்த சீதோஷ்ணம், சூழ்நிலை, சைவ சாப்பாடு எதுவும் பிடிக்கவில்லை. நாங்க அசைவம். மீன்தான் நிறைய சாப்பிடுவோம். என் மாப்பிள்ளையோ 'அசைவம் சமைக்கக் கூடாது. வீடு நாறிப் போகும்' என்று சொல்கிறார். என்ன செய்வது?'' என்று வருந்தினார்.

ஒரு வழியாக ஆறு மாதங்கள் முடிந்தன. ''ஊருக்குப் போகிறீர்கள்... சந்தோஷம் தானே?' என்றேன்.

''என்ன சந்தோஷம்? போனவுடன் ஹாஸ்பிடல்தான் போகணும். இங்கே டாக்டரைப் பார்க்கவே ஐந்நூறு டாலர் ஆகுமாமே'' என்றார்.

''ஆமாம். அதுக்கு மேலும் ஆகும். நீங்கள் இங்கேயே டாக்டரைப் பார்த்திருக்கலாமே என்றேன்!'' விடாப்பிடியாக.

''மருமகன் சம்மதிக்க மாட்டார். அவருக்கு வேண்டியது எங்கள் உடல் உழைப்பு மட்டுமே. அவங்க அம்மா வந்து ஆறு மாதம் வந்துவிட்டுப் போன பின், நாங்க குழந்தையைப் பார்த்துக்க மறுபடியும் வரணுமாம்!' என்றார்.

ஒரு பெண், தன் வயதான தாயை நினைக்காமல் தன் குழந்தையின் நலனை மட்டும் நினைப்பது வேடிக்கைதான்! இதையெல்லாம் வெளியே சொல்ல முடியுமா?

- எம். சரோஜா, சென்னை

அன்புமிக்க வாசக/ வாசகியருக்கு வணக்கம்!
சென்ற ஆண்டு, நமது மங்கையர் மலரில், 'லக்கி லட்டு!' என்றொரு பகுதி சக்கை
போடு போட்டது நினைவிருக்கலாம். புதிய சந்தாதாரர்களை அறிமுகப்படுத்தி
வைக்கும் அந்த நூதனத் திட்டத்துக்கு, நீங்க தந்த வரவேற்பு எங்களை மகிழ்ச்சிக்
கடலில் ஆழ்த்தியது. அதன் பலனாக, நமது வாசகர் வட்டம் மேலும் விரிவடைந்தது.
தற்போதும், அதே போன்றதொரு ஜொலிக்கும் திட்டத்துடன் உங்களை நாடி
வந்துள்ளோம். தரமும், பயனும் நிறைந்த, மதிப்பு மிக்க இந்தப் பல்சுவை இதழை,
உங்கள் மங்கையர் மலரை, நமக்குத் தெரிந்த சகோதரிகள் அனைவருமே படித்துப்
பயனடைந்து, மகிழ வேண்டும். இன்னும் பல நூறு குடும்பங்களை மங்கையர்
மலர் சென்றடைந்து, நமது அன்பு வட்டம் விரிவடைய வேண்டும் என்ற நோக்கத்
துடன் 'வைர மங்கை' என்ற திட்டம் ஒன்றை அறிமுகப்படுத்துகிறோம்.
நீங்க மங்கையர் மலரின் 'வைர மங்கை'யாக ஜொலிக்கணுமா? இதோ..

## பவள மங்கை....




✱ நீங்க மங்கையர் மலரின் தற்போதைய வாசகியா? சந்தாதாரரா? அப்ப கண்டிப்பா நீங்க இதில் பங்கேற்கலாம். நீங்கதான் எங்களுடைய 'பவள மங்கை!'

✱ பவள மங்கையான நீங்கள் ஒவ்வொருவரும், குறைந்த பட்சமாக 5ம், மற்றும் அதன் பெருக்கல் இலக்கங்களிலும் புதிய சந்தாதாரர்களை, முத்து மங்கைகளை, மங்கையர் மலருக்கு அறிமுகப்படுத்த வேண்டும்.

✱ இந்த அறிவிப்பினைத் தொடர்ந்து 191 பக்கத்தில் இடம் பெற்றுள்ள 'வைர மங்கை' சந்தா படிவத்தைப் பயன்படுத்தலாம். நகல் எடுத்தோ / மங்கையர் மலர் வெப் சைட்டிலிருந்து டவுன்லோட் செய்தோ பயன் படுத்தலாம்.

✱ உங்கள் தோழியருக்கோ, உறவினர்களுக்கோ இந்தச் சந்தா படிவத்தைத் தந்து, முழுமையாக நிரப்பச் செய்து அவர்களிடமிருந்து தலா ரூ.250/- (ஓராண்டு சந்தா) பெற்று ஒருமித்தமாக அனுப்பலாம். அல்லது நீங்களே

# வைர'மங்கை'

## -சிறப்பு சந்தா திட்டம்!*



டங்களது அன்பளிப்பாக 5 பேருக்கு ந்தா பரிசு அளித்து, படிவத்தை நிரப்பி அனுப்பலாம். உங்களைப் பற்றிய முழு விவரங்களுடன், நீங்கள் யாருக்குப் பரி ளிக்கிறீர்களோ அவர்களது பெயர், முழு முகவரி,. இ-மெயில், மொபைல் விவரங் கள் தெளிவாகக் குறிப்பிடப்பட்டிருக்க வேண்டும். குறைந்த பட்ச 5 சந்தாவுக்கு ான கட்டணத் தொகையான ரூ.1,250 டிமாண்ட் டிராஃப்ட்/ மணியார்டர்/ சென்னை காசோலையாகவோ அனுப்பி வைக்கவும்.

* நீங்கள் அறிமுகப்படுத்தும் முத்து மங்கைகள் ஒவ்வொரு வருக்கும் ரூ.100/- பெறுமான ுள்ள பரிசு அளிக்கப்படும். இந்த நல்ல செய்தியை பவள மங்கையான நீங்களே அவர்களுக்குத் தெரிவிக்கலாம்.

* முத்து மங்கைகளை அறிமுகப் படுத்தும் ஒவ்வொரு பவள மங்கைக்கும் ரூ.250/- மதிப்புள்ள பரிசு உண்டு.

### மரகத மங்கை!




குறைந்த பட்சம் 30ம், அதற்கு மேற் பட்ட எண்ணிக்கையிலும் புதிய சந்தாதாரர்களை அறிமுகப்படுத்தும் முதல் 20 அதிர்ஷ்ட சாலி வாசகர்கள்தான் மங்கையர் மலரின் மரகத மங்கைகள். உங்களுக்கு VBC Jewellery வழங்கும் ரூ. 1500/- ▸▸

முதல் மாதம் அறிமுகப்படுத்தப்பட்ட முத்து மங்கைகள் ஒவ்வொருவரும் அடுத்த மாதம் பவள மங்கைகளாக உயர்ந்து மேலும் 5 முத்து மங்கைகளை அறிமுகப்படுத்தலாம். அதுமட்டுமா, முத்து மங்கைகளை அறிமுகப்படுத்தும் பவள மங்கைகள், அடுத்து வரும் மாதங்களில் மரகத மங்கைகளாக உயரும் வாய்ப்பைப் பெறுவீர்கள்.

இப்படியாக ஒரு ஜோதியிலிருந்து இன்னொரு புதிய விளக்கு ஏற்றப்படுவது போல, இந்த சந்தா ஒளி - ஆறு மாதங்களுக்குத் தொடர்ந்து நடைபெறும். சென்னை VBC Jewellery வழங்கும் எண்ணற்ற பரிசுகள் பெறவும் முடியும்! சந்தா படிவங்கள் தொடர்ந்து 6 மாதங்களுக்கு மங்கையர் மலர் இதழில் வெளி வரும்.

▸▸

பெறுமானமுள்ள அழகிய பரிசு காத்திருக்கிறது. அது மட்டுமா? மரகத மங்கையரான வாசகியர், ஆறாவது மாத இறுதியில் நடத்தப்படும் வைர மங்கை பம்பர் பரிசுக் குலுக்கலில் கலந்து கொள்ளும் தகுதியைப் பெறுவீர்கள். மேலும், முப்பது சந்தாதாரர்களை அறிமுகப்படுத்தும் மரகத மங்கைகள் தங்களது பாஸ்போர்ட் அளவு புகைப்படங்களை அனுப்பி வைக்க வேண்டும். மரகத மங்கைகளின் புகைப்படங்கள் அவர்களைப் பற்றிய சிறு குறிப்புடன் மங்கையர் மலர் இதழ்களில் பிரசுரிக்கப்படும்.

## வைர மங்கை!

மங்கையர் மலரின் அதிகபட்ச சந்தா சேகரிப்புக்குப் பம்பர் பரிசு!




ஆறு மாதங்கள் கழித்து, 30ம் அதற்கு மேலும் சந்தாதாரர்களை அறிமுகப்படுத்திய மரகத மங்கை வாசகர்களிலிருந்து 'டாப் 5' வாசகர்கள், மொத்த சந்தா சேகரிப்பு எண்ணிக்கையின் அடிப்படையில் தேர்வு செய்யப்பட்டு, 'வைர மங்கை' என்ற பட்டப்பெயர் பெற்று, சென்னை VBC Jewellery வழங்கும் தலா ரூபாய் 10,000/- பெறுமானமுள்ள பம்பர் பரிசும் பெறுவீர்கள்.

நமது மங்கையர் மலரில் இந்த ஜூலை இதழ் தொடங்கி, மாதா மாதம் ' வைர மங்கை' சந்தா படிவம் வெளியாகும். ஆறு மாதங்களுக்குத் தொடர்ந்து சந்தா சேகரிப்பு எண்ணிக்கையின் அடிப்படையில் மாதா மாதம் தேர்வான முதல் 20 மரகத மங்கை வாசகர் பட்டியல், தொடர்ந்து புகைப்படங்களுடன் வெளியாகும். இந்தத் திட்டம் இந்த ஜூலை இதழ் தங்கள் கைகளுக்கு வந்து சேர்ந்த அதே வினாடியில் (01.07.2010 முதல்) செயல்முறைக்கு வந்துவிடும். பரபரப்பாக, சுறுசுறுப்பாக இயங்கி ஜூலை மாத இறுதிக்குள் படிவத்தைப் பூர்த்தி செய்து, 30க்கும் மேற்பட்ட சந்தாதாரர்களை அறிமுகப்படுத்தி மரகத மங்கையாக முடி சூட்டிக் கொள்ளுங்கள்.

ஆறாவது மாத இறுதியில், பம்பர் பரிசு பெறும் 5 வைர மங்கை நபர்கள் சென்னைக்கு வரவழைக்கப்பட்டு வி.பி.சி நகைக்கடை ஷோரூமில் பரிசுகள் தந்து கௌரவிக்கப்படுவீர்கள். 'வைர மங்கை' வாசகர்களின் படங்களும் செய்திகளும் நமது இதழில் வெளியாகும்.

என்ன...உங்களுக்கும் வைர மங்கையாக ஆசையா? உடனே... செயல்பட்டு... சந்தா சேகரிக்க ஆரம்பியுங்க.

அன்பு வட்டத்தை விரிவுபடுத்துங்க! பரிசுகளை வெல்லுங்க! வைர மங்கையா ஜொலிங்க!

**மேலும் விவரங்களுக்கு 9566195074**

• விதிமுறைகளுக்கு உட்பட்டது

முத்து மங்கை, பவள மங்கை, மரகத மங்கை மற்றும் வைர மங்கை... இத்திட்டத்தின் ஒவ்வொரு கட்டத்திலும் இவர்களுக்கான பரிசுகளையும் சிறப்புப் பரிசுகளையும் வழங்குவோர் சென்னை

**VBC Jewellery**
HOUSE OF VUMMIDI

## மங்கையர் மலர் - VBC இணைந்து வழங்கும் 'வைர மங்கை' சிறப்பு சந்தா திட்டம்

அன்பு அனுஷா நடராஜனுக்கு, பவள மங்கையான நான் (தற்போதைய மங்கையர் மலர் வாசகி), மங்கையர் மலரை, 5 முத்து மங்கைகளுக்கு அறிமுகப்படுத்துகிறேன். தாங்கள் கொடுத்துள்ள இந்த படிவத்தை முழுமையாகப் பூர்த்தி செய்து, 5 ஓராண்டு சந்தாதாரர்களின் தொகையாக, ரூ.1250/- மங்கையர் மலர் என்ற பெயரில் டி.டி/M.O மூலம் இணைத்துள்ளேன். என்னுடைய 5 முத்து மங்கை தோழிகளுக்கும், மங்கையர் மலர் இதழை அடுத்த மாதத்திலிருந்து அனுப்பி வைக்கவும். எனக்கும் என் தோழிகளுக்குமான பரிசுகளையும் அனுப்பி வைக்கவும். மேலும் பல முத்து மங்கைகளை அறிமுகப்படுத்த என்னால் இயன்றவரை முயலுகிறேன்.

**பவள மங்கை**

எனது பெயர் :................................................

முகவரி:................................................................

.............................................................................

.............................................................................

சந்தா எண்: (தாங்கள் சந்தாதாரராக இருந்தால்)

.............................................................................

ஃபோன்: ..................................................

ஈமெயில்..................................................

**நான் அறிமுகப்படுத்தும் முத்து மங்கைகள்:**

1. பெயர் : ..................................................

முகவரி : ..................................................

.............................................................................

.............................................................................

ஃபோன்:..................................................

ஈமெயில்..................................................

2. பெயர் : ..................................................

முகவரி : ..................................................

.............................................................................

.............................................................................

ஃபோன்:..................................................

ஈமெயில்..................................................

3. பெயர் : ..................................................

முகவரி : ..................................................

.............................................................................

.............................................................................

ஃபோன்:..................................................

ஈமெயில்..................................................

4. பெயர் : ..................................................

முகவரி : ..................................................

.............................................................................

.............................................................................

ஃபோன்:..................................................

ஈமெயில்..................................................

5. பெயர் : ..................................................

முகவரி : ..................................................

.............................................................................

.............................................................................

ஃபோன்:..................................................

ஈமெயில்..................................................

உறையின் மீது 'வைர மங்கை' என்று குறிப்பிட்டு அனுப்பவும்

இப்படிக்கு

***அனுப்ப வேண்டிய முகவரி***

*மங்கையர் மலர் சந்தா பிரிவு, மங்கையர் மலர்,*

*கல்கி பில்டிங்ஸ், 47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை,*

*ஈக்காடுதாங்கல், சென்னை - 600 032*

தேதி:..................................

ஈஸ்டர்ன்®

# இது பேசும் சாம்பார்!






**ஈஸ்டர்ன் மெட்ராஸ் சாம்பார்.**

**உங்கள் சமையல் திறனைப் பற்றி கோடிப் பேரை பேசவைக்கும்.**

ஈஸ்டர்ன் மெட்ராஸ் சாம்பார் பொடி இருந்தால்போதும் உங்களுக்கு எல்லாரிடமிருந்தும் பாராட்டுக்கள் குவியப்போவது நிச்சயம்தான். ஏனென்றால் ஈஸ்டர்ன் மெட்ராஸ் சாம்பார் பொடியிருந்தால் நீங்கள் வைக்கும் சாம்பாருக்கு ஈடு இணை ஏது? புதுமை மாறாத, தூய்மையான பொருட்கள் சேர்க்கப்பட்ட, நாவில் நீர் ஊற வைக்கும் அச்சு அசல் மெட்ராஸ் சாம்பார் அல்லவா அது? இன்றே வீட்டிற்கு ஈஸ்டர்ன் மெட்ராஸ் சாம்பார் பொடியை வாங்கி வாருங்கள். அப்புறமென்ன, ஊரெங்கும் உங்களைப் பற்றிய பேச்சுத்தான்.

TeamOne

ஈஸ்டர்ன்

ராஸ் சாம்பார் பொடி

அடுத்த தலைமுறைக்கான அருமையான வாசம்.

uality product from Eastern An ISO 22000,HACCP Certified Company | Email: mktg@eastern.in | Ph: 044 - 22252939

Registered with the Registror of Newspaper of India under No.30309/75* Registered No.TN/CC(S)DN/170/09-11 - Licensed post without prepayment under PMG's Licence No.WPP TN/CC(S)DN/103/09-11. Registered as a Newspaper in Srilanka.

என்றும் உங்களுடன்

# மங்கையர் மலர்

**ஜூலை 2010 இதழுடன் இணைப்பு**

தேவகோட்டையிலுள்ள ஒரு கோயிலில் விநாயகர் காலில் சிலம்புடன் காணப்படுகிறார். இவருக்கு 'சிலம்பணி விநாயகர்' என்று பெயர்.

*- எம். ஸ்ரீதர், வாணியஞ்சாவடி - 103*

வாசகியர் கைவண்ணத்தில்...

கோயில் சிறப்பு 64!


என்றும் உங்களுடன்

மங்கையர் மலர்

ஜூலை 2010 இதழுடன் இணைப்பு

தேவகோட்டையிலுள்ள ஒரு கோயிலில் நாயகர் காலில் சிலம்புடன் காணப்படுகிறார். வருக்கு 'சிலம்பணி விநாயகர்' என்று பெயர்.

- எம். ஸ்ரீதர், வாணியஞ்சாவடி - 103

வாசகியர் கைவண்ணத்தில்...

கோயில் சிறப்பு 64!



நமது குழந்தைகளைத் தங்க தொட்டிலில் போடநினைத்தால் நடக்குமா? ஆனால் அந்த ஆசையை, ஒரு கோயில் நிறைவேற்றித் தருகிறது. இந்தக் கோயில் தஞ்சை மாவட்டம் திருக்கருகாவூரில் உள்ளது. அம்பாள் சன்னிதியில் உள்ள இந்தத் தங்கத் தொட்டிலில் பணம் கட்டி, குழந்தையைப் படுக்கப் போடலாம். ஏழை எளியவர்களும், தங்கத் தொட்டிலில் தங்கள் குழந்தையைப் போட்டுத் தாலாட்டுகிறார்கள். இதனால் குழந்தையின் பால தோஷங்கள் போய் விடுவதாக நம்பிக்கை!

*- வே. சித்ரா, கும்மிடிப்பூண்டி - 201*



2 Supplement to Mangayar Malar July 2010



நமது குழந்தைகளைத் தங்க தொட்டிலில் போடநினைத்தால் நடக்குமா? ஆனால் அந்த ஆசையை, ஒரு கோயில் நிறைவேற்றித் தருகிறது. இந்தக் கோயில் தஞ்சை மாவட்டம் திருக்கருகாவூரில் உள்ளது. அம்பாள் சன்னிதியில் உள்ள இந்தத் தங்கத் தொட்டிலில் பணம் கட்டி, குழந்தையைப் படுக்கப் போடலாம். ஏழை எளியவர்களும், தங்கத் தொட்டிலில் தங்கள் குழந்தையைப் போட்டுத் தாலாட்டுகிறார்கள். இதனால் குழந்தையின் பால தோஷங்கள் போய் விடுவதாக நம்பிக்கை!

*- வே. சித்ரா, கும்மிடிப்பூண்டி - 2*

என்றும் உங்களுடன்
மங்கையர் மலர் தரத்திலும் நம்பர் 1 மகளிர் மாத இத

திருச்செந்தூர், ஆலங்குடி இரண்டுமே பிரசித்தி பெற்ற குரு ஸ்தலங்கள். இவைபோலவே சென்னைக்குப் பக்கத்திலுள்ள கோவிந்தவாடியும் குரு ஸ்தலம்தான்! திருக்கருகாவூருக்குப் பக்கத்தில் 'தென்குடித்திட்டை' என்ற ஒரு ஊர் இருக்கிறது. இவ்விரு கோயில்களும் குரு பகவானால் வழிபடப்பட்டவை. நாகர் கோயிலுக்கு அருகிலுள்ள 'முரப்ப நாடு'ம் குரு விசேஷ ஸ்தலம். வாய்ப்புள்ளவர்கள் இத் தலங்களுக்குச் சென்று நவக் கிரகங்களுள் ஒன்றான குருவையும், ஆதி குருவான தக்ஷிணாமூர்த்தியையும் வழிபட்டால் நிச்சயம் குரு வருள் கிடைக்கும்.

*- அங்கயற்கண்ணி அம்மையப்பன்,*
நெல்லை - 7




Supplement to Mangayar Malar July 2010 3

திருச்செந்தூர், ஆலங்குடி இரண்டுமே பிரசித்தி பெற்ற குரு ஸ்தலங்கள். இவைபோலவே சென்னைக்குப் பக்கத்திலுள்ள கோவிந்தவாடியும் குரு ஸ்தலம்தான்! திருக்கருகாவூருக்குப் பக்கத்தில் 'தென்குடித்திட்டை' என்ற ஒரு ஊர் இருக்கிறது. இவ்விரு கோயில்களும் குரு பகவானால் வழிபடப்பட்டவை. நாகர் கோயிலுக்கு அருகிலுள்ள 'முரப்ப நாடு'ம் குரு விசேஷ ஸ்தலம். வாய்ப்புள்ளவர்கள் இத் தலங்களுக்குச் சென்று நவக் கிரகங்களுள் ஒன்றான குருவையும், ஆதி குருவான தக்ஷிணாமூர்த்தியையும் வழிபட்டால் நிச்சயம் குரு வருள் கிடைக்கும்.

*- அங்கயற்கண்ணி அம்மையப்பன்,*
நெல்லை - 7





மாயவரம் அருகில் உள்ள திருக்கடவூர் அமிர்த கடேஸ்வரர் திருக்கோயிலில் நடராஜர் சன்னிதிக்கு வலப் புறம், குழந்தையை (முருகனை) இடுப்பில் ஏந்திய நிலையில் உள்ள பார்வதி அம்மனைத் தரிசிக்சலாம். இந்த அபூர்வக் காட்சி எங்கும் காணக்கிடைக்காதது.

- ஜி.ஜெயஸ்ரீகோபாலன்,
சென்னை - 33







மாயவரம் அருகில் உள்ள திருக்கடவூர் அமிர்த கடேஸ்வரர் திருக்கோயிலில் நடராஜர் சன்னிதிக்கு வலட் புறம், குழந்தையை (முருகனை) இடுப்பில் ஏந்திய நிலையில் உள்ள பார்வதி அம்மனைத் தரிசிக்கலாம் இந்த அபூர்வக் காட்சி எங்கும் காணக்கிடைக்காதது.

- ஜி.ஜெயஸ்ரீகோபாலன்
சென்னை - 3

காசிக்கு இணையான தலம் திருப்புடைமருதூர். இங்கு கோயில் கொண்டுள்ள தெய்வம், நாறும்பூ நாத சுவாமிகள். இங்கு அருள் பாலிக்கும் இறைவியான கோமதி அம்பாளின் திருமேனி, கல்லால் செதுக்கப் படாமல் ருத்ராட்சத்தால் செதுக்கப்பட்டுள்ளது, அற்புத விசேஷமாகும்!

*- கே.வி. சீனிவாசன், திருச்சி - 13*




Supplement to Mangayar Malar July 2010 5

காசிக்கு இணையான தலம் திருப்புடைமருதூர். இங்கு கோயில் கொண்டுள்ள தெய்வம், நாறும்பூ நாத சுவாமிகள். இங்கு அருள் பாலிக்கும் இறைவியான கோமதி அம்பாளின் திருமேனி, கல்லால் செதுக்கப் படாமல் ருத்ராட்சத்தால் செதுக்கப்பட்டுள்ளது, அற்புத விசேஷமாகும்!

*- கே.வி. சீனிவாசன், திருச்சி - 13*





கிருஷ்ணகிரி மாவட்டம் கோட்டையூரில் நூற்று ஒன்று சுவாமி மலை என்ற மலைப்பகுதி உள்ளது. இங்குள்ள ஒரு குகையில் சுமார் ஓர் அடி உயரமுள்ள கல் அகல்விளக்கு ஒன்று இருக்கிறது. இந்த விளக்கில் இளநீர் விட்டு எரித்தால், விளக்கு அழகாக எரிகிறது. இவ்வாறு இளநீர் விளக்கு ஏற்றுபவர்களின் குடும்பத் துன்பங்கள் நீங்கி, மன அமைதியும் சாந்தியும் கிடைக்கிறதாம். இளநீர் விளக்கை அது இருக்கும் இடத்திலிருந்து சற்றே இடம் மாற்றினாலும் எரிவதில்லை என்பது ஆச்சரியம்!

- *இரா. கணேசன்,*
*சேலம் - 1*



6 Supplement to Mangayar Malar July 2010



கிருஷ்ணகிரி மாவட்டம் கோட்டையூரில் நூற்று ஒன்று சுவாமி மலை என்ற மலைப்பகுதி உள்ளது. இங்குள்ள ஒரு குகையில் சுமார் ஓர் அடி உயரமுள்ள கல் அகல்விளக்கு ஒன்று இருக்கிறது. இந்த விளக்கில் இளநீர் விட்டு எரித்தால், விளக்கு அழகாக எரிகிறது. இவ்வாறு இளநீர் விளக்கு ஏற்றுபவர்களின் குடும்பத் துன்பங்கள் நீங்கி, மன அமைதியும் சாந்தியும் கிடைக்கிறதாம். இளநீர் விளக்கை அது இருக்கும் இடத்திலிருந்து சற்றே இடம் மாற்றினாலும் எரிவதில்லை என்பது ஆச்சரியம்!

- *இரா. கணேசன்,*
*சேலம் - 1*

என்றும் உங்களுடன்
மங்கையர் மலர் தரத்திலும் நம்பர் 1 மகளிர் மாத இது

உலகப் பிரசித்தி பெற்ற தஞ்சாவூர் பெரியகோயிலில் நவக்கிரகங்களுக்கு பதில் ஒன்பது சிவலிங்கங்களே (பாணம்) உள்ளன. அதேபோல் இக்கோயிலில் உள்ள ராகு பகவான், 'வாழ வைத்த ராகு' என்ற பெயருடன் தனிச் சன்னிதியில் உள்ளார். தற்போது மிகவும் பக்தியுடன் வணங்கப் பெறும் சப்த மாதாக்களில் ஒருவளான ஸ்ரீவாராஹிக்கு சிறப்புச் சன்னிதி உள்ளது. இந்த அம்மனுக்கு ஆடிபஞ்சமி மிகவும் விசேஷம்.

- வி.ஆர்.கிருஷ்ணன், தஞ்சாவூர்

கோயில் சிறப்பு 64!

Supplement to Mangayar Malar July 2010 7

உலகப் பிரசித்தி பெற்ற தஞ்சாவூர் பெரியகோயிலில் நவக்கிரகங்களுக்கு பதில் ஒன்பது சிவலிங்கங்களே பாணம்) உள்ளன. அதேபோல் இக்கோயிலில் உள்ள ராகு பகவான், 'வாழ வைத்த ராகு' என்ற பெயருடன் தனிச் சன்னிதியில் உள்ளார். தற்போது மிகவும் பக்தியுடன் வணங்கப் பெறும் சப்த மாதாக்களில் ஒருவளான ஸ்ரீவாராஹிக்கு சிறப்புச் சன்னிதி உள்ளது. இந்த அம்மனுக்கு ஆடிபஞ்சமி மிகவும் விசேஷம்.

- வி.ஆர்.கிருஷ்ணன், தஞ்சாவூர்

கோயில் சிறப்பு 64!



வேலூருக்கு அருகில் உள்ள விரிஞ்சிபுரத்தில் மார்கபந்து - மரகதாம்பிகை ஆலயம் உள்ளது. இந்தக் கோயிலில் உள்ள சிம்மக் குளம் விசேஷமானது. சிங்கத்தின் வாயினுள் குளத்தின் படிக்கட்டுகள் ஆரம்பமாகின்றன. திருஷ்டி தோஷம் நீங்க, இதில் குளிப்பார்கள். கார்த்திகை மாதம் கடைசி ஞாயிறு மிக விசேஷமானது. குழந்தைப் பேறு வேண்டும் பெண்கள், சிம்மக் குளத்தில் நீராடி ஈர உடையுடன், கையில் மங்கலப் பொருள்களுடன் அம்பிகையை நோக்கி கவிழ்ந்து படுத்தபடி அன்னையிடம் தங்கள் மனக்குறையை எடுத்துரைக்க, குறை நீங்குவது நிச்சயம்.

- கிருஷ்ணவேணி ரங்கநாதன்

சென்னை - 4



8 Supplement to Mangayar Malar July 2010



வேலூருக்கு அருகில் உள்ள விரிஞ்சிபுரத்தில் மார்கபந்து மரகதாம்பிகை ஆலயம் உள்ளது. இந்தக் கோயிலில் உள்ள சிம்மக் குளம் விசேஷமானது. சிங்கத்தின் வாயினுள் குளத்தின் படிக்கட்டுகள் ஆரம்பமாகின்றன. திருஷ்டி தோஷம் நீங்க, இதில் குளிப்பார்கள். கார்த்திகை மாதம் கடைசி ஞாயிறு மிக விசேஷமானது. குழந்தைப் பேறு வேண்டும் பெண்கள், சிம்மக் குளத்தில் நீராடி ஈர உடையுடன், கையில் மங்கலப் பொருள்களுடன் அம்பிகையை நோக்கி கவிழ்ந்து படுத்தபடி அன்னையிடம் தங்கள் மனக்குறையை எடுத்துரைக்க, குறை நீங்குவது நிச்சயம்.

- கிருஷ்ணவேணி ரங்கநாதன்

சென்னை - 4

என்றும் உங்களுடன்
மங்கையர் மலர் தரத்திலும் நம்பர் 1 மகளிர் மாத இதழ்

இந்தியாவில் எங்குமில்லாத சங்கு ரிஷபம் (நந்தி பகவான்) சுசீந்திரம் தாணு மலையான் கோயிலில் உள்ளது. தனி சங்கினால் இந்தப் பெரிய ரிஷபத்தைச் செய்துள்ளனர்.

- ஆர். ஜெயலெட்சுமி,
திருநெல்வேலி - 6




Supplement to Mangayar Malar July 2010 9

இந்தியாவில் எங்குமில்லாத சங்கு ரிஷபம் (நந்தி பகவான்) சுசீந்திரம் தாணு மலையான் கோயிலில் உள்ளது. தனி சங்கினால் இந்தப் பெரிய ரிஷபத்தைச் செய்துள்ளனர்.

- ஆர். ஜெயலெட்சுமி,
திருநெல்வேலி - 6








ஆடல் - பாடல், கல்விச் சிறப்புகள் மேன்மையுற கலைமகளைத் தியானிக்கிறோம். ஆனால் கலைமகளோ தன்னுடைய பெருமைகள் வளர, ஸ்ரீஹயக்ரீவரை வழிபடுவதாகச் சொல்லப்படுகிறது. அதனால் சரஸ்வதிக்கும் அதிபதியாகிறார் பெருமாள். செங்கற்பட்டு - சிங்கப்பெருமாள்கோயில் தடத்திற்கு இடையே, செட்டிப் புண்ணியம் கிராமத்தில் உள்ளது இப்புண்ணியத் தலம். தேர்வெழுதச் செல்லும் மாணவ மாணவியர் தங்களது பேனாக்கள், படைப்புகளை பெருமாளின் பொற்பாதங்களில் வைத்து, பிரார்த்தனை செய்த பின்னர் வாங்கிச் செல்வது வழக்கமாக உள்ளது.

- ஆர்.கே.சுந்தரம், வடபழநி



10 Supplement to Mangayar Malar July 2010






ஆடல் - பாடல், கல்விச் சிறப்புகள் மேன்மையுற கலைமகளைத் தியானிக்கிறோம். ஆனால் கலைமகளோ தன்னுடைய பெருமைகள் வளர, ஸ்ரீஹயக்ரீவரை வழிபடுவதாகச் சொல்லப்படுகிறது. அதனால் சரஸ்வதிக்கும் அதிபதியாகிறார் பெருமாள். செங்கற்பட்டு - சிங்கப்பெருமாள்கோயில் தடத்திற்கு இடையே, செட்டிப் புண்ணியம் கிராமத்தில் உள்ளது இப்புண்ணியத் தலம். தேர்வெழுதச் செல்லும் மாணவ மாணவியர் தங்களது பேனாக்கள், படைப்புகளை பெருமாளின் பொற்பாதங்களில் வைத்து, பிரார்த்தனை செய்த பின்னர் வாங்கிச் செல்வது வழக்கமாக உள்ளது.

- ஆர்.கே.சுந்தரம், வடபழநி

குத்தாலம் - கும்பகோணம் வழியில் அருள் தரும் வெள்ளை வேம்பு மாரியம்மன் கோயில் உள்ளது. இக் கோயிலில் மாரியம்மன் வீற்றிருக்கும் இடத்தில், சிலையின் தலைக்கு மேல் மயில் தோகை போல் விரிந்துள்ள வேப்ப மர இலைகள் வெள்ளையாகவும் மீதி கிளைகளில் பச்சை நிறமாகவும் இருந்ததைப் பார்த்து மிக ஆச்சரியம் அடைந்தோம். மாரியம்மன் மிக சக்தி படைத்த தெய்வமாக அருள்பாலிக்கிறார்.

*- எம்.எஸ்.ஆர். லலிதா,*
*சென்னை - 61*

கோயில் சிறப்பு 64!

Supplement to Mangayar Malar July 2010 11

குத்தாலம் - கும்பகோணம் வழியில் அருள் தரும் வெள்ளை வேம்பு மாரியம்மன் கோயில் உள்ளது. இக் கோயிலில் மாரியம்மன் வீற்றிருக்கும் இடத்தில், சிலையின் தலைக்கு மேல் மயில் தோகை போல் விரிந்துள்ள வேப்ப மர இலைகள் வெள்ளையாகவும் மீதி கிளைகளில் பச்சை நிறமாகவும் இருந்ததைப் பார்த்து மிக ஆச்சரியம் அடைந்தோம். மாரியம்மன் மிக சக்தி படைத்த தெய்வமாக அருள்பாலிக்கிறார்.

- எம்.எஸ்.ஆர். லலிதா,
சென்னை - 61

கோயில் சிறப்பு 64!



புதுக்கோட்டை மாவட்டத்தில் அமைந்துள்ளது ஆவுடையார் கோயில் (ஆவி-உடையார்) இங்கு இறைவன், இறைவி, நந்தி, கொடி மரம் ஏதும் கிடையாது. சோறு பொங்கி வைத்து உடன் ஆவி வரும். அந்த ஆவிக்குத் தான் பூஜை. இதைக் கட்டியவர் ஸ்ரீ மாணிக்கவாசகர்.

- சத்திரப்பட்டி குருசாமிப் பாண்டியன், கிருஷ்ணன்கோயில்



12 Supplement to Mangayar Malar July 2010



புதுக்கோட்டை மாவட்டத்தில் அமைந்துள்ளது ஆவுடையார் கோயில் (ஆவி-உடையார்) இங்கு இறைவன், இறைவி, நந்தி, கொடி மரம் ஏதும் கிடையாது. சோறு பொங்கி வைத்து உடன் ஆவி வரும். அந்த ஆவிக்குத் தான் பூஜை. இதைக் கட்டியவர் ஸ்ரீ மாணிக்கவாசகர்.

- சத்திரப்பட்டி குருசாமிப் பாண்டியன், கிருஷ்ணன்கோயில்

என்றும் உங்களுடன்
மங்கையர் மலர் தரத்திலும் நம்பர் 1 மகளிர் மாத இதழ்!

குமரி மாவட்டம் சுசீந்திரம் தாணுமாலயன் திருக்கோயிலில் அர்த்தஜாமப் பூஜை இந்திரனால் நடத்தப் பெறுவதாக ஐதிகம். மனிதர்களால் அர்த்த ஜாமப் பூஜை நடைபெறாத திருக்கோயில் இது.

- கே.எல்.சுபாக்கனி,
மேலகிருஷ்ணன்புதூர்

கோயில் சிறப்பு 64!

Supplement to Mangayar Malar July 2010 13

குமரி மாவட்டம் சுசீந்திரம் தாணுமாலயன் திருக்கோயிலில் அர்த்தஜாமப் பூஜை இந்திரனால் நடத்தப் பெறுவதாக ஐதிகம். மனிதர்களால் அர்த்த ஜாமப் பூஜை நடைபெறாத திருக்கோயில் இது.

- கே.எல்.சுபாக்கனி,
மேலகிருஷ்ணன்புதூர்

கோயில் சிறப்பு 64!



எங்கும் ஆல மரம் விழுது விடும். ஆனால், அரச மரம் எங்காவது விழுது விடுமா? ராமநாதபுரத்துக்கு வடகிழக்கே பத்து கி.மீ தூரத்தில் உள்ள திருப் புல்லாணி ஆதிஜகன்னாதர் பெரு மாள் கோயிலில் உள்ள அரச மரம் விழுது விடுகிறது. அதன் விழுது நிலத்தில் விழுந்து மரமாகிவிட்டால் மூல மரம் பட்டுப் போய்விடுமாம். பிறகு புதிய மரம் வளர்ந்து விழுது விடுமாம். இப்படி ஓர் அதிசய அரச மரம், ஸ்தல விருட்சமாகி பெருமை சேர்க்கிறது.

- எஸ். ஜெயலெக்ஷ்மி,
திருப்பரங்குன்றம்



14 Supplement to Mangayar Malar July 2010



எங்கும் ஆல மரம் விழுது விடும். ஆனால், அரச மரம் எங்காவது விழுது விடுமா? ராமநாதபுரத்துக்கு வடகிழக்கே பத்து கி.மீ தூரத்தில் உள்ள திருப் புல்லாணி ஆதிஜகன்னாதர் பெரு மாள் கோயிலில் உள்ள அரச மரம் விழுது விடுகிறது. அதன் விழுது நிலத்தில் விழுந்து மரமாகிவிட்டால் மூல மரம் பட்டுப் போய்விடுமாம். பிறகு புதிய மரம் வளர்ந்து விழுது விடுமாம். இப்படி ஓர் அதிசய அரச மரம், ஸ்தல விருட்சமாகி பெருமை சேர்க்கிறது.

- எஸ். ஜெயலெக்ஷ்மி,
திருப்பரங்குன்றம்

என்றும் உங்களுடன்
மங்கையர் மலர் தரத்திலும் நம்பர் 1 மகளிர் மாத இதழ்!

ஆண்டாளை நின்ற கோலத்திலும், அமர்ந்த கோலத்திலும் ஒருசேர திருச்சி, அன்பில் சுந்தரராஜ பெருமாள் கோயிலில் காணலாம். கோயில் முன் மண் டபத்தில் ஆண்டாள் தனி சன்னிதியில் நின்ற கோலத்திலும் கருவறையில் இருக்கும் உத்ஸவ ஆண்டாள் அமர்ந்த கோலத்திலும் இருக்கிறாள். ஆண்டாளின் அமர்ந்த கோலம் காண்பது மிக மிக அரிது.

- பி. சுகந்தி, கோயம்புத்தூர் - 42




Supplement to Mangayar Malar July 2010 15

ஆண்டாளை நின்ற கோலத்திலும், அமர்ந்த கோலத்திலும் ஒருசேர திருச்சி, அன்பில் சுந்தரராஜ பெருமாள் கோயிலில் காணலாம். கோயில் முன் மண் டபத்தில் ஆண்டாள் தனி சன்னிதியில் நின்ற கோலத்திலும் கருவறையில் இருக்கும் உத்ஸவ ஆண்டாள் அமர்ந்த கோலத்திலும் இருக்கிறாள். ஆண்டாளின் அமர்ந்த கோலம் காண்பது மிக மிக அரிது.

- பி. சுகந்தி, கோயம்புத்தூர் - 42





நந்தியெம்பெருமானை எல்லா கோயில்களிலும் காலை மடித்து அமர்ந்த நிலையில்தான் காண முடியும். ஆனால், திருவாரூர், தியாகராஜசுவாமி கோயிலில் நந்தி நின்று கொண்டிருப்பார். சுந்தர மூர்த்தி நாயனருக்காக, பரவை நாச்சியாரிடம் தூது செல்ல, இறைவனே கர்ப்பக்கிரகத்தில் இருந்து புறப்பட்டு வந்தபோது, நந்தி அப்படியே திகைத்துப் போய் நின்றுவிட்டாராம்!

- சந்திரா ஜானகிராமன்,

சென்னை - 4



16 Supplement to Mangayar Malar July 2010



நந்தியெம்பெருமானை எல்லா கோயில்களிலும் காலை மடித்து அமர்ந்த நிலையில்தான் காண முடியும். ஆனால், திருவாரூர், தியாகராஜசுவாமி கோயிலில் நந்தி நின்று கொண்டிருப்பார். சுந்தர மூர்த்தி நாயனருக்காக, பரவை நாச்சியாரிடம் தூது செல்ல, இறைவனே கர்ப்பக்கிரகத்தில் இருந்து புறப்பட்டு வந்தபோது, நந்தி அப்படியே திகைத்துப் போய் நின்றுவிட்டாராம்!

- சந்திரா ஜானகிராமன்,

சென்னை - 4

என்றும் உங்களுடன்
மங்கையர் மலர் தரத்திலும் நம்பர் 1 மகளிர் மாத இதழ்!

பெரும்பாலும் இந்துக் கோயில்களில் எல்லாம் வெண்கலம், பஞ்சலோகம் அல்லது கற்சிலை கள்தான் இருக்கும். பூரி ஜெகந்நாதர் ஆலயத்தில் உள்ள கிருஷ்ணர், பலராமர், சுபத்திரை உருவங்கள் மரத்தினால் ஆனவை. அரிசி, பருப்பு, காய்கறி களைச் சேர்த்து சமைத்ததே பிரசாதமாகப் படைக் கப்படுகிறது. இதற்கு 'பாக்' என்று பெயர்.

- காசிதாசன், வந்தவாசி

கோயில் சிறப்பு 64!

Supplement to Mangayar Malar July 2010 17

பெரும்பாலும் இந்துக் கோயில்களில் எல்லாம் வெண்கலம், பஞ்சலோகம் அல்லது கற்சிலை கள்தான் இருக்கும். பூரி ஜெகந்நாதர் ஆலயத்தில் உள்ள கிருஷ்ணர், பலராமர், சுபத்திரை உருவங்கள் மரத்தினால் ஆனவை. அரிசி, பருப்பு, காய்கறி களைச் சேர்த்து சமைத்ததே பிரசாதமாகப் படைக் கப்படுகிறது. இதற்கு 'பாக்' என்று பெயர்.

- காசிதாசன், வந்தவாசி

கோயில் சிறப்பு 64!



ஆந்திரா சித்தூர் அருகில் விநாயகபுரம் என்ற ஊரில் நவசித்தி விநாயகர் கோயில் உள்ளது. இங்கு மூல ஸ்தனத்துக்கு பின்புறம் ஆவுடையார்லிங்கம் உள்ளது. இந்த லிங்கத்துக்கு அபிஷேகம் செய்தால் காசியில் உள்ள லிங்கத்துக்கு செய்த பலனாம். இந்த லிங்கம் காசியில் இருந்து கொண்டு வரப்பட்டது. இதற்கு பக்தர்கள் அனைவருமே அபிஷேகம் செய்யலாம். இந்தக் கோயிலின் பாதி தமிழ்நாடு எல்லைக்கும், மீதி ஆந்திரா எல்லைக்கும் உட்பட்டது.

- ஆர். ராஜேஸ்வரி, கள்ளக்குறிச்சி



18 Supplement to Mangayar Malar July 2010



ஆந்திரா சித்தூர் அருகில் விநாயகபுரம் என்ற ஊரில் நவசித்தி விநாயகர் கோயில் உள்ளது. இங்கு மூல ஸ்தனத்துக்கு பின்புறம் ஆவுடையார்லிங்கம் உள்ளது. இந்த லிங்கத்துக்கு அபிஷேகம் செய்தால் காசியில் உள்ள லிங்கத்துக்கு செய்த பலனாம். இந்த லிங்கம் காசியில் இருந்து கொண்டு வரப்பட்டது. இதற்கு பக்தர்கள் அனைவருமே அபிஷேகம் செய்யலாம். இந்தக் கோயிலின் பாதி தமிழ்நாடு எல்லைக்கும், மீதி ஆந்திரா எல்லைக்கும் உட்பட்டது.

- ஆர். ராஜேஸ்வரி, கள்ளக்குறிச்சி

என்றும் உங்களுடன்
மங்கையர் மலர் தரத்திலும் நம்பர் 1 மகளிர் மாத இதழ்!

காசியில் சிருங்கேரி மடத்தில் 12 கல் தூண்களால் ஆன மண்டபம் ஒன்றிருக்கிறது. சூரியன் மாதம்தோறும் ஓர் ராசியில் வலம் வரும் இயல்புக்கு ஏற்ப இது கட்டப் பட்டுள்ளது. ஒவ்வொரு தூணிலும் மேஷம் முதல் மிதுனம் வரையிலும் ராசி சின்னங்கள் செதுக்கப்பட்டுள்ளன. சித்திரை மாதம் என்றால் அதற்குரிய மேஷத்திலும், பங்குனி மாதம் என்றால் அதற்குரிய மீனத்திலும், உதய காலத்தில் சூரியனுடைய கதிர்கள் விழுமாறு செதுக்கி யுள்ளனர்.

*- ப.ராமகிருஷ்ணன், காயக்காடு*




Supplement to Mangayar Malar July 2010 19

காசியில் சிருங்கேரி மடத்தில் 12 கல் தூண்களால் ஆன மண்டபம் ஒன்றிருக்கிறது. சூரியன் மாதம்தோறும் ஓர் ராசியில் வலம் வரும் இயல்புக்கு ஏற்ப இது கட்டப் பட்டுள்ளது. ஒவ்வொரு தூணிலும் மேஷம் முதல் மிதுனம் வரையிலும் ராசி சின்னங்கள் செதுக்கப்பட்டுள்ளன. சித்திரை மாதம் என்றால் அதற்குரிய மேஷத்திலும், பங்குனி மாதம் என்றால் அதற்குரிய மீனத்திலும், உதய காலத்தில் சூரியனுடைய கதிர்கள் விழுமாறு செதுக்கி யுள்ளனர்.

*- ப.ராமகிருஷ்ணன், காயக்காடு*





எல்லா பெருமாள் கோயில்களிலும் தீர்த்தம், துளசி, குங்குமம் மட்டும்தான் கொடுப்பார்கள். ஆனால் இவற்றுடன் மிளகும் சேர்த்துக் கொடுப்பது கோவை மாவட்டம் சூலூரில் உள்ள ஸ்ரீதேவி, பூதேவி சமேத திருவேங்கிட நாதப் பெருமாள் கோயிலில் மட்டும்தான். பல நூறு ஆண்டுகளுக்கு முன்னர் கோயிலின் உட்புறத்தில் உள்ள கல்தூண் ஒன்றில் விரிசல் ஏற்பட்டுள்ளதை ஒரு பக்தர் கனவில் பெருமாள் சுட்டிக் காட்டினாராம். மறுநாள் காலை ஒரு பெரிய மரத்தை வெட்டி, தூண்போல் செய்து, முட்டுக் கொடுத்துக் கட்டடத்தைப் பாதுகாத்துள்ளனர்.

*- சூலூரர் ராஜாராம்,*
*கோவை - 29*



20 Supplement to Mangayar Malar July 2010



எல்லா பெருமாள் கோயில்களிலும் தீர்த்தம், துளசி, குங்குமம் மட்டும்தான் கொடுப்பார்கள். ஆனால் இவற்றுடன் மிளகும் சேர்த்துக் கொடுப்பது கோவை மாவட்டம் சூலூரில் உள்ள ஸ்ரீதேவி, பூதேவி சமேத திருவேங்கிட நாதப் பெருமாள் கோயிலில் மட்டும்தான். பல நூறு ஆண்டுகளுக்கு முன்னர் கோயிலின் உட்புறத்தில் உள்ள கல்தூண் ஒன்றில் விரிசல் ஏற்பட்டுள்ளதை ஒரு பக்தர் கனவில் பெருமாள் சுட்டிக் காட்டினாராம். மறுநாள் காலை ஒரு பெரிய மரத்தை வெட்டி, தூண்போல் செய்து, முட்டுக் கொடுத்துக் கட்டடத்தைப் பாதுகாத்துள்ளனர்.

*- சூலூரர் ராஜாராம்,*
*கோவை - 29*

என்றும் உங்களுடன்
மங்கையர் மலர் தரத்திலும் நம்பர் 1 மகளிர் மாத இதழ்!

பெருமாள் கோயிலில், தாயாருக்கு வில்வத்தினால் அர்ச்சனை என்றால் நம்புவீர்களா? கட்டாயம் நம்பித்தான் ஆக வேண்டும். மயிலாப்பூர் ஸ்ரீ ஆதிகேசவ பெருமாள் கோயிலில், ஸ்ரீ மயூரவல்லித் தாயாருக்கு வெள்ளிக்கிழமை தோறும் மாலையில் வில்வ அர்ச்சனை நடைபெறுகிறது. குறிப்பாக திருமணத்தடை நீங்குதல் மிக மிக முக்கியமான பிரார்த்தனை. மயூரவல்லித் தாயாரை நாற்பத்தெட்டு நாட்கள் பிரதட்சிணம் செய்து நெய் விளக்கேற்றினால் நினைத்த காரியம் கைகூடும்.

- சீனு. சந்திரா, சென்னை - 4




Supplement to Mangayar Malar July 2010 21

பெருமாள் கோயிலில், தாயாருக்கு வில்வத்தினால் அர்ச்சனை என்றால் நம்புவீர்களா? கட்டாயம் நம்பித்தான் ஆக வேண்டும். மயிலாப்பூர் ஸ்ரீ ஆதிகேசவ பெருமாள் கோயிலில், ஸ்ரீ மயூரவல்லித் தாயாருக்கு வெள்ளிக்கிழமை தோறும் மாலையில் வில்வ அர்ச்சனை நடைபெறுகிறது. குறிப்பாக திருமணத்தடை நீங்குதல் மிக மிக முக்கியமான பிரார்த்தனை. மயூரவல்லித் தாயாரை நாற்பத்தெட்டு நாட்கள் பிரதட்சிணம் செய்து நெய் விளக்கேற்றினால் நினைத்த காரியம் கைகூடும்.

- சீனு. சந்திரா, சென்னை - 4

கோயில் சிறப்பு 64!





பிரம்மா, விஷ்ணு, சிவன் போன்ற தெய்வங்களுக்கு, தனித்தனியாக கோயில்கள் உள்ளதை அறிவோம். ஆனால், தமிழ்நாட்டில் ஈரோடிலிருந்து கரூர் செல்லும் வழியில் கொடுமுடி என்ற புண்ணியத்தலத்தில் ஒரே கோயிலில் பிரம்மா, விஷ்ணு, சிவன் இருப்பது அதிசயக் காட்சி!

-எஸ். உஷா சுதர்சன், திருச்செங்கோடு



22 Supplement to Mangayar Malar July 2010





பிரம்மா, விஷ்ணு, சிவன் போன்ற தெய்வங்களுக்கு, தனித்தனியாக கோயில்கள் உள்ளதை அறிவோம். ஆனால், தமிழ்நாட்டில் ஈரோடிலிருந்து கரூர் செல்லும் வழியில் கொடுமுடி என்ற புண்ணியத்தலத்தில் ஒரே கோயிலில் பிரம்மா, விஷ்ணு, சிவன் இருப்பது அதிசயக் காட்சி!

-எஸ். உஷா சுதர்சன், திருச்செங்கோடு

என்றும் உங்களுடன்
மங்கையர் மலர் தரத்திலும் நம்பர் 1 மகளிர் மாத இதழ்!

தர்மபுரி மல்லிகார்ஜுன சுவாமி கோயில் சன்னிதியில் இரண்டரை டன் எடையுள்ள தொங்கும் கருங்கல் தூண் உள்ளது. தூணின் அடி பாகத்தில் ஒரு நியூஸ் பேப்பரை உள்ளே விட்டு வெளியே எடுக்கலாம். இக்கோயிலில் ஆடிப்பூரத்தன்று அம்மனுக்கு வளைகாப்பு நடைபெறும். அப்பொழுது மடியில் 'முளைப்பயிறு கட்டுதல்' நடைபெறும். குழந்தைப் பேறு இல்லாதவர்கள் அதை வாங்கி உண்டால் குழந்தைப் பேறு கிடைக்கும் என்பது நம்பிக்கை!

- என். வளர்மதி, தர்மபுரி - 5




Supplement to Mangayar Malar July 2010 23

தர்மபுரி மல்லிகார்ஜுன சுவாமி கோயில் சன்னிதியில் இரண்டரை டன் எடையுள்ள தொங்கும் கருங்கல் தூண் உள்ளது. தூணின் அடி பாகத்தில் ஒரு நியூஸ் பேப்பரை உள்ளே விட்டு வெளியே எடுக்கலாம். இக்கோயிலில் ஆடிப்பூரத்தன்று அம்மனுக்கு வளைகாப்பு நடைபெறும். அப்பொழுது மடியில் 'முளைப்பயிறு கட்டுதல்' நடைபெறும். குழந்தைப் பேறு இல்லாதவர்கள் அதை வாங்கி உண்டால் குழந்தைப் பேறு கிடைக்கும் என்பது நம்பிக்கை!

- என். வளர்மதி, தர்மபுரி - 5





வேலூரிலிருந்து வடமேற்கே மூன்று கி.மீ தூரத்தில் உள்ள சேண்பாக்கத்தில் உள்ளது சுயம்பு செல்வ விநாயகர் ஆலயம். கோபுரம் இல்லா கோயில். ஆலயம் அமைத்த அரசர் கனவில் விநாயகர் தோன்றி ''எனக்கு கோபுரம் கூடாது. வான் வழி செல்லும் சித்தர்கள் என்னை வணங்குவர். ஆக மறைப்பு கூடாது'' என்றதால் அவ்வண்ணமே உள்ளது. வான்பார்த்த திறந்தவெளி வாசலில் 11-சுயம்பு விநாயகர்கள் 'ஓம்' என்ற வடிவத்தினுள் அமைந்துள்ளனர். மிகச் சிறந்த வரம் அருளும் இவ்விநாயகர்களை 'ஏகாதச பிள்ளையார்' என்று கூறுவர்.

*- காமாட்சி சத்தியநாராயணன், வேலூர் - 12*



24 Supplement to Mangayar Malar July 2010



வேலூரிலிருந்து வடமேற்கே மூன்று கி.மீ தூரத்தில் உள்ள சேண்பாக்கத்தில் உள்ளது சுயம்பு செல்வ விநாயகர் ஆலயம். கோபுரம் இல்லா கோயில். ஆலயம் அமைத்த அரசர் கனவில் விநாயகர் தோன்றி ''எனக்கு கோபுரம் கூடாது. வான் வழி செல்லும் சித்தர்கள் என்னை வணங்குவர். ஆக மறைப்பு கூடாது'' என்றதால் அவ்வண்ணமே உள்ளது. வான்பார்த்த திறந்தவெளி வாசலில் 11-சுயம்பு விநாயகர்கள் 'ஓம்' என்ற வடிவத்தினுள் அமைந்துள்ளனர். மிகச் சிறந்த வரம் அருளும் இவ்விநாயகர்களை 'ஏகாதச பிள்ளையார்' என்று கூறுவர்.

*- காமாட்சி சத்தியநாராயணன், வேலூர் - 12*

என்றும் உங்களுடன்
மங்கையர் மலர் தரத்திலும் நம்பர் 1 மகளிர் மாத இதழ்!

கோவையிலிருந்து மேட்டுப்பாளையம் செல்லும் வழியில் உள்ள காரமடை என்னும் ஊரில் உள்ளது அரங்கநாத ஸ்வாமி திருக்கோயில். மூலவராகிய பெருமாள் நான்கு, பட்டைச் சதுரமாக, ஓரடி உயரத்தில் காட்சி அளிக்கிறார். கிழக்கு நோக்கிய திருமுக மண்டலம், இடதுபுறம் வெட்டுப்பட்ட தழும்பு, லிங்கம் போன்ற தோற்றத்தில் ஹரிஹர ஒற்றுமையை நிலை நாட்டுவது சிறப்பு. மூலவருக்கு வலது புறத்தில் ரங்க நாயகித் தாயார் சன்னதியும் இடது புறத்தில் ஆண்டாள் சன்னதியும் உள்ளன.

- கே. அனுசுயா, திருச்சி - 103

கோயில் சிறப்பு 64!

Supplement to Mangayar Malar July 2010 25

கோவையிலிருந்து மேட்டுப்பாளையம் செல்லும் வழியில் உள்ள காரமடை என்னும் ஊரில் உள்ளது அரங்கநாத ஸ்வாமி திருக்கோயில். மூலவராகிய பெருமாள் நான்கு, பட்டைச் சதுரமாக, ஓரடி உயரத்தில் காட்சி அளிக்கிறார். கிழக்கு நோக்கிய திருமுக மண்டலம், இடதுபுறம் வெட்டுப்பட்ட தழும்பு, லிங்கம் போன்ற தோற்றத்தில் ஹரிஹர ஒற்றுமையை நிலை நாட்டுவது சிறப்பு. மூலவருக்கு வலது புறத்தில் ரங்க நாயகித் தாயார் சன்னதியும் இடது புறத்தில் ஆண்டாள் சன்னதியும் உள்ளன.

- கே. அனுசுயா, திருச்சி - 103

கோயில் சிறப்பு 64!



பவானியில் உள்ள சங்கமேஸ்வரர் கோயிலில் ஒரு அமிர்தக் குடம் உள்ளது. இது தூக்குவதற்கு எளிதாக இருக்கும். குழந்தைப் பேறு இல்லாதவர்கள் இக் குடத்தைத் தூக்கி இடுப்பில் வைத்துக்கொண்டு, கோயிலை மூன்றுமுறை வலம் வந்தால், குழந்தை பிறக்கும் என்ற நம்பிக்கை நிலவுகிறது.

- ஆர். ராஜலட்சுமி,
வண்டிமேடு



26 Supplement to Mangayar Malar July 2010



பவானியில் உள்ள சங்கமேஸ்வரர் கோயிலில் ஒரு அமிர்தக் குடம் உள்ளது. இது தூக்குவதற்கு எளிதாக இருக்கும். குழந்தைப் பேறு இல்லாதவர்கள் இக் குடத்தைத் தூக்கி இடுப்பில் வைத்துக்கொண்டு, கோயிலை மூன்றுமுறை வலம் வந்தால், குழந்தை பிறக்கும் என்ற நம்பிக்கை நிலவுகிறது.

- ஆர். ராஜலட்சுமி,
வண்டிமேடு

என்றும் உங்களுடன்
மங்கையர் மலர் தரத்திலும் நம்பர் 1 மகளிர் மாத இதழ்!

எந்தக் கோயிலுக்கும் இல்லாத சிறப்பு, தஞ்சாவூர் மாவட்டத்தில் புன்னைநல்லூர் மாரியம்மன் கோயிலுக்கு அருகே உள்ள கோதண்டராமர் கோயிலுக்கு உண்டு. இங்கு இராமர், சீதை, இலட்சுமணன், சுக்ரீவன் விக்கிரங்கள் சிறப்பான சாளக்கிராமத்தில் செய்யப் பெற்றவையாகும். அன்று ஆட்சி புரிந்த மராட்டிய மன்னருக்கு, நேபாள மன்னரால் பரிசளிக்கப் பெற்றவை. சாளக்கிராமத்திலான தெய்வங்களை வழிபட்டால் கவலை தீரும். நன்மை கிடைக்கும்.

- எம். ராணிமுருகதாஸ், தஞ்சாவூர்




Supplement to Mangayar Malar July 2010 27

எந்தக் கோயிலுக்கும் இல்லாத சிறப்பு, தஞ்சாவூர் மாவட்டத்தில் புன்னைநல்லூர் மாரியம்மன் கோயிலுக்கு அருகே உள்ள கோதண்டராமர் கோயிலுக்கு உண்டு. இங்கு இராமர், சீதை, இலட்சுமணன், சுக்ரீவன் விக்கிரங்கள் சிறப்பான சாளக்கிராமத்தில் செய்யப் பெற்றவையாகும். அன்று ஆட்சி புரிந்த மராட்டிய மன்னருக்கு, நேபாள மன்னரால் பரிசளிக்கப் பெற்றவை. சாளக்கிராமத்திலான தெய்வங்களை வழிபட்டால் கவலை தீரும். நன்மை கிடைக்கும்.

- எம். ராணிமுருகதாஸ், தஞ்சாவூர்





திருப்போரூரிலிருந்து 5 கி.மீ தொலைவில் உள்ளது காட்டூர். இங்கு வைத்தியலிங்கேஸ்வரர் கோயில் உள்ளது. அதில் வீற்றிருக்கும் தையல் நாயகி அம்மனுக்கு மூன்று வெள்ளிக்கிழமை நெய் விளக்கேற்றி வேண்டினால், கர்ப்பிணிப் பெண்களுக்கு சுகப் பிரசவமாகும்.

*- பத்மினி கிருஷ்ணன்,*
*ஜெம்ஷாட்பூர்-1*



28 Supplement to Mangayar Malar July 2010



திருப்போரூரிலிருந்து 5 கி.மீ தொலைவில் உள்ளது காட்டூர். இங்கு வைத்தியலிங்கேஸ்வரர் கோயில் உள்ளது. அதில் வீற்றிருக்கும் தையல் நாயகி அம்மனுக்கு மூன்று வெள்ளிக்கிழமை நெய் விளக்கேற்றி வேண்டினால், கர்ப்பிணிப் பெண்களுக்கு சுகப் பிரசவமாகும்.

*- பத்மினி கிருஷ்ணன்,*
*ஜெம்ஷாட்பூர்-1*

என்றும் உங்களுடன்
**மங்கையர் மலர்** தரத்திலும் நம்பர் 1 மகளிர் மாத இதழ்!

தஞ்சாவூரிலிருந்து மெலட்டூர் செல்லும் சாலையில் தென்குடித்திட்டை என்ற தலம். இக்கோயிலில் ஈசன், சிவ லிங்க வடிவில் காட்சி தருகிறார். இறைவனுக்கும் இறை விக்கும் நடுவே குரு பகவான் தனி சன்னிதியில் நின்ற கோலத்தில் அருள் பாலிக்கிறார். இத் திருக்கோயில் மூலஸ்தானத்தில் சந்திர காந்தக்கல் வைத்துக் கட்டப்பட்டுள்ளது. இக் கல், சந்திரனின் குளிர்ச்சியைத் தன்னுள் ஈர்த்து, இருபத்தைந்து நிமிடத்துக்கு ஒருமுறை சொட்டுநீராக இறைவன் மீது விழுந்து நித்யாபிஷேகம் செய்யும் அதிசயத்தைக் காணலாம்.

*- எஸ். விஜயா சீனிவாசன்,*
*திருச்சி - 13*

கோயில் சிறப்பு 64!

Supplement to Mangayar Malar July 2010 29

தஞ்சாவூரிலிருந்து மெலட்டூர் செல்லும் சாலையில் தென்குடித்திட்டை என்ற தலம். இக்கோயிலில் ஈசன், சிவ லிங்க வடிவில் காட்சி தருகிறார். இறைவனுக்கும் இறை விக்கும் நடுவே குரு பகவான் தனி சன்னிதியில் நின்ற கோலத்தில் அருள் பாலிக்கிறார். இத் திருக்கோயில் மூலஸ்தானத்தில் சந்திர காந்தக்கல் வைத்துக் கட்டப்பட்டுள்ளது. இக் கல், சந்திரனின் குளிர்ச்சியைத் தன்னுள் ஈர்த்து, இருபத்தைந்து நிமிடத்துக்கு ஒருமுறை சொட்டுநீராக இறைவன் மீது விழுந்து நித்யாபிஷேகம் செய்யும் அதிசயத்தைக் காணலாம்.

- எஸ். விஜயா சீனிவாசன்,
திருச்சி - 13

கோயில் சிறப்பு 64!



முருகப் பெருமானுக்குக் கட்டப்பட்ட முதல் திருக்கோயில் என்ற சிறப்பை, புதுக்கோட்டைக்கு அருகிலுள்ள 'ஒற்றைக் கண்ணூர்' தலம் பெறுகிறது. முதலாம் ஆதித்த சோழன் இக்கோயிலைக் கட்டியதாகக் கூறுகின்றனர். இக் கோயிலில் முருகனுக்கு வாகனமாக யானை உள்ளது. முருகப் பெருமான் ஒரு திருக்கரத்தில் ஜபமாலையுடனும் மறு திருக்கரத்தில் சின்முத்திரையுடன் கூடிய நிலையிலும் இருந்து அருள் பாலிக்கிறார்.

- ஆர். அம்பிகா,
மதுரை - 20



30 Supplement to Mangayar Malar July 2010



முருகப் பெருமானுக்குக் கட்டப்பட்ட முதல் திருக்கோயில் என்ற சிறப்பை, புதுக்கோட்டைக்கு அருகிலுள்ள 'ஒற்றைக் கண்ணூர்' தலம் பெறுகிறது. முதலாம் ஆதித்த சோழன் இக்கோயிலைக் கட்டியதாகக் கூறுகின்றனர். இக் கோயிலில் முருகனுக்கு வாகனமாக யானை உள்ளது. முருகப் பெருமான் ஒரு திருக்கரத்தில் ஜபமாலையுடனும் மறு திருக்கரத்தில் சின்முத்திரையுடன் கூடிய நிலையிலும் இருந்து அருள் பாலிக்கிறார்.

- ஆர். அம்பிகா,
மதுரை - 20

என்றும் உங்களுடன்
மங்கையர் மலர் தரத்திலும் நம்பர் 1 மகளிர் மாத இதழ்!

சென்னை திருவள்ளூரிலுள்ள வைத்திய வீரராகவப் பெருமாள் கோயிலுக்குத் தொடர்ந்து ஆறு அமாவாசை சென்று, கோயிலிலுள்ள குளத்தில் உருண்டை வெல்லத்தைக் கரைத்து, பின் பெருமாளை வழிபட்டால், வெல்லம் நீரில் கரைந்து மறைவதுபோல், நம் உடம்பிலுள்ள வியாதிகள் எல்லாம் மறைந்து, பூரண நலம் கிடைக்கும் என்பது நம்பிக்கை. இத்தலத்துப் பெருமாள் பேரே வைத்திய வீரராகவப் பெருமாள் என்பதாகும்.

*– ச. ஜெயலெட்சுமி, சென்னை - 106*




Supplement to Mangayar Malar July 2010 31

சென்னை திருவள்ளூரிலுள்ள வைத்திய வீரராகவப் பெருமாள் கோயிலுக்குத் தொடர்ந்து ஆறு அமாவாசை சென்று, கோயிலிலுள்ள குளத்தில் உருண்டை வெல்லத்தைக் கரைத்து, பின் பெருமாளை வழிபட்டால், வெல்லம் நீரில் கரைந்து மறைவதுபோல், நம் உடம்பிலுள்ள வியாதிகள் எல்லாம் மறைந்து, பூரண நலம் கிடைக்கும் என்பது நம்பிக்கை. இத்தலத்துப் பெருமாள் பேரே வைத்திய வீரராகவப் பெருமாள் என்பதாகும்.

*– ச. ஜெயலெட்சுமி, சென்னை - 106*





சாய்ந்த கோபுரம் நமக்குத் தெரியும்; இத்தாலி நாட்டில் உள்ள பைசா கோபுரம். ஆனால் சாய்ந்த நிலையில் உள்ள கோயில் எங்காவது உண்டா? உண்டு! அதுவும் நம் நாட்டிலேயே!

ஒரிசா மாநிலத்தில் ஹியுமா என்ற கிராமத்தில் உள்ள சிவன் கோயில் சாய்ந்த நிலையில் உள்ள கோயில் கோபுரமாகும். இந்தக் கோபும் 47 டிகிரி கோணத்தில் சாய்வாக உள்ளது. 1670-ம் ஆண்டு சவுகான் வம்சத்தைச் சேர்ந்த பலியர் சிங் என்ற அரசனால் கட்டப்பட்டது.



- ஆர்.கோபிகா,
திண்டுக்கல்



32 Supplement to Mangayar Malar July 2010



சாய்ந்த கோபுரம் நமக்குத் தெரியும்; இத்தாலி நாட்டில் உள்ள பைசா கோபுரம். ஆனால் சாய்ந்த நிலையில் உள்ள கோயில் எங்காவது உண்டா? உண்டு! அதுவும் நம் நாட்டிலேயே!

ஒரிசா மாநிலத்தில் ஹியுமா என்ற கிராமத்தில் உள்ள சிவன் கோயில் சாய்ந்த நிலையில் உள்ள கோயில் கோபுரமாகும். இந்தக் கோபும் 47 டிகிரி கோணத்தில் சாய்வாக உள்ளது. 1670-ம் ஆண்டு சவுகான் வம்சத்தைச் சேர்ந்த பலியர் சிங் என்ற அரசனால் கட்டப்பட்டது.



- ஆர்.கோபிகா,
திண்டுக்கல்

என்றும் உங்களுடன்
மங்கையர் மலர் தரத்திலும் நம்பர் 1 மகளிர் மாத இதழ்!

விழுப்புரம் மாவட்டத்தில் உள்ள வீரபயங்கரம் என்ற ஊரில் ஐயனார் கோயில் உள்ளது. தனியார் பரம்பரைக்குச் சொந்தமான அந்தக் கோயிலைச் சுற்றி சிறியதும் பெரியதுமாக ஏராளமான குதிரைச் சிலைகள் உள்ளன. ஒரு சில யானை சிலைகளும், சூலமும், மணித் தூண்களும் உண்டு. ஒவ்வொன்றும் பக்தர்கள் தங்கள் கோரிக்கைகள் நிறைவேறியதற்கான அடையாளமாகச் செய்தவை. எப்போது பார்த்தாலும் ஏதாவது ஒரு சிலை புதியதாகச் செய்யப்பட்டு கொண்டிருக்கும் அதிசயமிக்க கோயில் இது. மேலும், இங்கு நல்ல தங்காளுக்கென தனி சன்னிதியும் உள்ளது.

*- சாந்தி, அம்மையப்பன்.*

கோயில் சிறப்பு 64!

Supplement to Mangayar Malar July 2010 33

விழுப்புரம் மாவட்டத்தில் உள்ள வீரபயங்கரம் என்ற ஊரில் ஐயனார் கோயில் உள்ளது. தனியார் பரம்பரைக்குச் சொந்தமான அந்தக் கோயிலைச் சுற்றி சிறியதும் பெரியதுமாக ஏராளமான குதிரைச் சிலைகள் உள்ளன. ஒரு சில யானை சிலைகளும், சூலமும், மணித் தூண்களும் உண்டு. ஒவ்வொன்றும் பக்தர்கள் தங்கள் கோரிக்கைகள் நிறைவேறியதற்கான அடையாளமாகச் செய்தவை. எப்போது பார்த்தாலும் ஏதாவது ஒரு சிலை புதியதாகச் செய்யப்பட்டு கொண்டிருக்கும் அதிசயமிக்க கோயில் இது. மேலும், இங்கு நல்ல தங்காளுக்கென தனி சன்னிதியும் உள்ளது.

- சாந்தி, அம்மையப்பன்.

கோயில் சிறப்பு 64!



கரூர் மாவட்டம் தாடிக்கொம்பு பிரசன்ன வெங்கடேசப் பெருமாள் கோயிலில் பல அதிசயங்களைக் காணலாம். கோயிலின் பெரிய மண்டபத்துக்கு அஸ்திவாரம் கிடையாது. தாயாரின் முகத்தில் ஒருபுறம் கோபமும், மறுபுறம் சாந்தமும் தவழும் விதமாக வடிவமைக்கப்பட்டுள்ளது. அபிஷேக நீர், பக்தர்களின் கண்ணுக்குப் புலப்படாமல் பாறைகளினூடே பயணித்து ஓர் குளத்தை சென்றடைகிறது. அபிஷேக நீர் மட்டுமல்ல மழை நீரும் கொஞ்சம்கூட வீணாகாமல் அந்தக் குளத்தைச் சென்றடைகிறது. அக் காலத்திலேயே மழை நீர் சேகரிப்பைப் பயன்படுத்தி நிலத்தடி நீர் உயர உன்னதமான வழி வகுத்துள்ளது பெரிய ஆச்சரியம்.

- ஆர். கவிதா, சீர்காழி



34 Supplement to Mangayar Malar July 2010



கரூர் மாவட்டம் தாடிக்கொம்பு பிரசன்ன வெங்கடேசப் பெருமாள் கோயிலில் பல அதிசயங்களைக் காணலாம். கோயிலின் பெரிய மண்டபத்துக்கு அஸ்திவாரம் கிடையாது. தாயாரின் முகத்தில் ஒருபுறம் கோபமும், மறுபுறம் சாந்தமும் தவழும் விதமாக வடிவமைக்கப்பட்டுள்ளது. அபிஷேக நீர், பக்தர்களின் கண்ணுக்குப் புலப்படாமல் பாறைகளினூடே பயணித்து ஓர் குளத்தை சென்றடைகிறது. அபிஷேக நீர் மட்டுமல்ல மழை நீரும் கொஞ்சம்கூட வீணாகாமல் அந்தக் குளத்தைச் சென்றடைகிறது. அக் காலத்திலேயே மழை நீர் சேகரிப்பைப் பயன்படுத்தி நிலத்தடி நீர் உயர உன்னதமான வழி வகுத்துள்ளது பெரிய ஆச்சரியம்.

- ஆர். கவிதா, சீர்காழி

என்றும் உங்களுடன்
மங்கையர் மலர் தரத்திலும் நம்பர் 1 மகளிர் மாத இதழ்!

திருவாரூரில் உள்ள ஸ்ரீ தியாகராஜ சுவாமி கோயிலில் ஈசன் சுயம்புலிங்கமாக வன்மீகநாதர் என்ற புற்றிடங் கொண்டீசுவரராக அருள்புரிகிறார். தினமும் மாலை ஆறு மணிக்கு நித்ய பிரதோஷ வழிபாடு நடைபெறுகிறது. கோயிலின் வெளிப் பிராகாரத்தில் பல லிங்கங்கள் அமைந்துள்ளன. அம்பிகை ஸ்ரீ கமலாம்பாள், இடது காலை கீழே வைத்து வலது காலை அதன் மேல் போட்டுக்கொண்டு தவக்கோலத்தில் கருணையே வடிவாக இருக்கிறாள். கமலமுனிவரின் சமாதி அமைந்துள்ளது. ரௌத்திர துர்க்கையும் உள்ளது. சர்வ தோஷப் பரிகாரத்தலம்.

- எஸ்.சுபா, சென்னை-14

கோயில் சிறப்பு 64!

Supplement to Mangayar Malar July 2010 35

திருவாரூரில் உள்ள ஸ்ரீ தியாகராஜ சுவாமி கோயிலில் ஈசன் சுயம்புலிங்கமாக வன்மீகநாதர் என்ற புற்றிடங் கொண்டீசுவரராக அருள்புரிகிறார். தினமும் மாலை ஆறு மணிக்கு நித்ய பிரதோஷ வழிபாடு நடைபெறுகிறது. கோயிலின் வெளிப் பிராகாரத்தில் பல லிங்கங்கள் அமைந்துள்ளன. அம்பிகை ஸ்ரீ கமலாம்பாள், இடது காலை கீழே வைத்து வலது காலை அதன் மேல் போட்டுக்கொண்டு தவக்கோலத்தில் கருணையே வடிவாக இருக்கிறாள். கமலமுனிவரின் சமாதி அமைந்துள்ளது. ரௌத்திர துர்க்கையும் உள்ளது. சர்வ தோஷப் பரிகாரத்தலம்.

- எஸ்.சுபா, சென்னை-14

கோயில் சிறப்பு 64!



தஞ்சை மாவட்டம் திருவையாறு 'பஞ்ச நதீஸ்வர ஸ்வாமி' கோயிலில் அம்பாள் தர்ம சம்வர்த்தினி சன்னதியின் அருகில் ஒரு கர்தூ ணில், தேசபிதா மகாத்மா காந்தியின் சிற்பமும் மறுபக்கம் பாரதமாதா சிற்பமும் உள்ளன! இந்த இரண்டு சிற்பங்களுக்கும் சுதந்திர தினம், குடி யரசு தினங்களில் அபிஷேகம் செய்து சந்தனம், குங்குமமிட்டு மலர் அணிவித்து அலங்கரிக் கிறார்கள். சிவனும் சக்தியும் கோயில் கொண் டுள்ள இடத்தில் தேசப்பிதாவும், பாரத மாதாவும் வடிவமைக்கப்பட்டுள்ளது அபூர்வமானது.

*- மன்னை ஜி.நீலா,*

*சென்னை-18*



36 Supplement to Mangayar Malar July 2010



தஞ்சை மாவட்டம் திருவையாறு 'பஞ்ச நதீஸ்வர ஸ்வாமி' கோயிலில் அம்பாள் தர்ம சம்வர்த்தினி சன்னதியின் அருகில் ஒரு கர்தூ ணில், தேசபிதா மகாத்மா காந்தியின் சிற்பமும் மறுபக்கம் பாரதமாதா சிற்பமும் உள்ளன! இந்த இரண்டு சிற்பங்களுக்கும் சுதந்திர தினம், குடி யரசு தினங்களில் அபிஷேகம் செய்து சந்தனம், குங்குமமிட்டு மலர் அணிவித்து அலங்கரிக் கிறார்கள். சிவனும் சக்தியும் கோயில் கொண் டுள்ள இடத்தில் தேசப்பிதாவும், பாரத மாதாவும் வடிவமைக்கப்பட்டுள்ளது அபூர்வமானது.

*- மன்னை ஜி.நீலா,*

*சென்னை-18*

என்றும் உங்களுடன்
மங்கையர் மலர் தரத்திலும் நம்பர் 1 மகளிர் மாத இதழ்!

பொதுவாக ஆஞ்சயேநருக்குத்தான் வடை மாலை சுற்றுவார்கள். ஈசுவரனுக்கு வடைமாலை சாற்றும் பழக்கம் கிடையாது. ஆனால், திருவையாறு தலத்தில் தெற்கு கோபுர வாயிலில் வீற்றிருக்கும் ஆட்கொண் டேஸ்வரருக்கு வடைமாலை சாற்றும் வழக்கம் இன்றும் நடைபெறுகின்றது. சில சமயங்களில் லட்சம் வடை களைக் கொண்ட மாலைகள்கூடச் சாற்றப்படுவதுண்டு.

*- ஜி. ஞானம்பாள், மதுரை - 11*

கோயில் சிறப்பு 64!

Supplement to Mangayar Malar July 2010 37

பொதுவாக ஆஞ்சயேநருக்குத்தான் வடை மாலை சுற்றுவார்கள். ஈசுவரனுக்கு வடைமாலை சாற்றும் பழக்கம் கிடையாது. ஆனால், திருவையாறு தலத்தில் தெற்கு கோபுர வாயிலில் வீற்றிருக்கும் ஆட்கொண் டேஸ்வரருக்கு வடைமாலை சாற்றும் வழக்கம் இன்றும் நடைபெறுகின்றது. சில சமயங்களில் லட்சம் வடை களைக் கொண்ட மாலைகள்கூடச் சாற்றப்படுவதுண்டு.

*- ஜி. ஞானம்பாள், மதுரை - 11*

கோயில் சிறப்பு 64!



நெல்லையிலிருந்து திருச்செந்தூர் செல்லும் சாலையில், பாளையங்கோட்டையைத் தாண்டியவுடன் ஒரு பிள்ளையார் கோயில் உள்ளது. இங்கு தேங்காய் விடலை போட்டால், சிரட்டை (கொட்டாங்குச்சி) தனியாகவும், தேங்காய் தனியாகவும் சிதறும். இந்தப் பிள்ளையார் 'சிரட்டைப் பிள்ளையார்' என்றே அழைக்கப்படுகிறார்.

- ராதாநாயகம்,
சென்னை - 87



38 Supplement to Mangayar Malar July 2010



நெல்லையிலிருந்து திருச்செந்தூர் செல்லும் சாலையில், பாளையங்கோட்டையைத் தாண்டியவுடன் ஒரு பிள்ளையார் கோயில் உள்ளது. இங்கு தேங்காய் விடலை போட்டால், சிரட்டை (கொட்டாங்குச்சி) தனியாகவும், தேங்காய் தனியாகவும் சிதறும். இந்தப் பிள்ளையார் 'சிரட்டைப் பிள்ளையார்' என்றே அழைக்கப்படுகிறார்.

- ராதாநாயகம்,
சென்னை - 87

என்றும் உங்களுடன்
மங்கையர் மலர் தரத்திலும் நம்பர் 1 மகளிர் மாத இதழ்!

நெல்லை மாவட்டம் திருக்குறுக்குடி பெருமாள் கோயில் பிராகாரத்தில் பைரவர் சன்னதியில் ஒரு அதிசயம். நின்ற பைரவர் சிலை அருகே இரண்டு தொங்கு விளக்குகள் திரியினால் ஏற்றப்படுகின்றன. ஒன்று பைரவர் மூக்குக்கு நேராக (பக்கவாட்டில்) உள்ளது. மற்றொன்று இடுப்புக்கு அருகே இருக்கிறது. எரிகின்ற விளக்குகளில் ஒன்று அசைந்து கொண்டிருக்கும். அது மூக்குக்கு அருகே உள்ளது. கீழே உள்ளது அசையாமல் எரிகிறது. கர்ப்ப கிரகத்தில் காற்று சென்று வர வசதியில்லை. பைரவர் மூச்சுவிடுவதால் மேலுள்ள திரி விளக்கு அசைகிறது என்பது நம்பிக்கை!

- வே.விஜயா, சென்னை - 35



கோயில் சிறப்பு 64!

Supplement to Mangayar Malar July 2010 39

நெல்லை மாவட்டம் திருக்குறுக்குடி பெருமாள் கோயில் பிராகாரத்தில் பைரவர் சன்னதியில் ஒரு அதிசயம். நின்ற பைரவர் சிலை அருகே இரண்டு தொங்கு விளக்குகள் திரியினால் ஏற்றப்படுகின்றன. ஒன்று பைரவர் மூக்குக்கு நேராக (பக்கவாட்டில்) உள்ளது. மற்றொன்று இடுப்புக்கு அருகே இருக்கிறது. எரிகின்ற விளக்குகளில் ஒன்று அசைந்து கொண்டிருக்கும். அது மூக்குக்கு அருகே உள்ளது. கீழே உள்ளது அசையாமல் எரிகிறது. கர்ப்ப கிரகத்தில் காற்று சென்று வர வசதியில்லை. பைரவர் மூச்சுவிடுவதால் மேலுள்ள திரி விளக்கு அசைகிறது என்பது நம்பிக்கை!

- வே.விஜயா, சென்னை - 35



கோயில் சிறப்பு 64!



தஞ்சாவூரிலிருந்து திருக்காட்டுப்பள்ளி போகும் பாதையில் உள்ளது கண்டமங்கலம். இங்கே, சாலையில் வீற்றிருக்கும் வாத்தலை நாச்சி அம்மன் கோயிலில் நாம் வேண்டிக்கொண்டு கட்டிய மணிகள் அடுத்தமுறை வந்து பார்க்கும்போது வேப்ப மரத்தின் உள்ளே போய்விட்டிருக்கும். எத்தனையோ மணிகள் வேப்ப மரத்தினுள்ளே இருக்கும் காட்சியைக் கண்கூடாகப் பார்க்கலாம். முதலில் எல்லாரும் கட்டுகிற மணி வேப்ப மரத்தில் உள்ள கயிறு (அ) சங்கிலியில்தான் இருக்கும். அதன் பின்னர்தான் மரத்தினுள்ளே காணப்படும். நம் பிரார்த்தனை நிறைவேற்றிவிட்டது; அதாவது அம்மன் ஏற்றுக்கொண்டாள் என்பதற்கு சாட்சியாம் இது!

- எஸ். வாசந்தி, தஞ்சை



40 Supplement to Mangayar Malar July 2010



தஞ்சாவூரிலிருந்து திருக்காட்டுப்பள்ளி போகும் பாதையில் உள்ளது கண்டமங்கலம். இங்கே, சாலையில் வீற்றிருக்கும் வாத்தலை நாச்சி அம்மன் கோயிலில் நாம் வேண்டிக்கொண்டு கட்டிய மணிகள் அடுத்தமுறை வந்து பார்க்கும்போது வேப்ப மரத்தின் உள்ளே போய்விட்டிருக்கும். எத்தனையோ மணிகள் வேப்ப மரத்தினுள்ளே இருக்கும் காட்சியைக் கண்கூடாகப் பார்க்கலாம். முதலில் எல்லாரும் கட்டுகிற மணி வேப்ப மரத்தில் உள்ள கயிறு (அ) சங்கிலியில்தான் இருக்கும். அதன் பின்னர்தான் மரத்தினுள்ளே காணப்படும். நம் பிரார்த்தனை நிறைவேற்றிவிட்டது; அதாவது அம்மன் ஏற்றுக்கொண்டாள் என்பதற்கு சாட்சியாம் இது!

- எஸ். வாசந்தி, தஞ்சை

என்றும் உங்களுடன்
மங்கையர் மலர் தரத்திலும் நம்பர் 1 மகளிர் மாத இதழ்!

பக்தர்களின் குறைகளைத் தீர்க்க கிருஷ்ண பகவான் எவ்வளவோ அவதாரம் எடுத்திருக்கிறார். ஆனால், பசுக் கூட்டங்களுக்கு அவர் தரிசனம் கொடுக்கிறார். எங்கு தெரியுமா? 108 திவ்யதேசங்களில் ஒன்றான நாத துவாரகையில். ராஜஸ்தானில், உதய்ப் பூருக்கு அருகே உள்ள இக்கோயிலில் கிருஷ்ணர் வருடத்துக்கு ஒருநாள் பசுக்களுக்கு மட்டும் தரிசனம் தருகிறார். ஆயர்குலத்தில் உதித்த மாதவன் அல்லவா அவன்!

*- ஆனந்தவள்ளி, சென்னை - 93*




Supplement to Mangayar Malar July 2010 41

பக்தர்களின் குறைகளைத் தீர்க்க கிருஷ்ண பகவான் எவ்வளவோ அவதாரம் எடுத்திருக்கிறார். ஆனால், பசுக் கூட்டங்களுக்கு அவர் தரிசனம் கொடுக்கிறார். எங்கு தெரியுமா? 108 திவ்யதேசங்களில் ஒன்றான நாத துவாரகையில். ராஜஸ்தானில், உதய்ப் பூருக்கு அருகே உள்ள இக்கோயிலில் கிருஷ்ணர் வருடத்துக்கு ஒருநாள் பசுக்களுக்கு மட்டும் தரிசனம் தருகிறார். ஆயர்குலத்தில் உதித்த மாதவன் அல்லவா அவன்!

*- ஆனந்தவள்ளி, சென்னை - 93*



காரைக்குடியில் இருந்து 30 கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது பாகம்பிரியாள் கோயில். சுவாமி பெயர் வல்மீகநாதர். அம்மன் பெயர் பாகம்பிரியாள். விஷக்கடியால் அவதிப்படுபவர்கள் நேரில் இங்கு வந்து புஷ்கரிணியில் குளித்து ஈரத்துணியுடன் கோயிலை வலம் வந்து சுவாமியைப் பிரார்த்தனை செய்து இங்குள்ள அர்த்த மண்டபத்தில் ஒருநாள் இரவு தங்கினால் விரைவில் நோய் குணமாகும். இங்குள்ள வில்வ மரத்தடி விநாயகரை வணங்கி, சுவாமி அம்மாளை தரிசித்து வலம் வருவோமேயானால் எல்லா தோஷங்களும் விலகி, நன்மைகள் உண்டாகும்.



- பி. நாகலெட்சுமி,
சென்னை - 40



42 Supplement to Mangayar Malar July 2010

காரைக்குடியில் இருந்து 30 கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது பாகம்பிரியாள் கோயில். சுவாமி பெயர் வல்மீகநாதர். அம்மன் பெயர் பாகம்பிரியாள். விஷக்கடியால் அவதிப்படுபவர்கள் நேரில் இங்கு வந்து புஷ்கரிணியில் குளித்து ஈரத்துணியுடன் கோயிலை வலம் வந்து சுவாமியைப் பிரார்த்தனை செய்து இங்குள்ள அர்த்த மண்டபத்தில் ஒருநாள் இரவு தங்கினால் விரைவில் நோய் குணமாகும். இங்குள்ள வில்வ மரத்தடி விநாயகரை வணங்கி, சுவாமி அம்மாளை தரிசித்து வலம் வருவோமேயானால் எல்லா தோஷங்களும் விலகி, நன்மைகள் உண்டாகும்.



- பி. நாகலெட்சுமி,
சென்னை - 40

என்றும் உங்களுடன்
மங்கையர் மலர் தரத்திலும் நம்பர் 1 மகளிர் மாத இதழ்!

கும்பகோணத்துக்கு அருகிலுள்ள பட்டீச்வரம் தேனு புரீச்வரர் ஆலயத்துக்கு மிக அருகிலேயே உள்ளது சக்தி வனேஸ்வர சுவாமி திருக்கோயில். கோயிலின் பெயர் திருச்சக்திமுற்றம். திருமணத் தடங்கல் ஏற்படுபவர்கள் கோயிலில் 11 வாரம் அர்ச்சனைக்குக் கொடுத்து ப்ரசாதம் உண்டு வந்தால் திருமணம் கை கூடுவது கண்கூடு. சிவனை அம்பாள் தழுவிய திருக்கோலம் அபூர்வமானது.

*- செயல் அலுவலர்,*
*பட்டீஸ்வரம்*

கோயில் சிறப்பு 64!

Supplement to Mangayar Malar July 2010 43

கும்பகோணத்துக்கு அருகிலுள்ள பட்டீச்வரம் தேனு புரீச்வரர் ஆலயத்துக்கு மிக அருகிலேயே உள்ளது சக்தி வனேஸ்வர சுவாமி திருக்கோயில். கோயிலின் பெயர் திருச்சக்திமுற்றம். திருமணத் தடங்கல் ஏற்படுபவர்கள் கோயிலில் 11 வாரம் அர்ச்சனைக்குக் கொடுத்து ப்ரசாதம் உண்டு வந்தால் திருமணம் கை கூடுவது கண்கூடு. சிவனை அம்பாள் தழுவிய திருக்கோலம் அபூர்வமானது.

- செயல் அலுவலர்,
பட்டீஸ்வரம்

கோயில் சிறப்பு 64!



உடுப்பி கிருஷ்ணனை, துவாரங்கள் வழியாகத்தான் பக்தர்கள் தரிசிக்க இயலும். இப்படி தரிசிப்பதை 'கனகனகின்டி' என அழைக்கின்றனர். 16ம் நூற்றாண்டில் கனகதாசா என்ற கிருஷ்ண பக்தர் வசித்து வந்தார். இவர் தாழ்த்தப்பட்ட இனத்தைச் சேர்ந்தவர். இதனால் கோயில் பிரமுகர்கள் உள்ளே விடவில்லை. பக்தனின் இந்த அவலத்தை கண்டு வருந்திய ஸ்ரீ கிருஷ்ணன், பக்கவாட்டு சுவரில் ஓட்டைகளைப் போட்டு, அதற்கு ஏற்ப தன் முகத்தையும் திருப்பி, கனக தாசருக்குத் தரிசனம் தந்தார். அத்துடன் அன்றுமுதல் அனைவருமே அந்தத் துவாரங்கள் வழியே மட்டும் தரிசிக்கும் நிலையும் ஏற்பட்டது.

- 'பட்டு' ராஜிராதா, பெங்களூர் - 34



44 Supplement to Mangayar Malar July 2010



உடுப்பி கிருஷ்ணனை, துவாரங்கள் வழியாகத்தான் பக்தர்கள் தரிசிக்க இயலும். இப்படி தரிசிப்பதை 'கனகனகின்டி' என அழைக்கின்றனர். 16ம் நூற்றாண்டில் கனகதாசா என்ற கிருஷ்ண பக்தர் வசித்து வந்தார். இவர் தாழ்த்தப்பட்ட இனத்தைச் சேர்ந்தவர். இதனால் கோயில் பிரமுகர்கள் உள்ளே விடவில்லை. பக்தனின் இந்த அவலத்தை கண்டு வருந்திய ஸ்ரீ கிருஷ்ணன், பக்கவாட்டு சுவரில் ஓட்டைகளைப் போட்டு, அதற்கு ஏற்ப தன் முகத்தையும் திருப்பி, கனக தாசருக்குத் தரிசனம் தந்தார். அத்துடன் அன்றுமுதல் அனைவருமே அந்தத் துவாரங்கள் வழியே மட்டும் தரிசிக்கும் நிலையும் ஏற்பட்டது.

- 'பட்டு' ராஜிராதா, பெங்களூர் - 34

என்றும் உங்களுடன்
மங்கையர் மலர் தரத்திலும் நம்பர் 1 மகளிர் மாத இதழ்!

'அபீஷ்ட வரத கணபதி' - திருவையாறு திருத் தலத்தில் மேட்டுத் தெருவில் அருள்புரிகிறார். திருவையாறு வழியாக வந்த காவிரி, அந்த எழில் மிக்க ஊரினைக் கண்டு அங்கேயே தங்கிவிட்டதால், சமுத்திரராஜன் இங்கு அருள்பாலிக்கும் அபீஷ்ட கணபதியை வழிபட்டு, காவிரி தன்னுள் சங்கமமாகும் பாக்கியத்தைப் பெற்றதாக புராணம் சொல்கிறது. இந்தக் கணபதியைத் தரிசித்தால் (சமுத்திரத்துக்குள் காவிரி சங்கமமாகியது போல) திருமணத்தடை நீங்கும் என்பது ஐதிகம்.

- ஜெயலெட்சுமி கோபாலன்,
சென்னை - 64




Supplement to Mangayar Malar July 2010 45

'அபீஷ்ட வரத கணபதி' - திருவையாறு திருத் தலத்தில் மேட்டுத் தெருவில் அருள்புரிகிறார். திருவையாறு வழியாக வந்த காவிரி, அந்த எழில் மிக்க ஊரினைக் கண்டு அங்கேயே தங்கிவிட்டதால், சமுத்திரராஜன் இங்கு அருள்பாலிக்கும் அபீஷ்ட கணபதியை வழிபட்டு, காவிரி தன்னுள் சங்கமமாகும் பாக்கியத்தைப் பெற்றதாக புராணம் சொல்கிறது. இந்தக் கணபதியைத் தரிசித்தால் (சமுத்திரத்துக்குள் காவிரி சங்கமமாகியது போல) திருமணத்தடை நீங்கும் என்பது ஐதிகம்.

- ஜெயலெட்சுமி கோபாலன்,
சென்னை - 64





கும்பகோணத்திலிருந்து ஐந்தாறு கிலோ மீட்டர் தூரத்திலுள்ள இன்னம்பூர் சிவ ஸ்தலம். ஈசனின் பெயர் எழுத்தறிநாதர். அகத்தியர் சிவனிடம் இலக்கணம் பயின்றது இங்குதான். சரியாகப் பேச வராத குழந்தைகளுக்கு இக் கோயிலின் அர்ச்சகர் தேன் தொட்டு நாக்கில் எழுதுவார். பிறகு குழந்தைகளுக்கு நன்றாகப் பேச்சு வரும். படிப்பில் மந்தம், ஞாபக மறதி அதிகம் உள்ள பிள்ளைகளுக்குத் தேன் தொட்டு பூ காம்பால் பிள்ளைகளின் நாக்கில் அர்ச்சகர் எழுதுகிறார். இதன்பிறகு படிப்பில் சுட்டியாக விளங்குவார்கள் என்பது நம்பிக்கை!

- அ.லக்ஷ்மிதேவி, புத்தூர்



46 Supplement to Mangayar Malar July 2010



கும்பகோணத்திலிருந்து ஐந்தாறு கிலோ மீட்டர் தூரத்திலுள்ள இன்னம்பூர் சிவ ஸ்தலம். ஈசனின் பெயர் எழுத்தறிநாதர். அகத்தியர் சிவனிடம் இலக்கணம் பயின்றது இங்குதான். சரியாகப் பேச வராத குழந்தைகளுக்கு இக் கோயிலின் அர்ச்சகர் தேன் தொட்டு நாக்கில் எழுதுவார். பிறகு குழந்தைகளுக்கு நன்றாகப் பேச்சு வரும். படிப்பில் மந்தம், ஞாபக மறதி அதிகம் உள்ள பிள்ளைகளுக்குத் தேன் தொட்டு பூ காம்பால் பிள்ளைகளின் நாக்கில் அர்ச்சகர் எழுதுகிறார். இதன்பிறகு படிப்பில் சுட்டியாக விளங்குவார்கள் என்பது நம்பிக்கை!

- அ.லக்ஷ்மிதேவி, புத்தூர்

என்றும் உங்களுடன்
மங்கையர் மலர் தரத்திலும் நம்பர் 1 மகளிர் மாத இதழ்!

மூலவர்: மனோன்மணீஸ்வரர், அம்மன்: மனோன் மணீஸ்வரி. திருவெல்வேலி மாவட்டம் நான்கு நேரியிலிருந்து சுமார் 15 கிலோமீட்டர் தூரத்தில் வடக்கு விஜயநாராயணம் என்ற ஊரில் பௌர்ணமி அன்று கிரிவலம் வந்தால், நம் வேண்டுதல் நிறை வேறும். இங்கே சூட்சம ரூபத்தில் தவம் இருக்கும் சித்தர்களும், பக்தர்களுடன் சேர்ந்து வலம் வருவார் களாம்.

- முருகானந்தி, சென்னை - 50




Supplement to Mangayar Malar July 2010 47

மூலவர்: மனோன்மணீஸ்வரர், அம்மன்: மனோன் மணீஸ்வரி. திருவெல்வேலி மாவட்டம் நான்கு நேரியிலிருந்து சுமார் 15 கிலோமீட்டர் தூரத்தில் வடக்கு விஜயநாராயணம் என்ற ஊரில் பௌர்ணமி அன்று கிரிவலம் வந்தால், நம் வேண்டுதல் நிறை வேறும். இங்கே சூட்சம ரூபத்தில் தவம் இருக்கும் சித்தர்களும், பக்தர்களுடன் சேர்ந்து வலம் வருவார் களாம்.

- முருகானந்தி, சென்னை - 50





சென்னையில் இருந்து சுமார் 70 கிலோ மீட்டர் தூரத்தில் உள்ள கோயில் திருபுள்குழி. விஜயராகவப் பெருமாள், மரகதவல்லி தாயார் எழுந்தருளியுள்ளனர். பிள்ளைப் பேறு வேண்டும் பெண்கள் திருக்குளத்தில் குளித்து, வறுத்த பயிரை மடியில் கட்டிக்கொண்டு தாயார் சன்னிதியில் இரவு தங்குவார்கள். வறுத்த பயிறு, முளைத்திருந்தால் பிள்ளை பிறக்கும் என்று ஐதிகம்.

- ஜெயலெக்ஷ்மி சேஷாத்திரி,
கும்பகோணம்



48 Supplement to Mangayar Malar July 2010



சென்னையில் இருந்து சுமார் 70 கிலோ மீட்டர் தூரத்தில் உள்ள கோயில் திருபுள்குழி. விஜயராகவப் பெருமாள், மரகதவல்லி தாயார் எழுந்தருளியுள்ளனர். பிள்ளைப் பேறு வேண்டும் பெண்கள் திருக்குளத்தில் குளித்து, வறுத்த பயிரை மடியில் கட்டிக்கொண்டு தாயார் சன்னிதியில் இரவு தங்குவார்கள். வறுத்த பயிறு, முளைத்திருந்தால் பிள்ளை பிறக்கும் என்று ஐதிகம்.

- ஜெயலெக்ஷ்மி சேஷாத்திரி,
கும்பகோணம்

என்றும் உங்களுடன்
மங்கையர் மலர் தரத்திலும் நம்பர் 1 மகளிர் மாத இதழ்!

கன்னியாகுமரி மாவட்டம் நாகர்கோயிலில் உள்ள திருவட்டாறு என்ற ஊரில் உள்ள ரங்கநாதரை தரிசிப்பதில் ஒரு விசேஷம் உள்ளது. சயனக் கோலத்தில் உள்ள ரெங்க நாதரை மூன்று வாசல் வழியாக தரிசிக்க வேண்டும். முதல் வாசலில் சிரசைத் தரிசிக்கலாம். இரண்டாவது வாசலில் சரீர தரிசனம் பெறலாம். மூன்றாவது வாசலில் பாத தரிசனம் காணலாம். கேரளா கோயில் என்பதால் கமகமக்கும் அரைத்த சந்தனம் பிரசாதமாகக் கொடுக்கிறார்கள். இங்கு உள்ள ஆறு வட்டமாக உள்ளதால் இவ்வூருக்கு திருவட்டாறு என்று பெயர்!

- எஸ். உஷா, மதுரை - 20




Supplement to Mangayar Malar July 2010 49

கன்னியாகுமரி மாவட்டம் நாகர்கோயிலில் உள்ள திருவட்டாறு என்ற ஊரில் உள்ள ரங்கநாதரை தரிசிப்பதில் ஒரு விசேஷம் உள்ளது. சயனக் கோலத்தில் உள்ள ரெங்க நாதரை மூன்று வாசல் வழியாக தரிசிக்க வேண்டும். முதல் வாசலில் சிரசைத் தரிசிக்கலாம். இரண்டாவது வாசலில் சரீர தரிசனம் பெறலாம். மூன்றாவது வாசலில் பாத தரிசனம் காணலாம். கேரளா கோயில் என்பதால் கமகமக்கும் அரைத்த சந்தனம் பிரசாதமாகக் கொடுக்கிறார்கள். இங்கு உள்ள ஆறு வட்டமாக உள்ளதால் இவ்வூருக்கு திருவட்டாறு என்று பெயர்!

- எஸ். உஷா, மதுரை - 20





கரூர் அருகே புலியூர் என்ற கிராமத்தில் உள்ள சிவன் கோயிலில் சிவபெருமானின் திருநாமம் வியாக்ரபுரீஸ்வரர். அந்த ஊர் ஒரு காலத்தில் காடாக இருந்தபோது புலிகளின் நடமாட்டம் அதிகமாக இருந்ததாம். அப்போது ஒரு புலி, சிவலிங்கத்தை ஆரத் தழுவிக் கொண்டு பூஜை செய்து வந்ததாம். அதன் நகங்கள் அந்த லிங்கத்தின் மீது இன்றும் 3,4 வரிக் கீறல்களாகக் காணப்படுகின்றன. அதன் பக்தியை மெச்சி, புலிக்குக் காட்சி கொடுத்தார் என்றும் அன்று முதல் அந்தச் சிவனுக்கு வியாக்ரபுரீஸ்வரர் என்று பெயர் வந்ததாகவும் கூறுகிறார்கள். வியாக்ரம் என்றால் புலி என்று அர்த்தம்.

*- ராஜி பார்த்தசாரதி, திருச்சி - 21*



50 Supplement to Mangayar Malar July 2010



கரூர் அருகே புலியூர் என்ற கிராமத்தில் உள்ள சிவன் கோயிலில் சிவபெருமானின் திருநாமம் வியாக்ரபுரீஸ்வரர். அந்த ஊர் ஒரு காலத்தில் காடாக இருந்தபோது புலிகளின் நடமாட்டம் அதிகமாக இருந்ததாம். அப்போது ஒரு புலி, சிவலிங்கத்தை ஆரத் தழுவிக் கொண்டு பூஜை செய்து வந்ததாம். அதன் நகங்கள் அந்த லிங்கத்தின் மீது இன்றும் 3,4 வரிக் கீறல்களாகக் காணப்படுகின்றன. அதன் பக்தியை மெச்சி, புலிக்குக் காட்சி கொடுத்தார் என்றும் அன்று முதல் அந்தச் சிவனுக்கு வியாக்ரபுரீஸ்வரர் என்று பெயர் வந்ததாகவும் கூறுகிறார்கள். வியாக்ரம் என்றால் புலி என்று அர்த்தம்.

*- ராஜி பார்த்தசாரதி, திருச்சி - 21*

என்றும் உங்களுடன்
மங்கையர் மலர் தரத்திலும் நம்பர் 1 மகளிர் மாத இதழ்!

சென்னையில் உள்ள திருவொற்றிசுவரர்-வடிவுடையம்மன் ஆலயம் 27 நட்சத்திரங்களுக்குரிய நட்சத்திர லிங்க ஆலயம் ஆகும். ஜன்ம நட்சத்திரத்தில் இத் திருத்தலத்தில் அர்ச்சனை செய்தால் நன்மை கிட்டும். உரு, அரு, அருஉரு என்ற மூன்று நிலைகளில் இங்கு சிவ பெருமான் காட்சி தருகிறார்.

- ர.கௌரி அய்யப்பாராஜ், உடுமலைப்பேட்டை

கோயில் சிறப்பு 64!

Supplement to Mangayar Malar July 2010 51

சென்னையில் உள்ள திருவொற்றிசுவரர்-வடிவுடையம்மன் ஆலயம் 27 நட்சத்திரங்களுக்குரிய நட்சத்திர லிங்க ஆலயம் ஆகும். ஜன்ம நட்சத்திரத்தில் இத் திருத்தலத்தில் அர்ச்சனை செய்தால் நன்மை கிட்டும். உரு, அரு, அருஉரு என்ற மூன்று நிலைகளில் இங்கு சிவ பெருமான் காட்சி தருகிறார்.

- ர.கௌரி அய்யப்பாராஜ், உடுமலைப்பேட்டை

கோயில் சிறப்பு 64!



குளித்தலையிலிருந்து சில கிலோ மீட்டர் தூரத்தில் உள்ளது புகழ் பெற்ற ஐயர் மலை. இங்கு புகழ் பெற்ற கருப்பச்சாமி கோயில் உள்ளது. இக் கோயிலின் பூசாரி கூறும் மந்திரங்களை நாம் திருப்பிக் கூறிவிட்டு அருகில் இருக்கும் கதவில் ஒரு பூட்டைப் பூட்டி, சாவியை அங்கிருக்கும் கிணற்றில் எறிந்து விட வேண்டும். இதுபோல செய்ய நாம் நினைத்த காரியம் நடப்பதுடன் திருஷ்டியும் கழிந்துவிடுகிறது. அதற்கு அடையாளமாய் கோயில் கதவில் ஆயிரக்கணக்கான பூட்டுகள் தொங்குகின்றன.

- எஸ். மங்கை,
குளித்தலை



52 Supplement to Mangayar Malar July 2010



குளித்தலையிலிருந்து சில கிலோ மீட்டர் தூரத்தில் உள்ளது புகழ் பெற்ற ஐயர் மலை. இங்கு புகழ் பெற்ற கருப்பச்சாமி கோயில் உள்ளது. இக் கோயிலின் பூசாரி கூறும் மந்திரங்களை நாம் திருப்பிக் கூறிவிட்டு அருகில் இருக்கும் கதவில் ஒரு பூட்டைப் பூட்டி, சாவியை அங்கிருக்கும் கிணற்றில் எறிந்து விட வேண்டும். இதுபோல செய்ய நாம் நினைத்த காரியம் நடப்பதுடன் திருஷ்டியும் கழிந்துவிடுகிறது. அதற்கு அடையாளமாய் கோயில் கதவில் ஆயிரக்கணக்கான பூட்டுகள் தொங்குகின்றன.

- எஸ். மங்கை,
குளித்தலை

என்றும் உங்களுடன்
மங்கையர் மலர் தரத்திலும் நம்பர் 1 மகளிர் மாத இதழ்!

திருநெல்வேலி வண்ணார்பேட்டை அருகில் எட்டெழுத்துப் பெருமாள் ஓம் நமோ நாராயணா கோயில் உள்ளது. இங்கே அன்னதானம் நடந்துகொண்டே இருக்கிறது. சனிக்கிழமையன்று திருப்பதி வெங்கடாசலபதி கோயில் போன்று கூட்டம். இங்குள்ள விநாயகர் மற்றும் அனுமன் சிறப்புக்குரியவர்கள். துளசி மாலை, அருகம்புல் மாலை, வெற்றிலை மாலை வாங்கிச் சாற்ற, நினைத்தது நடக்கிறது. உண்டியல் கிடையாது. காணிக்கை வாங்குவதில்லை!

-ராஜேஷ், சாத்தூர்




Supplement to Mangayar Malar July 2010 53

திருநெல்வேலி வண்ணார்பேட்டை அருகில் எட்டெழுத்துப் பெருமாள் ஓம் நமோ நாராயணா கோயில் உள்ளது. இங்கே அன்னதானம் நடந்துகொண்டே இருக்கிறது. சனிக்கிழமையன்று திருப்பதி வெங்கடாசலபதி கோயில் போன்று கூட்டம். இங்குள்ள விநாயகர் மற்றும் அனுமன் சிறப்புக்குரியவர்கள். துளசி மாலை, அருகம்புல் மாலை, வெற்றிலை மாலை வாங்கிச் சாற்ற, நினைத்தது நடக்கிறது. உண்டியல் கிடையாது. காணிக்கை வாங்குவதில்லை!

-ராஜேஷ், சாத்தூர்

கோயில்
சிறப்பு 64!



கோயிலுக்குள் வெடி வைக்கலாமா? தாராளமாக! குமரி மாவட்டத்தில் உள்ளது பிரபலமான குமார கோயில். இந்த முருகன் கோயிலில் பக்தர்கள் தங்கள் பிரச்னைகள் தீர்ந்தால் வெடி வழிபாடு செய்வதாக நேர்ந்துகொள்வது சகஜம். அவரவர் விருப்பப்படி 9,11,7 வெடி என சௌகரியம்போல கோயில் வாசலில் வெடி வெடிப்பார்கள். இதற்கென்றே வெடி வைப்பவர்கள் கோயில் வாசலிலேயே இருப்பார்கள்.

- எஸ். பட்டம்மா, ஸ்ரீரங்கம்



54 Supplement to Mangayar Malar July 2010



கோயிலுக்குள் வெடி வைக்கலாமா? தாராளமாக! குமரி மாவட்டத்தில் உள்ளது பிரபலமான குமார கோயில். இந்த முருகன் கோயிலில் பக்தர்கள் தங்கள் பிரச்னைகள் தீர்ந்தால் வெடி வழிபாடு செய்வதாக நேர்ந்துகொள்வது சகஜம். அவரவர் விருப்பப்படி 9,11,7 வெடி என சௌகரியம்போல கோயில் வாசலில் வெடி வெடிப்பார்கள். இதற்கென்றே வெடி வைப்பவர்கள் கோயில் வாசலிலேயே இருப்பார்கள்.

- எஸ். பட்டம்மா, ஸ்ரீரங்கம்

என்றும் உங்களுடன்
மங்கையர் மலர் தரத்திலும் நம்பர் 1 மகளிர் மாத இதழ்!

மங்களூரிலிருந்து 25 மைல் தூரத்தில் அமைந்துள்ள கடில் நகரில் துர்க்காதேவி லிங்க வடிவில் காட்சி தருகின்றாள். அபிஷேகக் காலத்தில் மட்டுமே லிங்க ரூபிணியாகக் காட்சி தருகின்றாள். ஏனைய நேரங்களில் துர்க்கை, கவசத்துடன் காட்சியளிப்பாள். பண்டாசுரனை வதம் செய்த தலமிது.

- நெ.இராமன், சென்னை - 74



# கோயில் சிறப்பு 64!

Supplement to Mangayar Malar July 2010 55

மங்களூரிலிருந்து 25 மைல் தூரத்தில் அமைந்துள்ள கடில் நகரில் துர்க்காதேவி லிங்க வடிவில் காட்சி தருகின்றாள். அபிஷேகக் காலத்தில் மட்டுமே லிங்க ரூபிணியாகக் காட்சி தருகின்றாள். ஏனைய நேரங்களில் துர்க்கை, கவசத்துடன் காட்சியளிப்பாள். பண்டாசுரனை வதம் செய்த தலமிது.

- நெ.இராமன், சென்னை - 74



கோயில் சிறப்பு 64!

திருச்சிக்கு அருகிலுள்ள திருவெள்ளறையில் கோயிலுக்குச் செல்ல இரண்டு வாசல்கள் உள்ளன. தை மாதம் முதல் ஆனி மாதம் வரை உத்தராயண வாசம், ஆடி முதல் மார்கழி வரை தக்ஷிணாயண வாசலும் திறந்திருக்கும். இங்கு உள்ளே செல்ல முதலில் 18 படிகளும் (கீதையின் 18 அத்தியாயங்கள்), பிறகு 4 படிகளும் (4 வேதங்கள்), அதன்பிறகு பஞ்ச பூதங்களைக் குறிக்கும் வகையில் 5 படிகளும், அதையும் தாண்டி 'ஓம்நமோ நாராயணா' என்ற மந்திரத்துக்கான 8 படிகளும், காயத்ரி மந்திரத்தைக் குறிக்கும் வகையில் 24 படிகளும் அமைக்கப் பட்டுள்ளன. இங்கு ஸ்வஸ்திக் வடிவக் குளம் ஒன்று உள்ளது. ஒரு துறையில் குளிப்பவர்களை, மறு கரையில் குளிப்பவர்கள் பார்க்க முடியாத வண்ணம் அமைக்கப்பட்டிருப்பதால் 'மாமியார் - மாட்டுப்பெண்' குளம் என வழங்கப்படுகிறது.



- கே. சுவர்ணா, தஞ்சாவூர் - 7



56 Supplement to Mangayar Malar July 2010

திருச்சிக்கு அருகிலுள்ள திருவெள்ளறையில் கோயிலுக்குச் செல்ல இரண்டு வாசல்கள் உள்ளன. தை மாதம் முதல் ஆனி மாதம் வரை உத்தராயண வாசம், ஆடி முதல் மார்கழி வரை தக்ஷிணாயண வாசலும் திறந்திருக்கும். இங்கு உள்ளே செல்ல முதலில் 18 படிகளும் (கீதையின் 18 அத்தியாயங்கள்), பிறகு 4 படிகளும் (4 வேதங்கள்), அதன்பிறகு பஞ்ச பூதங்களைக் குறிக்கும் வகையில் 5 படிகளும், அதையும் தாண்டி 'ஓம்நமோ நாராயணா' என்ற மந்திரத்துக்கான 8 படிகளும், காயத்ரி மந்திரத்தைக் குறிக்கும் வகையில் 24 படிகளும் அமைக்கப் பட்டுள்ளன. இங்கு ஸ்வஸ்திக் வடிவக் குளம் ஒன்று உள்ளது. ஒரு துறையில் குளிப்பவர்களை, மறு கரையில் குளிப்பவர்கள் பார்க்க முடியாத வண்ணம் அமைக்கப்பட்டிருப்பதால் 'மாமியார் - மாட்டுப்பெண்' குளம் என வழங்கப்படுகிறது.



- கே. சுவர்ணா, தஞ்சாவூர் - 7

என்றும் உங்களுடன்
மங்கையர் மலர் தரத்திலும் நம்பர் 1 மகளிர் மாத இதழ்!

எங்கள் ஊர் செல்லாண்டி அம்மன் மிகவும் சக்தி வாய்ந்த தெய்வம். செல்லாண்டி அம்மனுக்கு தண்டல் இடுகிறேன் என்று வேண்டிக்கொண்டால் எத்தகைய துன்பம் நேரிடினும் நிவர்த்தி ஆகும். கார்த்திகை மாதம் பொங்கல் இடும் திருவிழா அன்று கோயில் துவஜஸ்தம்பத்தின் மீது புதுப் பானையில் தீபம் ஏற்றப்படும். வேண்டுதல் உள்ள பக்தர்கள் தூய வெண்ணிற ஆடை அணிந்து கோயிலைச் சுற்றி விழுந்து, விழுந்து கும்பிட்டு வலம் வருவார்கள். சுமங்கலிப் பெண்கள்கூட தூய வெண்ணிற புடைவை, ஜாக்கெட் அணிந்து பயபக்தியுடன் பிரார்த்தனையை நிறைவேற்றுகின்றனர்.

- கனகம் பொன்னுசாமி,
பெருந்துறை




Supplement to Mangayar Malar July 2010 57

எங்கள் ஊர் செல்லாண்டி அம்மன் மிகவும் சக்தி வாய்ந்த தெய்வம். செல்லாண்டி அம்மனுக்கு தண்டல் இடுகிறேன் என்று வேண்டிக்கொண்டால் எத்தகைய துன்பம் நேரிடினும் நிவர்த்தி ஆகும். கார்த்திகை மாதம் பொங்கல் இடும் திருவிழா அன்று கோயில் துவஜஸ்தம்பத்தின் மீது புதுப் பானையில் தீபம் ஏற்றப்படும். வேண்டுதல் உள்ள பக்தர்கள் தூய வெண்ணிற ஆடை அணிந்து கோயிலைச் சுற்றி விழுந்து, விழுந்து கும்பிட்டு வலம் வருவார்கள். சுமங்கலிப் பெண்கள்கூட தூய வெண்ணிற புடைவை, ஜாக்கெட் அணிந்து பயபக்தியுடன் பிரார்த்தனையை நிறைவேற்றுகின்றனர்.

- கனகம் பொன்னுசாமி,
பெருந்துறை






திருச்சி, கீழபுலிவார்ரோட்டில் 'பூலோகநாத சுவாமி' கோயில் உள்ளது. இது வாஸ்து பரிகார ஸ்தலமாகும். ஏற்கெனவே வாஸ்து பார்க்காமல் வீடு கட்டியவர்கள் அல்லது வாஸ்து குறைகளை நீக்க முடியாதவர்கள் இக்கோயிலுக்கு வந்து வாஸ்து பூஜையில் பணம் கட்டி கலந்து கொண்டால், வாஸ்து குறைகள் அனைத்தும் நீங்கி, வீடு சுபிட்சமாகும்.

- ஆர். சரஸ்வதி ராஜேந்திரன்,
பூனாம்பாளையம்



58 Supplement to Mangayar Malar July 2010




திருச்சி, கீழபுலிவார்ரோட்டில் 'பூலோகநாத சுவாமி' கோயில் உள்ளது. இது வாஸ்து பரிகார ஸ்தலமாகும். ஏற்கெனவே வாஸ்து பார்க்காமல் வீடு கட்டியவர்கள் அல்லது வாஸ்து குறைகளை நீக்க முடியாதவர்கள் இக்கோயிலுக்கு வந்து வாஸ்து பூஜையில் பணம் கட்டி கலந்து கொண்டால், வாஸ்து குறைகள் அனைத்தும் நீங்கி, வீடு சுபிட்சமாகும்.

- ஆர். சரஸ்வதி ராஜேந்திரன்,
பூனாம்பாளையம்

என்றும் உங்களுடன்
மங்கையர் மலர் தரத்திலும் நம்பர் 1 மகளிர் மாத இதழ்!

விழுப்புரம் மாவட்டத்தில் உள்ள கோலியனூரில் அருள்மிகு பெரிய நாயகி உடனுறை ஸ்ரீ வாலீஸ்வரர் என்ற பழமை வாய்ந்த ஆலயம் உள்ளது. இவ்வாலயத்தில் உள்ள சனி பகவானுக்கு மாதா மாதம் ரோஹினி நட்சத்திர ஹோமமும் சனீஸ்வர நவகிரக சாந்தி ஹோமமும் மிகவும் விசேஷமாக நடைபெறுகிறது. சனி தோஷத்தால் பாதிக்கப்பட்டவர்கள், இவ்வாலயத்தில் தொடர்ந்து ஒன்பது வாரம் வழிபாடு செய்தால் இன்னல்கள் மறையும், வாழ்க்கை வளம் பெறும் என்பது நம்பிக்கை.

- சுமதி கோபால், முத்துதோப்பு




Supplement to Mangayar Malar July 2010 59

விழுப்புரம் மாவட்டத்தில் உள்ள கோலியனூரில் அருள்மிகு பெரிய நாயகி உடனுறை ஸ்ரீ வாலீஸ்வரர் என்ற பழமை வாய்ந்த ஆலயம் உள்ளது. இவ்வாலயத்தில் உள்ள சனி பகவானுக்கு மாதா மாதம் ரோஹினி நட்சத்திர ஹோமமும் சனீஸ்வர நவகிரக சாந்தி ஹோமமும் மிகவும் விசேஷமாக நடைபெறுகிறது. சனி தோஷத்தால் பாதிக்கப்பட்டவர்கள், இவ்வாலயத்தில் தொடர்ந்து ஒன்பது வாரம் வழிபாடு செய்தால் இன்னல்கள் மறையும், வாழ்க்கை வளம் பெறும் என்பது நம்பிக்கை.

- சுமதி கோபால், முத்துதோப்பு



தஞ்சை மாவட்டம் பாபநாசம் அருகில் உள்ள வங்காரம்பேட்டை, இவ்வூர் தஞ்சை, குடந்தை செல்லும் சாலையில் உள்ளது. இங்கு ராமலிங்க திருக்கோயில் உள்ளது.




இங்கு ஒரே இடத்தில் 108 லிங்கங்களை பார்த்து தரிசனம் செய்யலாம். இவ்வாலயத்தை, 108முறை வலம் வந்தால்தான் செய்த பாவங்கள் யாவும் நீங்கி புண்ணியம் கிடைக்கும் என்பது ஐதிகம். மகாசிவராத்திரி தினத்தில் நூற்றுக்கணக்கான பக்தர்கள் வலம் வருவார்கள்.

- சீதா முருகானந்தம்,
திருவைகாவூர்



60 Supplement to Mangayar Malar July 2010

தஞ்சை மாவட்டம் பாபநாசம் அருகில் உள்ள வங்காரம்பேட்டை, இவ்வூர் தஞ்சை, குடந்தை செல்லும் சாலையில் உள்ளது. இங்கு ராமலிங்க திருக்கோயில் உள்ளது.




இங்கு ஒரே இடத்தில் 108 லிங்கங்களை பார்த்து தரிசனம் செய்யலாம். இவ்வாலயத்தை, 108முறை வலம் வந்தால்தான் செய்த பாவங்கள் யாவும் நீங்கி புண்ணியம் கிடைக்கும் என்பது ஐதிகம். மகாசிவராத்திரி தினத்தில் நூற்றுக்கணக்கான பக்தர்கள் வலம் வருவார்கள்.

- சீதா முருகானந்தம்,
திருவைகாவூர்

என்றும் உங்களுடன்
மங்கையர் மலர் தரத்திலும் நம்பர் 1 மகளிர் மாத இதழ்!

தஞ்சாவூர் மாவட்டம் திருக்காட்டுப்பள்ளி அருகே உள்ளது கண்டமங்கலம். இங்குள்ள பெருமாள் கோயிலில் உள்ள ஸஞ்சீவி பக்த ஆஞ்சநேயர் மிகுந்த வரப்பிரசாதி. திருமணம் அமைய, குழந்தை பாக்கியம் உண்டாக மற்றும் அனைத்து பிரார்த்தனைக்கும் இவருக்கு மட்டைத் தேங்காய் கட்டி வழிபட்டு பயன் பெறுகின்றனர்.

- என். கல்யாணராமன்,
திருக்காட்டுபள்ளி




Supplement to Mangayar Malar July 2010 61

தஞ்சாவூர் மாவட்டம் திருக்காட்டுப்பள்ளி அருகே உள்ளது கண்டமங்கலம். இங்குள்ள பெருமாள் கோயிலில் உள்ள ஸஞ்சீவி பக்த ஆஞ்சநேயர் மிகுந்த வரப்பிரசாதி. திருமணம் அமைய, குழந்தை பாக்கியம் உண்டாக மற்றும் அனைத்து பிரார்த்தனைக்கும் இவருக்கு மட்டைத் தேங்காய் கட்டி வழிபட்டு பயன் பெறுகின்றனர்.

- என். கல்யாணராமன்,
திருக்காட்டுபள்ளி



